திருவிசைப்பா மூலமும் உரையும்

திருப்பல்லாண்டு „

பெரியபுராணச் செய்யுட்டிரட்டு „

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவிசைப்பா,

## திருப்பல்லாண்டு,

## பெரியபுராணச் செய்யுட்டிரட்டு

## மூலமும்,

மகாவித்வான்

கா. இராமஸ்வாமி நாயுடு அவர்கள்

இயற்றிய

## உரையும்.



சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.



1909.



விலை

## உள்ளுறை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சூசீபத்திரம்.

## திருவிசைப்பா.

திருச்சிற்றம்பலம்.

## திருவிசைப்பா அருளிச்செய்த ஒன்பது நாயன்மார் திருநாமமும் திருப்பதிக வகையும் பண்ணின் வகையுந் தெரியு மடைவு.

---

செம்பொன்மணி யம்பலத்து நிருத்தனார்க்குத்
திருவிசைப்பா வுரைத்தவர்தந் திருப்பேர்சொல்லிற்
பம்புபுகழ் செறிதிருமா ளிகைமெய்த்தேவர்
பரிவுடைய சேந்தனார் கருவூர்த்தேவர்
நம்பிகா டவர்கோனற் கண்டரா தித்தர்
நன்குயர்வே ணாட்டடிக டிருவாலியமுத
ரம்புவியோர் புகழ்புருடோத் தமர்சேதிராய
ராகவிவ ரொன்பதின்மர் தாமுறைகண்டடைவே. (க)

அடைவுறுமா ளிகைத்தேவர் நான்குசேந்த
ரன்புறுபல் லாண்டொன்றே டிசைப்பாமூன்று
திடமுடைய கருவூரார் பத்துவீறிற்
சிறந்தகா டவரிரண்டு கண்டர்வேணாடர்
படிபுகழொவ் வொன்றுதிரு வாலிநான்கு
பன்னுபுரு டோத்தமனா ரிரண்டுசேதிராய
ருடையதிருக் கடைக்காப்பொன் றாகவிருபத்தொன்
பானேது செய்யுண்மூந் நூற்றறுபதினோடைந்தே. (உ)

ஐந்துடனல் வருமுரைத்த திருக்கடைக்காப்பிற்பண்
ணறையின்மா ளிகைத்தேவர் நான்கிலொன்றுகாந்தார
மூந்துகரு வூரர்பத்தி னிரண்டுபுறநீர்மை
மொழிந்திடுகாந் தாரமொன்று காடவர்கோனிரண்டி
னந்தலில்சா ளரபாணி யொன்றுவேணாட்டடிக
ணவின்றதொன்று புறநீர்மை திருவாலியமுதர்
பந்தமறச் சொன்னவிர ண்டினொன்றுநட்டராகம்
பகர்ந்திடினேன் றிந்தளமற் றெவையும்பஞ்சமமே. (௩)

திருவிசைப்பா : திருப்பல்லாண்டு = சேந்தனார் முதலிய ஒன்பதின்மர் திருவாய்மலர்ந்தருளிய ஒன்பதாந் திருமுறை.

பெரியபுராணச் செய்யுட்டிரட்டு = அருண்மொழித்தேவராகிய ஸ்ரீ சேக்கிழார்சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய பன்னிரண்டாந் திருமுறையென்னும் பெரியபுராணத்தினின்றுந் திரட்டப்பட்டது.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருமாளிகைத்தேவர்

# திருவிசைப்பா

## மூலமும் உரையும்.



### க. கோயில். ஒளிவளர்விளக்கே.

பண்-பஞ்சமம்.

*திருச்சிற்றம்பலம்.*

ஒளிவளர்விளக்கேயுலப்பிலாவொன்றே
 யுணர்வுசூழ்கடந்ததோருணர்வே
தெளிவளர்பளிங்கின்றிரண்மணிக்குன்றே
 சித்தத்துட்டித்திக்குந்தேனே
யளிவளருள்ளத்தானந்தக்கனியே
 யம்பலமாடரங்காக
வெளிவளர்தெய்வக்கூத்துகந்தாயைத்
 தொண்டனேன்விளம்புமாவிளம்பே.

**ப - ரை.** ஒளிவளர் விளக்கே - ஒளிபெருகுகின்ற தீபமே, உல
ப்பு இல்லா - அழிவில்லாத, ஒன்றே - ஒப்பற்ற பொருளே, சூழ் உண
ர்வு - சென்று பற்றுகின்ற அறிவை, கடந்தது - கடந்ததாகிய, ஓர்
உணர்வே - ஒப்பற்ற அறிவே, தெளிவளர் - தூய்மை வளர்கின்ற,
பளிங்கின் - படிகத்தினாலாகிய, திரள் - திரண்ட, மணிகுன்றே -
அழகிய மலையே, சித்தத்துள் - (அன்பரது) மனத்தினுள்ளே, தித்
திக்கும் - இனிக்கின்ற, தேனே - தேனே, அளிவளர் - அன்பு வளர்
கின்ற, உள்ளத்து - (அடியாரது) மனத்திற் கனிந்த, ஆனந்தம் கனி

யே - இன்பவுருவாகிய கனியே, அம்பலம் - பொன்னம்பலத்தை, ஆடு அரங்கு ஆக - நடந சபையாகக்கொண்டு, (அதனிடத்து) வெளி வளர் - (யாவர்க்கும்) வெளிப்படையாய்ப் புலப்படுகிற, தெய்வம் கூத்து - தைவிகமாகிய கூத்தாடுதலை, உகந்தாயை-விரும்பின வுன்னை, தொண்டனேன் - உன் அடிமை யாகிய நான், விளம்புமாறு - புகழ்ந்துரைக்கும் வண்ணம், விளம்பு - நியமித்தருள்வாயாக, எ - று.

வி - ரை இந்நூலாசிரியர் கோயிற்றிரு விசைப்பாவினை முதற்கட்கூறியது ஒப்புயர் வில்லாச் சிவபெருமானது திருப்பதிகளெல்லாவற்றுள்ளும் இத்திருப்பதி சிறந்ததென்பதை விளக்குதற்கென்க. ஒளிவரவரக் குறையும் பிறவிளக்குகளுக்கும் இதற்கும் வியாவர்த்தி (வேற்றுமை) தோன்ற 'ஒளிவளர் விளக்கே' என்றார். உலப்பு - அழிவு, ஒன்று - தனிப்பொருள், இதனை அத்விதீயவஸ்து என்பர் வடநூலார், எதிரிட்டறிய வொண்ணாத அறிவென்பார், 'உணர்வு சூழ்கடந்ததோருணர்வே, என்றார். "உம்பர்க் குணர்வரிதாம் பொருளை" "உணர்ந்தார்க் குணர்வரியோன்" "உம்பராரறியா மறையோன்" "அளவிலையார்க்கு மறிவரியோன்" என்றற்றொடக்கத் தான்றோர் திருவாக்குக்களு மிவ்வாறமைந் திருத்தல்காண்க, இறைவனது திருமேனி செந்நிறம் பொன்னிறம் என்பது தோன்ற "முக்கட்பவளமலை" "பவளமால்வரை, "பொன்னார் மேனி," "பொன்பணைத்தன்னவிறை" "பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமேனி, "பவளத்தழுழச் சேரதியத்தன்" என்றிவ்வாறு பலவிடங்களிலுங் கூறப்ப்பட்டிருக்க, இவர் 'தெளிவளர் பளிங்கின்றிரண் மணிக்குன்றே, என்றது இறைவன்றிரு மேனியில் இயல்பாகவே திருவெண்ணீறு பூத்திருத்தலா னென்க. நாவிற்குத்தித்திக்குந் தேனை வேறுபடுத்தற்கு 'சித்தத்துட்டித்திக்குந் தேனே, என்றார் 'அளிவளருள்ளத்து, என்பதனை ஆநந்தக்கனிக்கு விசேடணமாக்கினுமமையும், அம்பலம் - சபை, அது இங்குப் பொற்சபையைக்குறித்தது, ஆனந்தக்கனி-இன்பத்தைத் தருகிற கனியெனினுமாம், "சேணிற்பொலி செம்பொன் மாளிகைத் தில்லைச் சிற்றம்பலத்து மாணிக்கக் கூத்தன்" "கூம்பலங் கைத்தலத் தன்பரென் பூடுருகக் குனிக்கும், பாம்பலங் காரப் பரன்", "முதுவானவர் த்முடித் தொகைகள், கழியாக்கழற்றில்லைக் கூத்தன்", "உள்ளுமுருகியுரோ மஞ்சிலிர்ப் பவுடையவனுட், கொள்ளுமவரிவொர் கூட்டந்தான் குனிக்கும் புலியூர், "அம்பலத்துக்குழியும் பரேத்து மெங்கூத்தன்" என்றிவ்வாறு பலவிடங்களிலும் இறைவனது அம்பலக் கூத்துப் புகழப்பட்டிருத்தலான், 'அம்பலமாடரங்காக வெளிவளர் தெய்வக் கூத்துகந்தாயை' என்றார். வெளி -

ஒளியுமாம். விளம்புமாறு எனற்பாலது விளம்புமாஎன ஈறு தொகுத்தலாயிற்று. "விளக்கஞ் செய்தலின் விளக்கெனப் படுமே" என்பவாகலின், விளக்கு என்பதற்கு எல்லாப் பொருளுங் கண்ணுக்குப் புலப்படுமாறு செய்வது என்பது பொருள். கூத்து - முதனிலை பெறாத தொழிற் பெயர். விளக்கே, ஒன்றே, உணர்வே, குன்றே, தேனே, கனியே என்பனவிளிகள். பளிங்கு - ஸ்படிகம் என்னும் வடசொற்றிரிபு. ஆனந்தம் - இவ்விடத்து நிரதிசயவின்பத்தைக் குறித்தது. (க)

இடர்கெடுத்தென்னையாண்டுகொண்டென்னு
 ளிருட்பிழம்பறவெறிந்தெழுந்த
சுடர்மணிவிளக்கினுள்ளொளிவிளங்குந்
 தூயநற்சோதியுட்சோதீ
யடல்விடைப்பாகாவம்பலக்கூத்தா
 வயனொடுமாலறியாமைப்
படரொளிபரப்பிப்பரந்துநின்றாயைத்
 தொண்டனேன்பணியுமாபணியே.

**ப - ரை.** இடர்கெடுத்து - துன்பத்தைக் கெடுத்து, என்னை ஆண்டுகொண்டு - என்னை யாட்கொண்டருளி, என்உள் - என்மனத்திலிருந்த, இருள்பிழம்பு - (அஞ்ஞானமாகிய) இருட்கூட்டத்தை, அறஎறிந்து - வேரறவீசி, எழுந்த - உதித்த, சுடர் - ஒளியுள்ள, மணிவிளக்கினுள் - இரத்நதீபத்தினுள்ளே, ஒளிவிளங்கும் - ஒளிவிளங்குகின்ற, தூய - பரிசுத்தமாகிய, நல்சோதியுள் - அழகிய ஒளியுள்ளோ, சோதீ - ஒளியாயிருப்பவனே, அடல் - வெற்றி பொருந்திய, விடைபாகா - இடபவாகனனே, அம்பலக்கூத்தா - பொன்னம் பலத்தில் நடனஞ் செய்பவனே, அயனொடு - பிரமனுடன், மால் - திருமாலும், அறியாமை - அறிய ஒண்ணாமல், படர் - படர்ந்த, ஒளிபரப்பி - ஒளியைவிரித்து, பரந்து நின்றாயை - விரிந்து நின்றவனாகியவுன்னை, தொண்டனேன் - அடியனேன், பணியுமாறு - வணங்கும் வண்ணம், பணி - நியமித்தருள்வாயாக, எ - று.

**வி - ரை.** அற - வேரற. அடல் - கொல்லுதல் எனினுமாம். அயனொடு மாலறியாமைப் படரொளி பரப்பிப் பரந்து நிற்றலாவது, பிரமவிட்டுணுக்கள் தம்முள்ளே மாறுபட்டபோது அவர்களுடைய மாறுபாட்டை யொழிக்கும் பொருட்டு அவ்விருவர்க்கிடையே நெருப்புப் பொருப்பாய் நிற்றல். (உ)

தற்பரம்பொருளேசசிகண்டசிகண்டா
சாமகண்டாவண்டவாணா
நற்பெரும்பொருளாயுரைகலந்துன்னை
யென்னுடைநாவினனவில்வா
னற்பனென்னுள்ளத்தளவிலாவுன்னைத்
தந்தபொன்னம்பலத்தாடீ
கற்பமாயுலகாயல்லையானுயைத்
தொண்டனேன்கருதுமாகருதே.

ப - ரை. தற்பரம்பொருளே - தற்பரம் பொருளே, சசிகண்ட - சந்திரகண்டத்தையணிந்த, சிகண்டா - சடாபாரத்தை யுடையவனே, சாமகண்டா - நீலகண்டத்தை யுடையவனே, அண்டவாணா - சிதாகாயத்தில் வாழ்பவனே, நல் பெரும் பொருளாய் - நல்ல பெரிய பொருளாக, உரைகலந்து - சொற்களைச் சேர்த்து, உன்னை - நின்னை, என்னுடை நாவினுல் - என்னுடைய நாவைக்கொண்டு, நவில்வான்-துதிப்பவனுகிய, அற்பன் என் - அற்பனுகிய என்னுடைய, உள்ளத்து - மனத்தில், அளவிலா உன்னைத் தந்த - அளக்கப்படாத உன்னை இருத்தி யருளின, பொன் அம்பலத்து ஆடீ - பொன்னம்பலத்தில் நிருத்தஞ் செய்பவனே, கற்பமாய் - கற்பகாலங்களாகி, உலகு ஆய் - உலகங்களாகி, அல்லை ஆனுயை - அல்லாதவனுகிய உன்னை, தொண்டனேன் - அடியனேன், கருதுமாறு - நினைக்கும் வண்ணம், கருது - திருவுளம்பற்றி யருள்செய்வாயாக, எ - று.

வி - ரை. சீகண்டன் - நஞ்சுண்டு தேவர்களைக் காத்தமையாலுண்டாகிய அழகையுடைய கண்டத்தையுடையவன், இது குறுகி சிகண்டன் என வந்ததெனினு மமையும். அண்டம் - ஆகாயம், அது இங்கு சிதாகாயமென்னும் பொருளில் வந்தது. தந்த என்னும் பெயரெச்சத்தை முடித்தலால் பொன்னம்பலத்தாடீ என்பதனை ஒருபெயர்ச் சொல்லாகக் கொள்க. கற்பம் - ஊழிகாலம். (ந)

பெருமையிற்சிறுமைபெண்ணொடாணுயென்
பிறப்பிறப்பறுத்தபேரொளியே
கருமையின்வெளியேகயற்கணாளிமவான்
மகளுமையவள்களைகண்ணே
யருமையின்மறைநான்கோலமிட்டரற்று
மப்பனேயம்பலத்தமுதே
பொருமையிற்பலபுக்குருவிநின்றுயைத்
தொண்டனேனுரைக்குமாறுரையே.

ப - ரை. பெருமையின் - பெருமையோடு, சிறுமை-சிறுமையும், பெண்ணொடு - பெண்ணோடு, ஆண் - ஆணும், ஆய்-ஆகி, என் பிறப்பு இறப்பு அறுத்த - என் பிறப்பிறப்புக்களை அறுத்தருளின, பேர் ஒளியே - பெருஞ்சோதியே, கருமையின் - கருமையோடு, வெளியே-ஒளியாயிருப்பவனே, கயல் கண்ணாள் - சேல்மீன்போன்ற கண்களையுடையவளும், இமவான் மகள் - மலையரையன் மகளும்ஆகிய, உமையவள் - உமாதேவியின், களைகண்ணே - ஆதாரமே, அருமையின் - அருமையை யுடைய, மறை நான்கு - நான்கு வேதங்களும், ஓலமிட்டு-முறையிட்டு, அரற்றும் - சத்திக்கிற, அப்பனே - உபகாரசீலனே, அம்பலத்து அமுதே - அம்பலத்திலுள்ள அமிர்தமே, ஒருமையின்-ஒருபொருளோடு, பல புக்கு - பல பொருள்களிலும் புகுந்து, உருவி நின்றாயை-ஊடுருவி நின்ற வுன்னை, தொண்டனேன் - அடியனேன், உரைக்குமாறு - புகழும் வண்ணம், உரை - (ஓர் உபாயத்தைச்) சொல்லியருள்வாயாக, எ - று.

வி - ரை. அருமையின் என்பதற்கு உன்னைக்காண்டலருமையால் எனினுமாம். அம்பலத்தமுதே என்பதற்கு அழகிய கனிகளின் சுவையேயென்றலுமாம். ஒருமை இங்குத் தன்மை குறியாது ஒன்று என்னும் எண்குறித்துவந்தது. (சு)

கோலமேமேலைவான்வர்கோவே
குணங்குறியிறந்ததோர்குணமே
காலமேகங்கைநாயகாவெங்கள்
காலகாலாகாமநாசா
வாலமேயமுதுண்டம்பலஞ்செம்பொற்
கோயில்கொண்டாடவல்லானே
ஞாலமேதமியேனற்றவத்தாயைத்
தொண்டனேனணுகுமாநணுகே.

ப - ரை. கோலமே - அழகே, மேலை வானவர் கோவே - மேன்மையாகிய தேவர்களுக்குத் தலைவனே, குணங்குறி யிறந்தது-குணக்குறிகளைக் கடந்ததாகிய, ஓர் குணமே - ஒப்பற்ற குணமே, காலமே - காலமே, கங்கை நாயகா - கங்காநாயகனே, எங்கள் - எம்முடைய, காலகாலா - காலகாலனே, காமநாசா - காமநாசனே, ஆலமே - நஞ்சினையே, அமுதுண்டு - அமுதாகவுண்டருளி, அம்பலம்-அம்பலத்தை, செம்பொன் கோயில்கொண்டு - செம்பொன்னாற் செய்யப்பட்ட கோயிலாகக்கொண்டு, ஆடவல்லானே-நிருத்தஞ்செய்ய வல்லவனே, ஞா

லகமே - உலகமே, தமியேன் - தமியேனது, நல் தவத்தாயை - நல்ல தவவடிவாகிய வுன்னை, தொண்டனேன்-அடியனேன், நணுகுமாறு - அடையும் வண்ணம், நணுகு - நீ என்னை அடைவாயாக, எ-று.

வி - ரை. மேலை-மேலிடத்துள்ள எனினுமாம். வானவர்-விண்ணுலகத்துள்ளார். வேதியச் சிறுவனுக்காக யமனை யுதைத்தமையால், 'காலகாலா' என்றார். காமநாசன் - மன்மதனை யழித்தவன். (௫)

நீறணிபவளக்குன்றமேநின்ற
  நெற்றிக்கண்ணுடையதோர்நெருப்பே
வேறணிபுவனபோகமேயோக
  வெள்ளமேமேருவில்வீரா
வாறணிசடையெம்மற்புதக்கூத்தா
  வம்பொன்செயம்பலத்தரசே
யேறணிகொடியெம்மீசனேயுன்னைத்
  தொண்டனேனிசையுமாறிசையே.

ப - ரை. நீறு அணி - திருவெண்ணீற்றை யணிந்த, பவளக்குன்றமே - பவளமலையே, நின்ற - நிமிர்ந்துநின்ற, நெற்றிக்கண் உடையது - நெற்றிக்கண்ணை யுடையதாகிய, ஓர் நெருப்பே - ஒப்பற்ற நெருப்புருவமே, வேறு அணி - வெவ்வேறாகிய அழகையுடைய, புவன போகமே - புவனபோகங்களா யிருப்பவனே, யோகவெள்ளமே யோகப்பெருக்கே, மேரு - மேருமலையாகிய, வில் - வில்லையுடைய, வீரா - வீரனே, ஆறு அணி - கங்காநதியை யணிந்த, சடை - சடைமுடியை யுடைய, எம் - எமது, அற்புதக் கூத்தா - அற்புதக் கூத்தையுடையவனே, அம் - அழகாகிய, பொன்செய் அம்பலத்து - பொன்னினாற் செய்யப்பட்ட அம்பலத்திலுள்ள, அரசே-அரசனே, ஏறு அணிகொடி - இடபமாகிய அழகிய கொடியையுடைய, எம் ஈசனே - எமது ஈசனே, உன்னை - நின்னை, தொண்டனேன் - அடியனேன், இசையுமாறு - பொருந்தும் வண்ணம், இசை-நீ மனம்பொருந்தி யருள்வாயாக, எ-று.

வி - ரை. நெருப்புப் பொருப்பாய் நிமிர்ந்தமை கருதி 'நெருப்பே' என்றார். புவனம் - உலகம். போகம்-அவ்வுலகத்தில் நுகரப்படுவனவாகிய சுகாநுபவ முதலியவை. (௬)

தனதனற்றோழாசங்கராசூல
  பாணியேதாணுவேசிவனே
கனகநற்றூணேகற்பகக்கொழுந்தே
  கண்கண்மூன்றுடையதோர்கரும்பே

யனகனேகுமரவிநாயகசனக
வம்பலத்தமரசேகரனே
யுனகழலிணையென்னெஞ்சினுளினிதாத்
தொண்டனேனுகருமாறுகரே.

ப - ரை. தனதன்-குபேரனுக்கு, நல் தோழா-நல்ல தோழனே, சங்கரா - சங்கரனே, சூலபாணியே - சூலபாணியே, தாணுவே - தாணுவே, சிவனே - சிவனே, நல் - அழகாகிய, கனகத்தூணே - பொற்றூணே, கற்பகக்கொழுந்தே - கற்பகக்கொழுந்தே, கண்கள் மூன்று உடையது - மூன்று கண்களையுடையதாகிய, ஓர் கரும்பே - ஒப்பற்ற கரும்பே, அனகனே - பரிசுத்தனே, குமரவிநாயக சனக - முருகனுக்கும் விநாயகனுக்கும் தந்தையே, அம்பலத்து - பொன்னம்பலத்திலுள்ள, அமரசேகரனே-தேவர்களுக்கு சிகாமணியே, உனகழல் இணை - உன்னுடைய இரண்டு திருவடிகளை, என் நெஞ்சினுள் - என்மனத்தினுள்ளே, இனிது ஆ - இனிதாகி யிருக்க, தொண்டனேன் - அடியனேன், நுகருமாறு - அனுபவிக்கும் வண்ணம், நுகர்-நீ என்னை யனுபவித்தருள்வாயாக, எ - று.

வி - ரை. சங்கரன் - ஆன்மாக்களுக்கு இதத்தைச் செய்பவன், தாணு - எக்காலத்துஞ் சலனமில்லாதிருப்பவன், சிவன் - சுபத்தைத் தருபவன், அன்பர்க்கு இனிமையைத் தருவோனாதலால் 'கரும்பே' என்றார். கண்கள் மூன்று - சிவபிரானுக்கு மூன்று கண்களென்றும், கரும்புக்கு மூன்று கணுக்களென்றும் உரைத்துக்கொள்க. (எ)

திறம்பியபிறவிச்சிலதெய்வநெறிக்கே
திகைக்கின்றேன்றனைத்திகையாமே
நிறம்பொன்னுமின்னுநிறைந்தசேவடிக்கீழ்
நிகழ்வித்தநிகரிலாமணியே
யறம்பலதிறங்கண்டருந்தவர்க்கரசா
யாலின்கீழிருந்தவம்பலவா
புறஞ்சமண்புத்தப்பொய்கள்கண்டாயைத்
தொண்டனேன்புணருமாபுணரே.

ப - ரை. திறம்பிய பிறவி - வரம்புகடந்த பிறவிகளையுடைய, சிலதெய்வ நெறிக்கே - அற்ப தேவதைகளின் மார்க்கத்தினின்றே, திகைக்கின்றேன் தன்னை - திகைப்பவனாகிய என்னை, திகையாமே - திகைக்காமல், பொன்னும் மின்னும்-பொன்னினதும் மின்னினதும் ஆகிய, நிறம் நிறைந்த - நிறம் நிரம்பின, சேவடிக்கீழ் - திருவடியின்

கீழ், நிகழ்வித்த - யான் தங்கும்படிசெய்த, நிகர் இல்லா மணியே - நிகரற்ற மாணிக்கமே, அறம் பலதிறம் கண்டு - அறத்தைப் பலவகையாக ஆராய்ந்தறிந்து, அருந்தவர்க்கு - அரிய தவத்தினையுடையார்க்கு, அரசு ஆய் - ஆசாரியனாகி, ஆலின்கீழ் இருந்த - கல்லால மரத்தின்கீழ் எழுந்தருளியிருந்த, அம்பலவா - பொன்னம்பலத்தை யுடையவனே, புறம் - புறமாகிய, சமண்புத்த பொய்கள் கண்டாயை-சமணும் பௌத்தமுமாகிய பொய்ச்சமயங்களை உண்டாக்கின வுன்னை, தொண்டனேன் - அடியனேன், புணருமாறு - சேரும் வண்ணம், புணர் - நீ என்னைச் சேர்வாயாக, எ - று.

வி - ரை. திறம்புதல் - வரம்புகடத்தல், திகைத்தல் - பிரமித்தல், அருந்தவர் என்றது சநகாதியரை, எல்லாச் சமயங்களையு முண்டாக்கினவன் இறைவனேயர்தலால் 'புறஞ்சமண் புத்தப்பொய்கள் கண்டாயை' என்றார். (அ)

தக்கனற்றலையுமெச்சன்வன்றலையுந்
  தாமரைநான்முகன்றலையு
மொக்கவிண்டுருள்வொண்டிருப்புருவ
  நெறித்தருளியவுருத்திரனே
யக்கணிபுலித்தோலாடைமேலாட
  வாடப்பொன்னம்பலத்தாடுஞ்
சொக்கனேயெவர்க்குந்தொடர்வரியாயைத்
  தொண்டனேன்றொடருமாதொடரே.

ப - ரை. தக்கன் - தக்கனது, நல் தலையும் - நல்லதலையும், எச்சன் - எச்சனது, வல்தலையும் - வலியதலையும், தாமரை - தாமரை மலரில் வாழ்கின்ற, நான்முகன் தலையும் - நான்குமுகங்களை யுடையவனாகிய பிரமனது தலையும், ஒக்க - ஒருசேர, விண்டு உருள - அற்றுருளும்படி, ஒள் - ஒள்ளிய, திருப்புருவம் நெறித்தருளிய - அழகாகிய புருவத்தை நெறித்தருளின, உருத்திரனே - உருத்திர மூர்த்தியே, அக்கு - அக்குமாலையானது, புலித்தோல் ஆடை மேல் - புலித்தோலாகிய ஆடையின்மீது, ஆடஆட - மேன்மேலாடும்படி, பொன்னம்பலத்து ஆடும் - பொற்சபையில் நிருத்தஞ்செய்கிற, சொக்கனே-சொக்கனே, எவர்க்கும் - யாவர்க்கும், தொடர்வு அரியாயை-தொடர்தற்கரிதாகிய வுன்னை, தொண்டனேன் - அடியனேன், தொடருமாறு-தொடரும் வண்ணம், தொடர் - நீ யென்னைத் தொடர்ந் தருள்செய்வாயாக, எ - று.

**வி - ரை.** திருப்புருவ நெறித்தருளிய வுருத்திரனே என்றது கோவமிகுதியிற் றோன்றுவது புருவநெறிப்பென்பது தோன்றற்கென்க. சொக்கன் - பரிசுத்தன். (௬)

மடங்கலாய்க்கனகன்மார்புகீண்டானுக்
கருள்புரிவள்ளலேமருளா
ரிடங்கொண்மூப்புரம்வெந்தவியவைதிகத்தே
ரேறியவேறுசேவகனே
யடங்கவல்லரக்கனருட்டிருவரைக்கீ
ழடர்த்தபொன்னம்பலத்தரசே
விடங்கொள்கண்டத்தெம்விடங்கனேயுன்னைத்
தொண்டனேன்விரும்புமாவிரும்பே.

**ப - ரை.** மடங்கல் ஆய் - நரசிங்கமாகி, கனகன்-இரணியனது, மார்பு கீண்டானுக்கு - மார்பைப் பிளந்தவனுக்கு, அருள்புரி - அருள் செய்த, வள்ளலே - உதாரசீலனே, மருளார் - மருட்சியை யுடையவரது, இடம் கொள் - இடத்தைக்கொண்ட, மூப்புரம் வெந்து அவிய - திரிபுரம் வெந்து அழியும்படி, வைதிகத்தேர் ஏறிய - வைதிகத்தேரின்மேலேறின, ஏறு சேவகனே - இடபவாகநத்தை யுடையவீரனே, வல் அரக்கன் - வலிய அரக்கனாகிய ராவணன், அடங்க - ஒடுங்கும்படி, அருள் - அருளினால், திருவரைக்கீழ் - அழகிய கயிலைமலையின் கீழே, அடர்த்த - அழுத்தின, பொன்னம்பலத்து அரசே - பொன்னம்பலத்திலுள்ள அரசனே, விடம்கொள் கண்டத்து - விஷத்தை யணிந்த கண்டத்தையுடைய, எம் விடங்கனே - எமது அழகனே, உன்னை - உன்னை, தொண்டனேன் - அடியனேன், விரும்புமாறு - விரும்பும் வண்ணம், விரும்பு - நீ விரும்புவாயாக, எ - று.

**வி-ரை.** மடங்கல் - சிங்கம், கனகன்மார்பு கீண்டானுக்கு என மேல் வருதலால், நரசிங்கமெனப் பொருள் கூறலாயிற்று. கனகம் - பொன், இதற்கு இரணியம் என்பதோர் பரியாயம். கீண்டான் என்பதற்குப் பகுதி கீள், வைதிகத்தேர் – வேதசம்பந்தமாகியதேர் ()

மறைகளுமமரர்கூட்டமுமாட்டா
தயன்றிருமாலொடுமயங்கி
முறைமுறைமுறையிட்டோர்வரியாயை
மூர்க்கனேன்மொழிந்தபுன்மொழிக
ளறைகழலரன்சீரறிவிலாவெறுமைச்
சிறுமையிற்பொறுக்குமம்பலத்து

ணிறைதருகருணைநிலயமேயுன்னைத்
தொண்டனேனினையுமாநினையே.

ப - ரை. மறைகளும் - வேதங்களும், அமரர் கூட்டமும் - தேவர்கூட்டமும், மாட்டாது - அறியமாட்டாமல், அயன் திருமாலொடு மயங்கி - பிரமவிட்டுணுக்களுடனே மயக்கமடைந்து, முறைமுறை - வரிசை வரிசையாய் நின்று, முறையிட்டு - ஓலமிட்டு, ஓர்வு அரியாயை - அறிதற்கரிய வுன்னை, மூர்க்கனேன் - மூர்க்கனாகிய நான், மொழிந்த - துதித்த, புல்மொழிகள் - அற்பமாகிய சொற்களை, அறை கழல் அரன் - வீரக்கழல் சத்திக்கிற திருவடியை யுடைய சிவபெருமானே, சீர் - உன்சீரை, அறிவு இல்லா - அறிதலில்லாத, வெறுமை - பயனற்ற, சிறுமையின் - சிறியோரைப் பொறுத்தல் போல, பொறுக்கும் - பொறுக்கிற, அம்பலத்துள் - பொன்னம்பலத்துள்ளே, நிறைதரு - நிறைந்த, கருணைநிலயமே - கருணைக்கிருப்பிடமே, உன்னை - உன்னை, தொண்டனேன் - அடியனேன், நினையுமாறு - நினைக்கும் வண்ணம், நினை - நீ திருவுளம்பற்றியருள்வாயாக, எ - று.

வி - ரை. மறைகளுமமரர் கூட்டமும் என்னும் உம்மைகள் எண்ணுப் பொருளிலும் உயர்வு சிறப்புப்பொருளிலும் வந்தன. அயன் அஜன் என்னும் வட சொற்றிரிபு, இதற்குப் பிறவாதவன் என்பது பொருள், இது மங்கலவழக்கு. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## உ. கோயில். உயர்கொடியாடை.

### பண் - பஞ்சமம்.

*திருச்சிற்றம்பலம்.*

உயர்கொடியாடைமிடைபடலத்தி
னுமதூமப்படலத்தின்
பெயர்நெடுமாடத்தகிற்புகைப்படலம்
பெருகியபெரும்பற்றப்புலியூர்ச்
சியரொளிமணிகணிரந்துசேர்கனக
நிறைந்தசிற்றம்பலக்கூத்தா
மயர்வறுமமரர்மகுடந்தோய்மலர்ச்சே
வடிகளென்மனத்துவைத்தருளே.

ப - ரை. உயர் - உயர்ந்த, கொடியாடை - கொடிச்சீலைகள், மிடை - நெருங்கின, படலத்தின் - கூட்டத்தோடும், ஓமதூமப் படலத்தின் - ஓமப்புகைக் கூட்டத்தோடும், பெயர் - பெயர்ந்தசைகிற, நெடுமாடத்து - நெடிய மாடங்களில் புகைக்கப்படுகிற, புகைப்படலம் - புகைக் கூட்டமானது, பெருகிய, - பெருக்கமடைந்திருக்கிற, பெரும்பற்றப் புலியூர் - பெரும்பற்றப் புலியூரில், சியர் ஒளிமணிகள் - சிறந்த ஒளியுள்ள மணிகள், நிரந்து சேர் - வரிசையாய்ச் சேர்ந்த, கனகம் நிறைந்த - பொன்நிரம்பின, சிற்றம்பலக் கூத்தா - சிற்சபையில் கூத்தாடுவோனே, மயர்வு அறும் - மயக்கமற்ற, அமரர் - தேவர்களுடைய, மகுடம் தோய் - முடிகளிற்படுகிற, மலர் - தாமரைமலர் போன்ற, சேவடிகள் - திருவடிகளை, என்மனத்து - என்மனத்தில், வைத்தருள் - வைத்தருள்வாயாக எ - று.

வி - ரை. மிடைதல் - நெருங்கல். இறைவனது திருவடியைத் தேவர்கள் வணங்குந்தோறும் அவர் முடிகள் அத்திருவடியிற் படுதலால், 'மயர்வறுமமரர் மகுடந் தோய்மலர்ச் சேவடி' என்றார். (க)

கருவளர்மேகத்தகடுதோய்மகுடக்
  கனகமாளிகைகலந்தெங்கும்
பெருவளர்முத்தீநான்மறைத்தொழில்சா
  லெழின்மிகுபெரும்பற்றப்புலியூர்த்
திருவளர்தெய்வப்பதிவதிநிதியந்
  திரண்டசிற்றம்பலக்கூத்தா
வுருவளரின்பச்சிலம்பொலியலம்பு
  முன்னடிக்கீழதென்னுயிரே.

ப - ரை. கருவளர் மேகத்து அகடுதோய் - கருமை மிகுந்த மேகத்தின் நடுவே சென்று பொருந்துகிற, மகுடம் - சிகரத்தையுடைய, கனகமாளிகை - பொன்மாளிகைகள், எங்கும் கலந்து - எவ்விடத்தும் கலந்து, பெரு - பெரிய, வளர் - வளர்கின்ற, முத்தீ - முத்தீ, நான்மறை - நான்கு வேதங்கள், (இவற்றின்) தொழில் - தொழிலானது, சால் - மிகுந்த, எழில்மிகு - அழகுமிக்க, பெரும்பற்றப் புலியூர் - பெரும்பற்றப்புலியூரில், திருவளர் தெய்வப்பதி - அழகுவளாநின்ற தெய்வப்பதியாகிய, வதிநிதியம் திரண்ட - பொருந்திய செல்வந்திரண்ட, சிற்றம்பலக் கூத்தா - சிற்சபையில் கூத்தாடுவோனே, என் உயிர் - என் உயிரானது, உருவளர் - அழகுமிகுந்த, இன்பம் - இன்பத்தைத் தருகிற, சிலம்பு ஒலி அலம்பும் - சிலம்புகள் ஒலியைச் செய்கிற, உன் அடிக்கீழது - உன் திருவடியின் கீழதாயிருக்கின்றது, எ - று.

வி - ரை. அகடு - வயிறு, அது இங்குநடு வென்னும் பொருள் குறித்தது, முத்தீ - மூவகையாகிய ஓமாக்கினிகள், அவை ஆகவநீயம், தக்ஷிணாக்கினி, காருக பத்தியம் என்பன, நான்மறை - நான்குவேதங்கள், அவை ருக்யஜுஸ் ஸாமாதர்வணங்கள், முத்தீநான்மறைத்தொழில் என்றது யாகஞ் செய்தலையும் வேதமோதுதலையுங் குறித்தது. (உ)

வரம்பிரிவாளைமிளிர்மடுக்கமலங்
கரும்பொடுமாந்துமேதிகள்சேர்
பரம்பிரிசெந்நெற்கழனிச்செங்கழுநீர்ப்
பழனஞ்சூழ்பெரும்பற்றப்புலியூர்ச்
சிரம்புணர்முடிவானவரடிமுறையா
லிறைஞ்சுசிற்றம்பலக்கூத்தா
நிரந்தரமுனிவர்நினைதிருக்கணைக்கா
னினைந்துநின்றொழிந்ததென்னெஞ்சே.

ப - ரை. வரம்பு இரிவாளை மிளிர் - வரம்புகளின்மேல் துள்ளி விழுகின்ற வாளைமீன்கள் மிக்கிருக்கிற, மடு - மடுக்களிலுள்ள, கமலம்-தாமரைமலர்களை, கரும்பொடு மாந்தும்-கரும்போடு மேய்கின்ற, மேதிகள்சேர் - எருமைகள் சேர்ந்த, பரம்பு இரி - பரம்படித்த, செந்நெற்கழனி - செந்நெல்வயல்களும், செங்கழுநீர் பழனம் - செங்கழுநீர்மலர்களையுடைய வயல்களும், சூழ்-சூழ்ந்த, பெரும்பற்றப்புலியூர் - பெரும்பற்றப் புலியூரில், சிரம்முடி புணர் - சிரங்களில் முடிதரித்த, வானவர்-தேவர்கள், அடி-திருவடியை, முறையால் இறைஞ்சு - விதியோடு வணங்குகிற, சிற்றம்பலக் கூத்தா - சிற்றம்பலக் கூத்தனே, நிரந்தரம் - எப்பொழுதும், முனிவர்நினை - முனிவர் நினைக்கிற, திருக்கணைக்கால் - திருக்கணைக்காலை, என் நெஞ்சு - என் மனமானது, நினைந்து நின்று ஒழிந்தது-நினைந்திருந்தொழிந்தது, எ - று,

வி - ரை. இரிதல் - துள்ளல், மாந்துதல் - மேய்தல். புணர்தல்-பொருந்தல், அடி இறைஞ்சு என இயையும். (ந)

தேர்மலிவிழவிற்குழலொலிதெருவிற்
கூத்தொலியேத்தொலியோத்தின்
பேரொலிபரந்துகடலொலிமலியப்
பொலிதருபெரும்பற்றப்புலியூர்ச்
சீர்நிலவிலயத்திருநடத்தியல்பிற்
றிகழ்ந்தசிற்றம்பலக்கூத்தா
வார்மலிமுலையாள்வருடியதிரண்மா
மணிக்குறங்கடைந்ததென்மதியே.

ப - ரை. தேர்மலி விழவில்-தேரோடுகிற திருவிழாவில் ஊதப்படுகிற, குழல் ஒலி - குழலோசையும், தெருவில் - தெருக்களில் ஆடுகிற, கூத்து ஒலி - கூத்தாட்டத்திேைசையும், ஏத்து ஒலி-(அன்பர்) துதிக்கிற ஓசையும், ஒத்தின் பேர் ஒலி-வேதாத்தியயநத்தின் பேரோசையும், பரந்து - வியாபித்து, கடல் ஒலி மலிய - கடலோசையினுமிக, பொலிதரு - விளங்குகிற, பெரும்பற்றப்புலியூர் - பெரும்பற்றப்புலியூரில், சீர் நிலவு-சிறப்புநிலைபெற்ற, இலயம்-லயையோடு கூடின, திருநடத்து இயல்பின் - திருநடநத்தின் இயற்கையால், திகழ்ந்த - விளங்குகிற, சிற்றம்பலக்கூத்த - சிற்றம்பலக்கூத்தனே, வார்மலிமுலையாள் - கச்சணிந்த தனங்களையுடையவளாகிய உமாதேவி யானவள், வருடிய - வருடப்பெற்ற, திரள் - திரண்ட, மா - பெரிய, மணிகுறங்கு - அழகிய தொடையை, என்மதி அடைந்தது - என்மனமானது சேர்ந்தது—, எ - று.

வி - ரை. ஒத்து - வேதம், மலிதல் - மிகுதல், பொலிதரு ஒரு சொல், இதற்குப் பொலிதாஎன்பது பகுதி, நடம் - நடநம், வருடல்-தைவரல், பிடித்தல் எனினுமாம். (ச)

நிறைதழைவாழைநிழற்கொடிநெடுந்தெங்
   கிளங்கமுகுளங்கொணீள்பலமாப்
பிறைதவழ்பொழில்சூழ்கிடங்கிடைப்பதண
   முதுமதிற்பெரும்பற்றப்புலியூர்ச்
சிறைகொணீர்த்தரளத்திரள்கொணித்திலத்த
   செம்பொற்சிற்றம்பலக்கூத்த
பொறையணிநிதம்பப்புலியதளாடைக்
   கச்சநூல்புகுந்ததென்புகலே.

ப - ரை. நிறைதழைவாழை - நிறைந்து தழைத்த வாழைமரங்களும், நிழல்கொடி - ஒளியையுடைய கொடிகளும், நெடுதெங்கு - நெடியதென்ன மரங்களும், இளங்கமுகு - இளங்கமுக மரங்களும், உள்ளம் கொள்நீள் பலம் - மனத்தைக் கவர்கின்ற பெரிய பழங்களும், மாபிறைதவழ் பொழில் - அழகிய பிறைதவழ்கிற சோலைகளும், சூழ்-சூழ்ந்த, கிடங்கு இடைபதணம் - அகழியினிடையே யுள்ள உள்மேடைகளையுடைய, முதுமதில் - பெரிய மதில் சூழ்ந்த, பெரும்பற்றப்புலியூர் - பெரும்பற்றப்புலியூரில், சிறைகொள் - காவலைக்கொண்ட, நீர் - நீரிலுள்ள, தரளத்திரள்கொள் - அசைவையுடைய திரட்சியைக்கொண்ட - நித்திலத்த செம்பொன் - முத்துக்களை யுடையதாய் செம்பொன்னலியன்ற, சிற்றம்பலக் கூத்த - சிற்றம்பலக் கூத்தனே,

பொறைஅணி - பாரத்தையுடைய, நிதம்பம் - அரையிலுடுத்த, புலி ஆதள் - புலித்தோலாகிய, ஆடை - ஆடையோடு, கச்சுநூல் - நூற் கச்சையும், புகுந்தது - என்னுள்ளே நுழைந்ததற்குக் காரணம், என்-யாது, புகல் - சொல்வாயாக—, எ - று.

வி - ரை. நிறைதலழ யென்னு மிரண்டும் வாழையை விசேடித் தமையால் மிகத் தழைத்த வாழையெனப் பொருள்படும். நிழல் - ஒளி, பலம் - பழம், பிறை - சந்திரன். தாளம் - அசைவு, நித்திலம் - முத்து. (ரு)

அதுமதியிதுவென்றலந்தலைநூல்கற்
றழைப்பொழிந்தருமறையறிந்து
பிதுமதிவழிநின்றொழிவிலாவேள்விப்
பெரியவர்பெருக்பற்றப்புலியூர்ச்
செதுமதிச்சமணுந்தேரருஞ்சேராச்
செல்வச்சிற்றம்பலக்கூத்த
மதுமதிவெள்ளத்திருவயிற்றுந்தி
வளைப்புண்டென்னுண்மகிழ்ந்ததுவே.

ப - ரை. அது இது மதியென்று - அதுவோ இதுவோ அறிவைத்தருவதென்று, அலந்துஅலை-வருந்தி யலைதற்கேதுவாகிய, நூல் கற்று-நூல்களைக்கற்று, அழைப்பு ஒழிந்து - கூவுதலொழிந்து, அருமறை அறிந்து - அரியவேதத்தை யுணர்ந்து, பிதுமதி வழிநின்று - மநுநூலின் நெறியினின்று, ஒழிவு இல்லா, நீங்குதலில்லாத, வேள்வி பெரியவர் - யாகங்களையுடைய பெரியோர் வாழ்கின்ற, பெரும்பற்றப் புலியூர்-பெரும்பற்றப்புலியூரில், செதுமதி சமணும் - தாழ்ந்த அறிவினையுடைய சமணர்களும், தேரரும் - தேரர்களும், சேரா - சேராத, செல்வம் - செல்வப் பெருக்கையுடைய, சிற்றம்பலக்கூத்த - சிற்றம்பலத்தில் கூத்தாடுவோனே, மது மதிவெள்ளம்-தேன்போலு மினிய அறிவின்பெருக்கைத் தருகிற, திருவயிற்று உந்தி - திருவயிற்றுத் திருநாபியால், வளைப்புண்டு - வளைக்கப்பட்டு, என் உள் மகிழ்ந்தது - என் மனமானது மகிழ்ந்தது—,எ - று.

வி - ரை. மதி - அறிவு, அது இங்கு அறிவைத் தருவது என்னும் பொருளது, அலந்தலைநூல் என்றமையால் பயனற்ற நூலென்றதாயிற்று, பிது - பிதா, மனிதர்க்கு மூதாதையாகியமநு, இவன் வழியிலுண்டாகையால் மக்களுக்கு மநுடர், மாநுடர், மனிதர், மாநவர் முதலிய பெயர்கள் வழங்கும். (சு)

பொருவரைப்புயத்தின்மீமிசைப்புலித்தோல்
பொடியணிபூணநூலகலம்
பெருவரைபுரைதிண்டோளுடன்காணப்
பெற்றவர்பெரும்பற்றப்புலியூர்த்
திருமருவுதரத்தார்திசைமிடைப்ப
நடஞ்செய்சிற்றம்பலக்கூத்த
வுருமருவுதரத்தனிவடந்தொடர்ந்து
கிடந்ததென்னுணர்வுணர்ந்துணர்ந்தே.

**ப - ரை.** பொரு - போர் செய்தற்குரிய, வரை - மலைபோன்ற, புயத்தின் மீமிசை - தோள்களின் மீது, புலித்தோல் - புலித்தோலையும், பொடி அணி - வெண்பொடி அணிந்த, பூணநூல் அகலம் - பூணூலையணிந்த திருமார்பையும், பெருவரை புரை - பெரியமலையை நிகர்த்த, திண்தோளுடன் காணப்பெற்றவர் - வலிய தோள்களோடு காணப்பெற்றவர் வாழ்கின்ற, பெரும்பற்றப்புலியூர் - பெரும்பற்றப்புலியூரில், திரு மருவு - அழகு பொருந்திய, உதரத்தார் - உதரமாலை, திசை மிடைப்ப - திக்குகளைத் தடுக்கும்படி, நடம் செய் - திருநிருத்தஞ்செய்கின்ற, சிற்றம்பலக் கூத்த - சிற்றம்பலக் கூத்தனே, என் உணர்வு - என்னறிவானது, உணர்ந்து உணர்ந்து - அறிந்தறிந்து, உருமருவு - அழகுபொருந்திய, தனி உதரவடம் - ஒப்பற்ற உதரபந்தனத்தை, தொடர்ந்து கிடந்தது - தொடராநின்று கிடந்தது—, எ-று.

**வி - ரை.** மீமிசை - ஒரு பொருட் பன்மொழி யடுக்கு, உதரபந்தநம் - புருஷர் அரைப்பட்டிகை. (எ)

கணியெரிவிசிறுகரந்துடிவிடவாய்க்
கங்கணஞ்செங்கைமற்றபயம்
பிணிகெடவிவைகண்டுன்பெருநடத்திற்
பிரிவிலார்பெரும்பற்றப்புலியூர்த்
திணிமணிநீலகண்டத்தென்னமுதே
சீர்கொள்சிற்றம்பலக்கூத்த
வணிமணிமுறுவற்பவளவாய்ச்செய்ய
சோதியுளடங்கிற்றென்னறிவே.

**ப-ரை.** கணிஎரிவிசிறு-மழுவானது நெருப்பை வீசுகிற, கரம் - ஒருகையில், துடி - உடுக்கையும், விடவாய் - விடத்தையுடைய வாயினைக்கொண்ட பாம்பாகிய, கங்கணம் - கங்கணமணிந்த, மற்ற செங்

கை - மற்றொரு செவந்தகையில், அபயம் - அபயமும், (ஆகிய)இவை- இவற்றை, பிணிகெடகண்டு - தமது துன்ப மொழியத் தரிசித்து, உன் பெருநடத்தில் - உனது பெரிய திருநடநத்தினின்றும், பிரிவிலார் - நீங்காதவர்கள் வாழ்கின்ற, பெரும்பற்றப்புலியூர் பெரும்பற்றப்புலியூரிலெழுந்தருளின, திணிமணி நீலகண்டத்து - செறிந்தநீலமணிபோலுங் கண்டத்தையுடைய, என் அமுதே - என் அமிர்தமே, சீர்கொள் - சிறப்பைக் கொண்ட, சிற்றம்பலக் கூத்த - சிற்றம்பலக் கூத்தனே, அணிமணி முறுவல் - அழகிய முத்துப்போலும் பல்லும், பவளவாய் - பவளம் போலும் வாயும் ஆகிய இவற்றின், செய்ய சோதியுள் - செவ்வொளியினுள்ளே, என் அறிவு அடங்கிற்று - என் அறிவானது ஒடுங்கிற்று—, எ - று.

**வி-ரை.** கணிச்சிகணியென விகாரமாயிற்று, அபயம் செங்கை- அஞ்சலென் றமைக்குங்கை. (அ)

திருநெடுமாலிந்திரனயன்வானோர்
திருக்கடைக்காவலினெருக்கிப்
பெருமுடிமோதியுகுமணிமுன்றிற்
பிறங்கியபெரும்பற்றப்புலியூர்ச்
செருநெடுமேருவில்லின்முப்புரந்தீ
விரித்தசிற்றம்பலக்கூத்த
கருவடிகுழைக்காதமலச்செங்கமல
மலர்முகங்கலந்ததென்கருத்தே.

**ப-ரை.** திருநெடுமால்-திரு நெடுமாலும், இந்திரன்-இந்திரனும், அயன் - பிரமனும், வானோர் - தேவர்களும், திருக்கடைக் காவலில் - திருக்கடைக்காப்பில், நெருக்கி-நெருக்கப்பட்டு, பெருமுடி மோதி - பெரிய மகுடங்கள் ஒன்றோ டொன்று தாக்கி, உகும் - (அவற்றினின்றும்) சிந்துகின்ற, மணி - மணிகளையுடைய, முன்றில் - முற்றங்களால், பிறங்கிய - விளங்கிய, பெரும்பற்றப்புலியூர் - பெரும்பற்றப் பூலியூரிலுள்ள, செரு - போர் செய்தற்குரிய, நெடுமேருவில்லின் - நெடிய மேருவாகிய வில்லினால், முப்புரம் தீவிரித்த - முப்புரத்தில் தீயைப்பரப்பின, சிற்றம்பலக்கூத்த - சிற்றம்பலக்கூத்தனே, என்கருத்து - என்மனமானது, கருவடி - (எமது) பிறவிக்கடல் வற்றுதற்கேதுவாகிய, குழைக்காது - குண்டல மணிந்ததிருச் செவியையும், அமலம் செங்கமல மலர் முகம் - பரிசுத்தமாகிய செந்தாமரை மலர் போன்ற முகத்தையும், கலந்தது - சேர்ந்தது—, எ - று.

**வி - ரை.** திருக்கடைக் காவல் - கோயில்வாயிற்படி வடிதல் - வற்றுதல். (௯)

ஏர்கொள்கற்பகமொத்திருசிலைப்புருவம்
பெருந்தடங்கண்கண்மூன் றுடையுன்
பேர்களாயிர நூறுயிரம்பிதற்றும்
பெற்றியோர்பெரும்பற்றப்புலியூர்ச்
சீர்கொள்கொக்கிறகுங்கொன்றையுந்துன் று
சென்னிச்சிற்றம்பலக்கூத்த
நீர்கொள்செஞ்சடைவாழ்மதிபுதுமத்த
நிகழ்ந்தவென்சிந்தையுணிறைந்தே.

ப - ரை. ஏர்கொள்-அழகைக்கொண்ட, கற்பகம் ஒத்து-கற்பக மரத்தை நிகர்த்து, இரு சிலைப்புருவம் - இரண்டு விற்களை நிகர்த்த புருவத்தினையும், பெருதடங் கண்கள் மூன்று - பெரிய விசாலமாகிய மூன்று கண்களையும், உடை-உடைய, உன்-உன்னுடைய, பேர்கள் - திருநாமங்களை, ஆயிரம் நூறுயிரம் - ஆயிரலட்சங்களாக, பிதற்றும் - பிதற்றுகின்ற, பெற்றியோர் - தன்மையை யுடையவர் வாழ்கின்ற, பெரும்பற்றப்புலியூர் பெரும்பற்றப் புலியூரிலுள்ள, சீர் கொள் - சிறப்பைக் கொண்ட, கொக்கு இறகும் - கொக்கிறகும், கொன்றையும் - கொன்றைமலர் மாலையும், துன்று - நெருங்கின, சென்னி - திருமுடியையுடைய, சிற்றம்பலக்கூத்த - சிற்றம்பலக் கூத்தனே, நீர் கொள் - கங்கையைக் கொண்ட, செஞ்சடைவாழ் - செஞ்சடையில் வாழ்கின்ற, மதி - பிறையும், புது மத்தம் - புதிய ஊமத்த மலரும், என் சிந்தையுள் - என் மனத்தில், நிறைந்து நிகழ்ந்த - நிறைந்து விளங்கின—, எ - று.

வி - ரை. ஏர்கொள் கற்பக மொத்து பெரும்பற்றப்புலியூர்ச் சிற்றம்பலக் கூத்த என இயைத்துக் கொள்க, துன்றுதல் - நெருங்குதல்' (௧௦)

காமனக்காலன்றக்கன்மிக்கெச்சன்
படக்கடைக்கணித்தவனல்லாப்
பேய்மனம்பிறிந்தவப்பெருந்தொண்டர்
தொண்டனேன்பெரும்பற்றப்புலியூர்ச்
சேமநற்றில்லைவட்டங்கொண்டாண்ட
செல்வச்சிற்றம்பலக்கூத்த
பூமலரடிக்கீழ்ப்புராணபூதங்கள்
பொறுப்பரென்புன்சொலின்பொருளே.

ப - ரை. காமன் - காமனும், அக்காலன் - அந்த யமனும், தக்கன் - தக்கனும், மிக்க எச்சன் - மேலான எச்சனும், பட - இறக்கும்படி, கடைக்கணித்தவன் அல்லா - கடைக்கணித்தவனாகிய வுன்னையல்லாத, பேய் - பேய்களை, மனம் பிறிந்த - மனத்தால் பிரிந்த, அப்பெருந் தொண்டர் தொண்டனேன், அந்தப் பெரிய தொண்டர்க்குத் தொண்டனேன், பெரும்பற்றப்புலியூர் - பெரும்பற்றப்புலியூரில், சேமம் நல்தில்லை வட்டம் கொண்டு - காவலையுடைய நல்லதில்லை வட்டத்தைப்பற்றி, ஆண்ட - ஆண்டருளின, செல்வம்- செல்வப் பெருக்குள்ள, சிற்றம்பலக் கூத்த - சிற்றம்பலக் கூத்தனே, பூமலர் - பொலிவாகிய தாமரைமலர்போன்ற, அடிக்கீழ் - திருவடியின் கீழுள்ள, புராண பூதங்கள் - பழமையாகிய பூதகணங்கள், என் புன் சொல்லின் பொருள் - எனது அற்பமாகிய சொற்பொருளை, பொறுப்பர் - பொறுத்தருளுவர், எ - று.

வி - ரை. கடைக்கணித்தல் - கடைக் கண்ணாற் பார்த்தல். பேய் - உவமையாகு பெயராய்ப் பேய்போல்வாரை யுணர்த்திற்று, பூ - அழகு எனினுமாம். (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## ௨. கோயில் - உறவாகியயோகம்.

பண் பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

உறவாகியயோகமும்போகமுமா
யுயிராளியென்னுமென்பொன்னொருநாட்
சிறவாதவர்புரஞ்செற்றகொற்றச்
சிலைகொண்டுபன்றிப்பின்சென்றுநின்ற
மறவாவென்னும்மணிநீரருவி
மகேந்திரமாமலைமேலுறையுங்
குறவாவென்னுங்குணக்குன்றேயென்னுங்
குலாத்தில்லையம்பலக்கூத்தனையே.

ப-ரை. என்பொன்-என்னுடைய பொன்போலும் மகள், குலாத்தில்லை அம்பலக்கூத்தனை - குலாத்தில்லையம்பலக் கூத்தனைக் குறித்து, உறவு ஆகிய - (உயிர்களுக்கு) உறவாகிய, யோகமும் போகமும் ஆய் -

யோகமும் போகமுமாகி, உயிர் ஆளி என்னும் - உயிர்களை ஆள்பவனே என்கின்ருள், ஒரு நாள் - பண்டொரு காலத்தில், சிறவாதவர்-கீழோர்களுடைய, புரம்செற்ற - முப்புரத்தையழித்த, கொற்றம் சிலை கொண்டு - வெற்றிவில்லைக் கொண்டு, பன்றிபின் சென்று நின்ற - பன்றியின் பின்னேபோய் நின்ற, மறவர் என்னும் - வீரனே என்கின்ருள், மணிநீர் அருவி - மணிகளைக் கொழித்துக் கொண்டு வருகிற நீரருவிகளையுடைய, மகேந்திர மா மலைமேல் உறையும் - மகேந்திரம் என்னும் பெரிய மலைமீது வாழ்கின்ற, குறவா என்னும் - குறவனே என்கின்ருள்—, எ - று.

**வி - ரை.** பொன்-திருமகள், சுவர்ணம், என்னும் பொருள்களை யுணர்த்தலால் உவமையாகு பெயர். மறவா - வேடனே யெனினுமாம், மணிநீர் - அழகிய நீர் எனினுமமையும். எக்காலத்தும் அசையா நிலைமையனுதலால் இறைவனைக் 'குணக்குன்று' என்ருர். (௧)

காடாடுபல்கணஞ்சூழக்கேழற்
கடும்பின்னெடும்பகற்கானடந்த
வேடாமகேந்திரவெற்பாவென்னும்
வினையேன்மடந்தைவிம்மாவெருவுஞ்
சேடாவென்னுஞ்செல்வர்மூவாயிரஞ்
செழுஞ்சோதியந்தணர்செங்கைதொழுங்
கோடாவென்னுங்குணக்குன்றேயென்னுங்
குலாத்தில்லையம்பலக்கூத்தனையே.

**ப - ரை.** வினையேன் மடந்தை-தீவினையையுடையேனுகிய என் பெண்ணானவள், குலாத்தில்லை அம்பலக் கூத்தனை—, காடு ஆடு - காட்டிலாடுகின்ற, பல்கணம் சூழ - பல கணங்கள் சூழ்ந்திருக்க, கேழல்கடும்பின் - பன்றியின் வியாஜத்தாலே, நெடும் பகல் - நெடுநாள், கான் நடந்த-காட்டில் நடந்த, வேடா-வேடனே, மகேந்திர வெற்பா-மகேந்திரவெற்பனே, என்னும் - என்று சொல்லுகிருள், விம்மா வெருவும் - விம்மி அஞ்சுகிருள், சேடா - பெரியோனே, என்னும் - என்று சொல்லுகிருள், செல்வர் - செல்வராகிய, மூவாயிரம் செழுசோதி அந்தணர் - மூவாயிரம் மிக்க ஒளியுள்ள வேதியர், செங்கை தொழும் - செவந்தகைகளால் வணங்குகின்ற,கோடா என்னும்-கோடனே என்கிருள், குணக்குன்றே என்னும் - குணமலையே என்கிருள்—, எ - று.

**வி - ரை.** இடுகாடு சுடுகாடு என்னுமிரண்டு மடங்க, 'காடு'என்ருர். பல்கணம் - சிவகணங்களும் பூதகணங்களும். விம்மா - செய்யா

வென்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம். சேடு - பெருமை. சேடம் - எச்சமாதலால், சேடா என்பதற்கு எல்லாப்பொருள்களும் அழிந்தகாலத்திலும் அழியாது எஞ்சிநிற் பவனே என்றுரைத்தலுமாம். (உ)

கானேவருமுரணேனமெய்த
களியார்புளினநற்காளாயென்னும்
வானேதடவுநெடுங்குடுமி
மகேந்திரமாமலைமேலிருந்த
தேனேயென்னுந்தெய்வவாய்மொழியார்
திருவாளர்மூவாயிரவர்தெய்வக்
கோனேயென்னுங்குணக்குன்றேயென்னுங்
குலாத்தில்லையம்பலக்கூத்தனையே.

ப - ரை. (என்பெண்ணணவள்) குலாத்தில்லையம்பலக் கூத்தனை—, கானேவரும் - காட்டிலே வந்த, முரண்ஏனம் எய்த - வலிய பன்றியை எய்த, களிஆர் - செருக்கையுடைய, நல் - அழகாகிய, புளினக்காளாய் - வேடக்காளையே, எனும் - என்கிறாள், வான்தடவும் - ஆகாயத்தைத் தொடுகின்ற, நெடுகுடுமி - நெடிய சிகரங்களையுடைய, மா - பெரிய, மகேந்திரமாமலைமேல் இருந்த - பெரிய மகேந்திரமலையின் மீதிருந்த, தேனே என்னும்-தேனே என்கிறாள், தெய்வம்-தெய்வத்தன்மை பொருந்திய, வாய்மொழியார் – வாய்மொழியையுடையவராகிய,திருவாளர் மூவாயிரவர் – செல்வர் மூவாயிரவர்க்கும், தெய்வம்-தெய்வமாகிய, கோனே-தலைவனே, என்னும்-என்கிறாள், குணக்குன்றே என்னும்—, எ - று.

வி - ரை. கான் - காடு, மலைத்தேன் சுவைமிகுதியுள்ளது, அதுபோல இறைவனும் அன்பர்க்கு மிகவுமினியனாதலால் 'மகேந்திரமாமலைமேலிருந்த தேனே' என்றார். (ந)

வெறியேறுபன்றிப்பின்சென்றொருநாள்
விசயற்கருள்செய்தவேந்தேயென்னு
மறியேறுசாரன்மகேந்திரமா
மலைமேலிருந்தமருந்தேயென்னு
நெறியேயென்னுநெறிநின்றவர்க
ணினைக்கின்றநீதிவேதாந்தநிலைக்
குறியேயென்னுங்குணக்குன்றேயென்னுங்
குலாத்தில்லையம்பலக்கூத்தனையே.

ப - ரை. (என்பெண்ணனவள்) குலாத்தில்லையம்பலக் கூத்தனை—, வெறிஏறு பன்றியின் - வெறிமிகுந்த பன்றியின் பின்னே, ஒருநாள் சென்று - ஒருநாள்போய், விசயற்கு அருள்செய்த, அருச்சுநனுக்கு அருள்செய்த, வேந்தே - அரசனே, என்னும் - என்கிறாள், மறிஏறுசாரல் - மான்கள் மிகுந்த சாரலையுடைய, மா-பெரிய, மகேந்திரமாமலைமேல் இருந்த—, மருந்தே-மருந்தே, என்னும்-என்கிறாள், நெறியே - நன்னெறியே, என்னும் - என்கிறாள், நெறிநின்றவர்கள் - நன்னெறியில் நின்றவர்கள், நினைக்கின்ற - கருதுகின்ற, நீதி-நீதியையுடைய, வேதாந்தநிலை குறியே - வேதாந்த நிலைக்குறியே, என்னும் - என்கிறாள், குணக்குன்றே என்னும்—, எ - று.

வி - ரை. வெறி - கோபம் எனினுமமையும், மருந்து - பிறவிப் பிணிக்கு மருந்து, அமிர்தம் என்றலுமொன்று. குறி - லக்ஷியம். (சு

செழுந்தென்றலன்றிலித்திங்கள்கங்கு
 றிரைவீரைதீங்குழல்சேவின்மணி
யெழுந்தின்றென்மேற்பகையாடவாடு
 மென்னைநலிவதென்னேயென்னு
மழுந்தாமகேந்திரத்தந்தரப்புட்
 கரசுக்கரசேயமரர்தனிக்
கொழுந்தேயென்னுங்குணக்குன்றேயென்னுங்
 குலாத்தில்லையம்பலக்கூத்தனையே.

ப - ரை. (என்பெண்ணனவள்) குலாத்தில்லையம்பலக் கூத்தனை—, செழுதென்றல் - செழுமையாகிய தென்றற்காற்று, அன்றில் - கிரவுஞ்சபக்ஷி, இ திங்கள் - இந்தச்சந்திரன், கங்குல் - இரவு, திரைவீரை - அலைகளையுடைய கடல், தீகுழல் - இனிமையாகிய குழலோசை, சேவின்மணி - எருத்துமணி யோசை, (இவையாவும்) எழுந்து - எழுந்து, இன்று - இன்று, என்மேல்பகையாட-என்மேல்பகைக்க, வாடும் என்னை - வாடுகிற என்னை, நலிவதுஎன்னே என்னும் - வருத்துவது என்னே என்கிறாள், அழுந்தா - அழுந்தாத, மகேந்திரத்து - மகேந்திரமலையில், அந்தரப்புட்கரசுக்கு அரசே-ஆகாய சஞ்சாரியாகிய பக்ஷிராஜராஜனுக்கு அரசனே, அமரர்தனிக்கொழுந்தே-தேவர்களுக்கு ஒப்பற்ற கொழுந்தே, என்னும் - என்கிறாள், குணக்குன்றேயென்னும் - குணமலையே யென்கிறாள், எ - று.

வி - ரை. குழல் - வேய்ங்குழல், சே - எருது, நலிதல் - வருத்துதல், கொழுந்து தலைவன் என்னும் பொருளில் வந்தது, கற்பமுடிவில் இறக்கின்ற தேவரை இறவாதவர் எனப்பொருள்படுகிற அமரர் என்னும் பெயராற் கூறியது மங்கல வழக்கு. (௬)

வண்டார்குழலுமைநங்கைமுன்னே
மகேந்திரச்சாரல்வராகத்தின்பின்
கண்டார்கவலவில்லாடிவேடர்
கடிநாயுடன்கைவளைந்தாயென்னும்
பண்டாயமலரயன்றக்கனெச்சன்
பகலோன்றலைபற்பசுங்கண்
கொண்டாயென்னுங்குணக்குன்றேயென்னுங்
குலாத்தில்லையம்பலக்கூத்தனையே.

**ப - ரை.** (என்பெண்ணனவள்) குலாத்தில்லையம்பலக் கூத்தனை—, வண்டு ஆர்குழல்-வண்டுகள் நிரம்பிய கூந்தலையுடைய, உமை நங்கை முன்னே - உமாதேவிக்கெதிரே, மகேந்திரச்சாரல்-மகேந்திர மலையின் சாரலில், வராகத்தின் பின்-பன்றியின் பின்னே, கண்டார் கவல - பார்த்தவர்கள் கவலைப்படும்படி, வில்லாடி - வில்லை யேந்தி, வேடர் - வேடர்களுடைய, கடிநாயுடன் – கடிநாய்களோடு, கைவளைந் தாய் – கைவளைத்தவனே, என்னும் – என்கிருள், பண்டு ஆய-பழமை யாகிய, மலர் அயன் - தாமரைமலரில்வாழும் பிரமன், தக்கன் - தக் கன், எச்சன்—, பகலோன் - சூரியன், (இவர்களுடைய) தலைபல் பசு ங்கண்கொண்டாய் - தலையையும் பல்லையும் பசுங்கண்ணையும் வாங்கி னவனே, என்னும் - என்கிருள், குணக்குன்றே என்னும்—, எ - று.

**வி - ரை.** கவலல் – துன்பப்படுதல். கைவளைதல்-சேர்தல். (சு)

கடுப்பாய்ப்பறைகறங்கக்கடுவெஞ்சிலையுங்
கணையுங்கவணுங்கைக்கொண்
டுடுப்பாய்தோல்செருப்புச்சுரிகை
வராகமுன்னோடிவிளியுளைப்ப
நடப்பாய்மகேந்திரநாதநாதாந்தத்
தரையாவென்பார்க்குநாதாந்தபதங்
கொடுப்பாயென்னுங்குணக்குன்றேயென்னுங்
குலாத்தில்லையம்பலக்கூத்தனையே.

**ப - ரை.** (என் பெண்ணனவள்) குலாத்தில்லையம்பலக் கூத் தனை—, கடுப்பாய்-கடுமையாய், பறை கறங்க-பறைமுழங்க, கடுவெம் சிலையும் – வேகமும் வெம்மையுமுள்ள வில்லையும், கலணும் - கல ணும், கைக்கொண்டு - கையிற்கொண்டு, தோல்செருப்பு உடுப்பாய் – தோற்செருப்பைத் தரித்தவனாய், சுரிகை - சுரிகையேந்தி, வராக

முன்னோடி - பன்றியின் முன்னே ஓடி, விளி உளப்ப - கூக்குரல் முழங்க, நடப்பாய் - நடந்தவனே, மகேந்திரநாத - மகேந்திரமலைக் குத் தலைவனே, நாதாந்தத்து அரையா - நாதமுடிவுக்கு அரசனே, என்பார்க்கு - என்று துதிப்பவர்க்கு, நாதாந்த பதம் கொடுப்பாய் - நாதாந்தபதத்தைக் கொடுப்பவனே, என்னும்—, குணக்குன்றே என்னும்—, எ - று.

**வி - ரை.** கடுப்பு - கடுமை, கறங்கல் - ஒலித்தல், கவண் - கல்லெறிகயிறு, உடுப்பு - உடுத்தல் (தரித்தல்), சுரிகை-சிறுகத்தி, நாதாந்தம் - நாததத்துவத்தின் முடிவு, இந்த நாததத்துவத்தின் முடிவிலிருப்பவனாதலால் இறைவனை 'நாதாந்தத் தரையா' என்றார். (எ)

சேவேந்துவெல்கொடியானேயென்னுஞ்
சிவனேயென்சேமத்துணையேயென்னு
மாவேந்துசாரன்மகேந்திரத்தில்
வளர்நாயகாவிங்கேவாராயென்னும்
பூவேந்திமூவாயிரவர்தொழப்
புகழேந்துமன்றுபொலியநின்ற
கோவேயென்னுங்குணக்குன்றேயென்னுங்
குலாத்தில்லையம்பலக்கூத்தனையே.

**ப - ரை.** (என்பெண்ணனவள்) குலாத்தில்லையம்பலக் கூத்தனை—, சேஏந்து வெல்கொடியானே - தாங்கப்பட்ட வெல்லுதற்குரிய இடபக்கொடியையுடையவனே, என்னும்—, சிவனே—, என் சேமத்துணையே-எனது காவலாகிய துணையே, என்னும்—,மா ஏந்து சாரல் - பெருமை பொருந்திய சாரலினையுடைய, மகேந்திரத்தில் - மகேந்திரமலையில், வளர் - வளர்கின்ற, நாயகா-நாயகனே, இங்கேவாராய் - இங்கே வருவாயாக, என்னும்—, மூவாயிரவர் - தில்லைமூவாயிரவர், பூ ஏந்திதொழ - மலர்களை ஏந்திநின்று வணங்க, புகழ்ஏந்து-புகழைத்தாங்கிய, மன்றுபொலிய நின்ற-அம்பலம் பொலிவடைய நின்ற, கோவே - இறைவனே, என்னும்—, குணக்குன்றே—, என்னும்—, எ - று.

**வி - ரை.** சே - இடபம், மன்று - பொன்னம்பலம், கோ - இறைவன். (அ)

தரவார்புனஞ்சுனைதாழருவித்
தடங்கல்லுறையுமடங்கலமர்
மரவார்பொழிலெழில்வேங்கையெங்கு
மழைசூழ்மகேந்திரமாமலைமேற்

சுரவாவென்னுஞ்சுடர்நீண்முடிமாலய
னிந்திரன்முதற்றேவர்க்கெல்லாங்
குரவாவென்னுங்குணக்குன்றேயென்னுங்
குலாத்தில்லையம்பலக்கூத்தனையே.

ப - ரை. (என்பெண்ணனவள்) குலாத்தில்லையம்பலக் கூத்தனை—, தரவு ஆர் புனம்-பயன்தருதல் நிறைந்த புனத்தினும், சுனை தாழ் அருவி தடம்கல் - சுனைகளினின்று மிழிந்துவருகின்ற அருவிகளையுடைய பெரிய கற்பாறைகளில், உறையும் - தங்குகின்ற, மடங்கல் - சிங்கங்களும், அமர் - அமர்ந்த, மரம் - மரங்கள், ஆர்-நிறைந்த, பொழில் - சோலைகளின், எங்கும் - எவ்விடத்தும், எழில்வேங்கை - அழகிய வேங்கைகளும், மழை - மேகங்களும், சூழ் - சூழ்ந்த, மா - பெரிய, மகேந்திரமலைமேல் - மகேந்திரமலையின் மீதுள்ள, சுரவா - தேவனே, என்னும்—, சுடர்-ஒளிபொருந்திய, நீள் முடி-நீண்ட மகுடங்களை யணிந்த, மால் - திருமால், அயன் - பிரமன், இந்திரன்-இந்திரன், முதல் - முதலாகிய, தேவர்க்கெல்லாம் - தேவர்களுக்கெல்லாம், குரவா-ஆசிரியனே, என்னும்—, குணக்குன்றே—, என்னும்—, எ - று.

வி - ரை. தரவு - தருதல், குரவன் - ஆசிரியன். (க)

திருநீறிடாவுருத்தீண்டேனென்னுந்
திருநீறுமெய்த்திருமுண்டத்திட்டுப்
பெருநீலகண்டன்றிறங்கொண்டிவள்
பிதற்றிப்பெருந்தெருவேதிரியும்
வருநீரருவிமகேந்திரப்பொன்
மலையின்மலைமகளுக்கருளுங்
குருநீயென்னுங்குணக்குன்றேயென்னுங்
குலாத்தில்லையம்பலக்கூத்தனையே.

ப - ரை. இவள் - (என்பெண்ணாகிய) இவள், குலாத்தில்லையம்பலக்கூத்தனை—, திருநீறு இடா - திருநீற்றை யணியாத, உரு-வடிவத்தை, தீண்டேன் - தொடேன், என்னும்—, திருநீறு-திருநீற்றை, மெய்-உடம்பிலும், திருமுண்டத்து - அழகிய நெற்றியிலும், இட்டு - பூசி, பெருநீலகண்டன் - பெருநீலகண்டனது, திறம்கொண்டு-வேஷத்தைக்கொண்டு, பிதற்றி - பிதற்றுகின்று, பெருந்தெருவே, பெரிய தெருக்களிலே, திரியும் - திரியாநின்றாள், வரும்-இழிந்து வருகின்ற, நீர் அருவி - நீரருவிகளையுடைய, பொன் - பொன்மயமாகிய, மகேந்

திரமலையில் - மகேந்திரமலையின்கண், மலைமகளுக்கு-உமாதேவிக்கு, அருளும் - அருள்செய்த, குருநீ - ஆசாரியன் நீ, என்னும்—, குணக்குன்றே—, என்னும்—, எ - று.

வி - ரை. நீலகண்டன் - நீலநிறமாகிய கண்டத்தையுடையவன். மகேந்திரப் பொன்மலை - மகேந்திரமாகிய அழகியமலை யெனினுமமையும். (௧௦)

உற்றாயென்னுமுன்னையன்றிமற்றொன்
றுணரேனென்னுமுணர்வுகள்கலக்கப்
பெற்றாயவைந்தெழுத்தும்பிதற்றிப்
பிணிதீரவெண்ணீறிடப்பெற்றேனென்னுஞ்
சுற்றாயசோதிமகேந்திரஞ்சூழ
மனத்திருள்வாங்கிச்சூழாதநெஞ்சிற்
குற்றாயென்னுங்குணக்குன்றேயென்னுங்
குலாத்தில்லையம்பலக்கூத்தனையே.

ப-ரை. (என்பெண்ணானவள்) உற்றாய்-உற்றவனே, என்னும்—, உன்னை அன்றி-உன்னையல்லாமல், மற்றொன்று உணரேன்-வேறொன்றை யறியேன், என்னும்—, உணர்வுகள் கலக்கப்பெற்று - அறிவுகள் கூடப்பெற்று, ஆய - (அதனால்) உண்டாகிய, ஐந்து எழுத்தும் - ஐந்தெழுத்தினையும், பிதற்றி - பிதற்றாநின்று, பிணிதீர - என்பிறவி நோய்தீரும் வண்ணம், வெண்ணீறு இடப்பெற்றேன்- திருவெண்ணீற்றை அணியப்பெற்றேன், என்னும்—, சுற்று ஆயசோதி-சுற்றிலும் உண்டாகிய ஒளியையுடைய, மகேந்திரம் சூழ - மகேந்திரமலையைச் சூழ, மனத்து இருள்வாங்கி - மனத்திருளைக்கெடுத்து, சூழாதநெஞ்சிற்கு-சூழாத மனத்திற்கு, உற்றாய்-பொருந்தினவனே, என்னும்—, குணக்குன்றே—, என்னும்—, எ - று.

வி - ரை. உணர்வுகள் கலக்கப்பெற்றாய் என்பதற்கு அறிஞரது அறிவுகளிற் கூடப்பெற்றவனே என்றுரைப்பினுமாம். பிதற்றல்- இடையறாது செபித்தல். (௧௧)

வேறாகவுள்ளத்துவகைவிளைத்
தவனிச்சிவலோகவேதவென்றி
மாறாதமூவாயிரவரையுமெனையும்
மகிழ்ந்தாளவல்லாயென்னு
மாறார்சிகரமகேந்திரத்துன்
னடியார்பிழைபொறுப்பாய்மாதோர்

கூறுயென்னுங்குணக்குன்றேயென்னுங்
குலாத்தில்லையம்பலக்கூத்தனையே.

ப - ரை. (என்பெண்ணானவள்) குலாத்தில்லை அம்பலக்கூத்தனை—, வேறாக-வெவ்வேறாக, உள்ளத்து - மனத்தில், உவகைவிளைத்து - களிப்பையுண்டாக்கி, அவனி - பூமியில், சிவலோகம்-சிவலோகம்போல, வேதவென்றி மாறாத - வேதமேம்பாடு நீங்காத, மூவாயிரவரையும் - மூவாயிர வேதியரையும், என்னையும் - அடியேனையும், மகிழ்ந்து ஆளவல்லாய் - மகிழ்ந்து ஆளவல்லவனே, என்னும்—, ஆறு ஆர் சிகரம் - அருவியாறுகள் நிறைந்த சிகரங்களையுடைய, மகேந்திரத்து-மகேந்திரமலையில் எழுந்தருளி, உன் அடியார் - உன் அடியாரது, பிழைபொறுப்பாய்-பிழைகளைப் பொறுப்பவனே, மாது ஓர் கூறாய் - உமாதேவி யமர்ந்த ஒரு பாகத்தையுடையவனே, என்னும்—, குணக்குன்றே—, என்னும்—, எ - று.

வி - ரை. ஆறு யாறு என்பதன் மரூஉ. சிவலோகம் - சிவபுரம். வென்றி - மேம்பாடு. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

---

## ச-கோயில் - இணங்கிலாவீசன்.

### பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

இணங்கிலாவீசனேசத்திருந்தசித்தத்தினேற்கு
மணங்கொள்சீர்த்தில்லைவாணன்மணவடியார்கள்வண்மைக்
குணங்களைக்கூறுவீறிற்கோறைவாய்ப்பிறப்பிண்டப்
பிணங்களைக்காணகண்வாய்பேசாதப்பேய்களோடே.

ப - ரை. இணங்கு இல்லா-ஒப்பில்லாத, ஈசன்-ஈசனது, நேசத்து இருந்த - அன்பின் கண்ணே யிருந்த, சித்தத்தினேற்கு - மனத்தையுடைய எனக்கு, மணங்கொள் - மணத்தைக்கொண்ட, சீர்-சிறப்பையுடைய, தில்லைவாணன்-தில்லைவாணனது, மண அடியார்கள் - மணவடியார்களது, வண்மைக்குணங்களை-உதாரகுணங்களை, கூறு-சொல்லாத, வீறு இல் - மேன்மையில்லாத, கோறைவாய் - கோறைப் பற்களையுடைய வாயினையும், பிறல் பிண்டம் - தொளைகளையுடைய உடம்பினையுமுடைய, பிணங்களை - சவங்களை, கண் காணு-என்கண்

கள் பார்க்கமாட்டா, வாய் - என் வாயானது, அப்பேய்களோடே பேசாது - அந்தப்பேய்களோடே பேசாது, எ - று.

வி - ரை. இணங்கு - ஒப்பு, மணம்-சுபம், வாய் இடவாகு பெயராய் வாயிலுள்ள பற்களை யுணர்த்திற்று. பேயர்களைப் பேயென்றார் பேய்த்தன்மை மிக்கிருத்தலால், இது பண்பாகு பெயர். (௧)

எட்டுருவிரவியென்னையாண்டவனீண்டுசோதி
விட்டிலங்கலங்கற்றில்லைவேந்தனைச்சேர்ந்திலாத
துட்டரைத்தூர்த்தவார்த்தைத்தொழும்பரைப்பிழம்புபேசும்
பிட்டரைக்காணுகண்வாய்பேசாதப்பேய்களோடே.

ப - உ.ர. எட்டு உருவிரவி-எட்டுவடிவோடு கூடி, என்னை ஆண்டவன்-என்னை யாண்டருளினவனாகிய, ஈண்டுசோதிவிட்டு இலங்கு - மிகுந்த ஒளியை வீசி விளங்குகிற, அலங்கல் - மாலையையணிந்த, தில்லைவேந்தனை - தில்லைக்கதிபனை, சேர்ந்திலாத - சேராத, துட்டரை-துஷ்டரை, தூர்த்தவார்த்தை தொழும்பரை-தூர்த்தவார்த்தை பேசுகிற தொழும்பரை, பிழம்பு பேசும்பிட்டரை - பிழம்பு பேசுவோராகிய பிட்டரை, கண்காணு-என்கண்கள் காணு, அப்பேய்களோடே-அந்தப்பேய்களுடன், வாய்பேசாது-என் வாயானது பேசாது, எ-று.

வி - ரை. எட்டுரு-எட்டுவடிவு, (அஷ்ட மூர்த்தம்) அவை நிலம் நீர் நெருப்பு காற்று ஆகாயம் என்னும் பூதங்களைந்தும் சூரியன் சந்திரன் என்னும் இருசுடர்களும் ஆன்மபுருடனுமாம், இவற்றை வடிவாக வுடைமையால் இறைவனை அஷ்டமூர்த்தியென்பர். மூர்த்தம்-வடிவு, அதனையுடையவன் மூர்த்தி. தொழும்பர் - குற்றேவல் செய்வோர். பிழம்பு - இடம்பம். பிட்டர் - பிரஷ்டர், (உ.)

அருட்டிரட்செம்பொற்சோதியம்பலத்தாடுகின்ற
விருட்டிரட்கண்டத்தெம்மானின்பருக்கன்புசெய்யா
வரட்டரையரட்டுப்பேசுமழுக்கரைக்கழுக்களாய
பிரட்டரைக்காணுகண்வாய்பேசாதப்பேய்களோடே.

ப - ரை. சோதி - ஒளியையுடைய, அருள்திரள்-அருளின் திரளாகி, செம்பொன் அம்பலத்து - செம்பொனம்பலத்தில், ஆடுகின்ற-நடனஞ்செய்கிற, இருள்திரள் - இருள் திரண்ட, கண்டத்து - கண்டத்தையுடைய, எம்மான் - எம்பெருமான், (அவனது) இன்பருக்கு - அடியாரிடத்தில், அன்பு செய்யா - அன்புசெய்யாத, அரட்டரை-அரட்டரை, அரட்டுபேசும் - அரட்டு வார்த்தைகளைப் பேசுகிற, அழுக்கரை - அழுக்கரை, கழுக்கள் ஆயபிரட்டரை - கழுக்கள்போன்ற பிர

ட்டரை, கண்காணு - என் கண்கள்காணு, அப்பேய்களோடே - அந்தப்பேய்களுடன், வாய் பேசாது - என் வாயானது பேசாது, எ - று.

வி - ரை. இன்பர் - இன்பு செய்தற்குரியவர், அன்புசெய்தல் - பத்திசெய்தல், பிரட்டர் - பிரஷ்டர். (ந)

**து**ணுக்கெனவயனுமாலுந்தொடர்வருஞ்சுடராயிப்பா
லணுக்கருக்கணியசெம்பொனம்பலத்தாடிக்கல்லாச்
சிணுக்கரைச்செத்தற்கொத்தைச்சிதம்பரைச்சீத்தையூத்தை
பிணுக்கரைக்காணுகண்வாய்பேசாதப்பேய்களோடே. [ப்

ப - ரை. துணுக்கென - துணுக்கென்று, அயனும்-பிரமனும்' மாலும் - திருமாலும், தொடர்வுஅரு - தொடர்தற்கரிய, சுடராய் - ஒளியுருவாகி, இப்பால் - இப்புறத்தே, அணுக்கருக்கு - அணுகினேர்க்கு, அணிய - சமீபஸ்த்தனுகிய, செம்பொன் அம்பலத்தாடிக்கு அல்லா - செம்பொனம்பலத்தி லாடுகிற சிவபெருமானுக்காகாத, சிணுக்கரை-சிணுக்கர்களை, செத்தல் கொத்தை சிதம்பரை—, சீத்தை ஊத்தைபிணுக்கரை—, கண்காணு—, அப்பேய்களோடே வாய்பேசாது, எ - று,

வி - ரை. அணுக்கர் - சேர்ந்திருப்பவர், ஆடி-ஆடுவோன், சிணுக்கர் முதலியவை நீசர் என்னும் பொருள்பயக்குஞ் சொற்கள். (ச)

**தி**சைக்குமிக்குலவுசீர்த்தித்தில்லைக்கூத்துகந்துதீய
நசிக்கவெண்ணீறதாடுநமர்களைநணுகாநாய்க
ளசிக்கவாரியங்களோதுமாதரைப்பேதவாதப்
பிசுக்கரைக்காணுகண்வாய்பேசாதப்பேய்களோடே.

ப-ரை. திசைக்கு மிக்கு உலவு-திக்குகளுக்கு மேற்பட்டு உலாவுகிற, சீர்த்தி - புகழையுடைய, தில்லை - தில்லையில், கூத்து உகந்து - நடநத்தை விரும்பி, தீய - தீயனவாகிய பாவங்களெல்லாம், நசிக்க - நசிக்கும்படி, வெண்ணீறது ஆடும் - திருவெண்ணீற்றிலாடுகிற, நமர்களை - அன்பர்களை, நணுகா - கூடாத, நாய்கள் - நாய்கள் போன்றவராய், அசிக்க - அருவருக்கத்தகுந்த, ஆரியங்கள் ஓதும் - பெருமைகள் பேசுகிற, ஆதரை - அறிவிலிகளை, பேதவாதப்பிசுக்கரை - பேதவாதஞ்செய்கிற பிசுக்கர்களை, கண்காணு—, அப்பேய்களோடே வாய்பேசாது—, எ - று.

வி-ரை. திசைக்கு மிக்குலவு சீர்த்தி - அஷ்டதிக்குகளுள்ளேயடங்காது வெளிப்படுங் கீர்த்தி, உகத்தல் - விரும்பல் பிசுக்கர் - பிசுனர். (ரு)

ஆடரவாடவாடுமம்பலத்தமிர்தேயென்னுஞ்
சேடர்சேவடிகள்சூடத்திருவிலாவுருவினரைச்
சாடரைச்சாட்கைமோடச்சழக்கரைப்பிழக்கப்பிட்கப்
பேடரைக்காணகண்வாய்பேசாதப்பேய்களோடே.

ப - ரை. ஆடுஅரவுஆட - ஆடுமியல்புள்ள பாம்புகள் ஆடாநிற்க, ஆடும் - நடனஞ்செய்கிற, அம்பலத்து - அம்பலத்திலுள்ள, அமிர்தே - அமிர்தமே, என்னும் - என்று துதிக்கிற, சேடர் - அடியாருடைய, சேவடிகள் சூட - திருவடிகளைச் சூடுதற்கு, திரு இல்லா - பாக்கிய மில்லாத, உருவினரை - வீணுடம்பெடுத்தவரை, சாடரை-சாடரை, சாட்கைமோடச் சழக்கரை—, பிழக்கப்பிட்கப் பேடரை—, கண் காண—, அப்பேய்களோடே வாய்பேசாது—, எ - று.

வி - ரை. அம்பலம் - பொன்னம்பலம். உரு - உடம்பு. சாடர் முதலானவை தீயர் என்னும் பொருள் பயப்பன. (௬)

உருக்கியென்னுள்ளத்துள்ளேயூறலந்தேறன்மாறாத்
திருக்குறிப்பருளுந்தில்லைச்செல்வன்பாற்செல்லுஞ்செல்வி
லருக்கரையள்ளல்வாயகள்ளரையவியாப்பாவப்
பெருக்கரைக்காணகண்வாய்பேசாதப்பேய்களோடே.

ப - ரை. உருக்கி - உருகப்பண்ணி, என் உள்ளத்துள்ளே - என் மனத்தினுள்ளே, ஊறல் - சுரத்தலையுடைய, அம் - அழகாகிய, தேறல் - தேனானது, மாறா - இடையறாது சுரக்கிற, திருக்குறிப்பு அருளும் - திருவுளக்குறிப்பை யருள்செய்கிற, தில்லை செல்வன் பால் - தில்லைச்செல்வனிடத்தே, செல்லும் செல்வு இல் - செல்லுஞ் செலவு இல்லாத, அருக்கரை - கீழோரை, அள்ளல் வாய கள்ளரை - அள்ளல்வாயினையுடைய கள்ளரை, அவியா - தணியாத, பாவப்பெருக்கரை - பாவமிகுதியுடையவரை, கண்காண—, அப்பேய்களோடே வாய்பேசாது—, எ - று.

வி - ரை. அருக்கர் - சிறுகின மனத்தையுடையவர். அள்ளல் வாய - அள்ளல் என்னும் நரகமாகிய இடத்தையுடைய, (எ)

செக்கரொத்திரவிநூறாயிரத்திரளொப்பாந்தில்லைச்
சொக்கரம்பலவரென்னுஞ்சுருதியைக்கருதமாட்டா
வெக்கரைக்குண்டமிண்டவெத்தரைப்புத்தராதிப்
பொக்கரைக்காணகண்வாய்பேசாதப்பேய்களோடே.

ப - ரை. செக்கர் ஒத்து - செவ்வானத்தை நிகர்த்து, இரவிநூறாயிரத்திரள் - நூறாயிரம் சூரியருடைய தொகுதிக்கு, ஒப்புஆம் - சரி

யாகிற, தில்லை - தில்லையிலுள்ள, சொக்கர் - சொக்கர், அம்பலவர் - அம்பலத்தையுடையவர், என்னும் - என்று சொல்லப்பட்ட, சுருதியை - வேதவுருவை, கருதமாட்டா - நினைக்கமாட்டாத, எக்கரை—, குண்டமிண்ட எத்தரை—, புத்தர் ஆதி பொக்கரை - புத்தர் முதலிய பொய்யரை, கண்காணு—, அப்பேய்களோடே வாய்பேசாது—, எ-று.

வி - ரை. செக்கர் - செவ்வானம் (அந்திவானம்). சொக்கர்-பரிசுத்தர். சுருதி - வேதவுருவினர். பொக்கர் - பொய்யர், பொக்கம் - பொய், எக்கர் - இறுமாப்புடையவர். (அ)

எச்சனைத்தலையைக்கொண்டுசெண்டடித்திடபமேறி
யச்சங்கொண்டமரரோடநின்றவம்பலவற்கல்லாக்
கச்சரைக்கல்லாப்பொல்லாக்கயவரைப்பசுநூல்கற்கும்
பிச்சரைக்காணுகண்வாய்பேசாதப்பேய்களோடே.

ப - ரை. எச்சனை - எச்சனது, தலையைகொண்டு - தலையைவாங்கி, செண்டு அடித்து - பந்தடித்து, இடபம் ஏறி - இடபத்தின்மீதேறி, அமரர் அச்சம் கொண்டு ஓடநின்ற - தேவர்கள் அச்சங்கொண்டோடும்படி நின்ற, அம்பலவற்கு அல்லா - அம்பலவனுக்காகாத, கச்சரை—, கல்லாபொல்லா கயவரை-கல்லாத பொல்லாத கீழ்மக்களை, பசுநூல்கற்கும் பிச்சரை - பசுநூல்களைக் கற்கிற பித்தரை, கண்காணு—, அப்பேய்களோடே வாய்பேசாது—, எ - று.

வி - ரை. இடபமேறிநின்ற என வியையும். அமரர் - தக்கன் வேள்விக்கு வந்த தேவர். கச்சர் - துணிவுள்ளவர். பசுநூல் - லௌகிகநூல். எச்சனை உருபு மயக்கம். (கூ)

விண்ணவர்மகுடகோடிமிடைந்தொளிர்மணிகள்வீசு
மண்ணலம்பலவன்கொற்றவரசனுக்காசையில்லாத் [ப்
தெண்ணரைத்தெருளாவுள்ளத்திருளரைத்திட்டைமுட்டை
பெண்ணரைக்காணுகண்வாய்பேசாதப்பேய்களோடே.

ப - ரை. விண்ணவர் - தேவர்களுடைய, மகுடகோடி மிடைந்து - மகுடகோடிகள் நெருங்கி, ஒளிர்மணிகள் வீசும் - ஒளிர்கின்ற மணிகள் ஒளியை வீசுகிற, அண்ணல்-பெருமையுள்ள, அம்பலவன்-அம்பலத்தானாகிய, கொற்ற அரசனுக்கு - வெற்றிவேந்தனிடத்தில், ஆசை இல்லா - அன்பில்லாத, தெண்ணரை—, தெருளா உள்ளத்து இருளரை - தெளியாத மனத்தையுடைய இருளரை, திட்டை முட்டை பெண்ணரை—, கண்காணு—, அப்பேய்களோடே வாய்பேசாது—, எ - று.

வி - ரை. விண்ணவர் - விண்ணுலகத்துள்ளவர். கோடி யென்பது இவ்விடத்துப் பலவென்னும் பொருளது. ஒளிர்தல் - பிரகாசித்தல். தெண்ணர் - கீழ்மக்கள், தெருளல் - தெளிதல். பெண்ணர் - பெண்மையுடையவர். திட்டைமுட்டை யென்றது வம்பர் என்றபடி.

சிறப்புடையடியார்தில்லைச்செம்பொனம்பலவற்காளா
முறைப்புடையடியார்கீழ்க்கீழுறைப்பர்சேவடிநீறாடா
ரிறப்பொடுபிறப்பினுக்கேயினியராய்மீண்டுமீண்டும்
பிறப்பரைக்காணகண்வாய்பேசாதப்பேய்களோடே.

ப - ரை. சிறப்பு உடை அடியார் - சிறப்பினையுடைய அடியவர், தில்லைச் செம்பொன் அம்பலவற்கு - தில்லைச் செம்பொனம்பலவனுக்கு, ஆள்ஆம் - அடிமையாகிற, உறைப்பு உடை அடியார் - மனவுறுதியையுடைய அடியார், கீழ் கீழ் உறைப்பர்—, சேவடி நீறு ஆடார் - திருவடிநீற்றை யணியாதவராய், இறப்பொடு பிறப்பினுக்கே இனியராய் - இறப்போடு பிறப்புக்கே இனியராகி, மீண்டுமீண்டும் பிறப்பரை - மீண்டுமீண்டும் வந்து பிறப்பவரை, கண்காண—, அப்பேய்களோடே வாய்பேசாது—, எ - று.

வி - ரை. உறைப்பு - மனவுறுதி. இனியர் - சம்மதியுடையவர்,

திருச்சிற்றம்பலம்.

---

# சேந்தனார் திருவிசைப்பா.

## க. திருவீழிமிழலை.

**பண் - பஞ்சமம்.**

திருச்சிற்றம்பலம்.

ஏகநாயகனையிமையவர்க்கரசை
 யென்னுயிர்க்கமுதினையெதிரில்
போகநாயகனைப்புயல்வணற்கருளிப்
 பொன்னெடுஞ்சிவிகையாவூர்ந்த
மேகநாயகனைமிகுதிருவீழி
 மிழலைவிண்ணிழிசெழுங்கோயில்
யோகநாயகனையன்றிமற்றொன்று
 முண்டெனவுணர்கிலேன்யானே.

ப - ரை. ஏகநாயகனை - ஏகநாதனை, இமையவர்க்கு அரசை - தேவர்களுக்கு அரசனை, என் உயிர்க்கு அமுதினை - என் உயிருக்கு அமிர்தாயிருப்பவனை, எதிர் இல் - சமானமில்லாத, போகநாயகனை - போகநாதனை, புயல்வண்ணற்கு அருளி - மேகவண்ணனாகிய திருமாலுக் கருள்செய்து, பொன்னெடு சிவிகையா ஊர்ந்த - பெரிய பொற்சிவிகையாகச் செலுத்தின, மேகநாயகனை-மேகநாதனை, மிகு-மேலான, திருவீழிமிழலை - திருவீழிமிழலையில், விண் இழி - விண்ணினின்றும் இறங்கின, செழுங்கோயில் - செழுமையாகிய கோயிலில் எழுந்தருளியிருக்கிற, யோகநாயகனை - யோகநாதனை, அன்றி-அல்லாமல், மற்றொன்றும் - வேறொன்றும், உண்டு என - உண்டென்று, யான் உணர்கிலேன் - நான் அறிந்திலேன், எ - று.

வி - ரை. ஏகநாயகன் - ஒப்பற்றவன். (அத்விதீயன்). போகநாயகன் - ஆன்மாக்களுக்குப் போகங்களை யூட்டுவதில் தலையாயவன். மேகநாயகன் - மேகம்போலுங் கைம்மாறு கருதாத நாயகன். யோகநாயகன் - யோகங்களுக்குத் தலைவன், சநகாதிகளாகிய ஆதியோகிகளுக் காசிரியனாதலால் யோகநாயகன் எனினுமாம். (க)

**க**ற்றவர்விழுங்குங்கற்பகக்கனியைக்
  கரையிலாக்கருணைமாகடலை
மற்றவரறியாமாணிக்கமலையை
  மதிப்பவர்மனமணிவிளக்கைச்
செற்றவர்புரங்கள்செற்றவெஞ்சிவனைத்
  திருவீழிமிழலைவீற்றிருந்த
கொற்றவன்றன்னைக்கண்டுகண்டுள்ளங்
  குளிரவென்கண்குளிர்ந்தனவே.

ப - ரை. கற்றவர் விழுங்கும் - கற்றோரால் விழுங்கப்படுகிற, கற்பகக்கனியை - கற்பகப்பழத்தை, கரை இல்லா - கரை இல்லாத, மா-பெரிய, கருணைக்கடலை-கருணாசமுத்திரத்தை, மற்றவர் அறியா-மற்றவர் அறியாத, மாணிக்கமலையை - மாணிக்கமலையை, மதிப்பவர்-நினைப்பவர்களுடைய, மனம்-மனத்தில் விளங்குகிற, மணிவிளக்கை-ரத்நதீபத்தை, செற்றவர் - பகைவருடைய, புரங்கள் - முப்புரங்களை, செற்ற - அழித்த, எம் சிவனை - எமது சிவபிரானை, திருவீழிமிழலை - திருவீழிமிழலையில், வீற்றிருந்த - வீற்றிருந்தருளின, கொற்றவன் தன்னை - இறைவனை, கண்டு கண்டு - பார்த்துப் பார்த்து, உள்ளம் குளிர - மனங்குளிர, என் கண் குளிர்ந்தன - என் கண்கள் குளிர்ந்தன, எ - று.

வி - ரை. கற்றவர் - வீட்டுநூல்களைக் கற்றவராகிய ஞானியர். மற்றவர் - கற்றவரல்லாதவர். (உ)

மண்டலத்தொளியைவிலக்கியானுகர்ந்த
மருந்தையென்மாறிலாமணியைப்
பண்டலரயன்மாற்கரிதுமாயடியார்க்
கெளியதோர்பவளமால்வரையை
விண்டலர்மலர்வாய்வேரிவார்பொழில்சூழ்
திருவீழிமிழலையூராளுங்
கொண்டலங்கண்டத்தெங்குருமணியைக்
குறுகவல்வினைகுறுகாவே.

ப - ரை. மண்டலத்து ஒளியை விலக்கி - மண்ணுலகத்தொளியை விலக்கி, யான் நுகர்ந்த - யான் புசித்த, மருந்தை - தேவாமிர்தத்தை, மாறு இல்லா-நிகரில்லாத, மணியை-மாணிக்கத்தை, பண்டு-பூர்வகாலத்தில், அயன்மாற்கு - பிரமவிட்டுணுக்களுக்கு, அரியதுமாய் - அரியதுமாகி, அடியார்க்கு - அடியவர்க்கு, எளியது - எளியதாகிய, ஓர்-ஒப்பற்ற, மால் பவளவரையை - பெரிதாகிய பவளமலையை, விண்டு அலர் - வெடித்து மலர்கிற, மலர் வாய் வேரி - மலரினிடத்துண்டாகிற தேனனது, வார் - ஒழுகாநின்ற, பொழில் சூழ் - சோலைகள் சூழ்ந்த, திருவீழிமிழலை ஊர் - திருவீழிமிழலையாகிய ஊரை, ஆளும் - ஆளுகின்ற, கொண்டல் - மேகம்போன்ற, அம் - அழகிய, கண்டத்து - கண்டத்தையுடைய, எம் - எமது, குருமணியை - குருமணியை, குறுக - அடைந்தால், வல்வினை - வலியவினைகள், குறுகா-அடையமாட்டா, எ-று.

வி - ரை. மண்டலத்தொளி - பிரபஞ்சவாசனை. கொண்டலங்கண்டம் - நீலகண்டம். குருமணி - குருசிரேஷ்டன். (ங)

தன்னடிநிழற்கீழென்னையுந்தகைத்த
சசிகுலாமவுலியைத்தானே
யென்னிடைக்கமலமூன்றினுட்டோன்றி
யெழுஞ்செழுஞ்சுடரினையருள்சேர்
மின்னெடுங்கடலுள்வெள்ளத்தைவீழி
மிழலையுள்விளங்குவெண்பளிங்கின்
பொன்னடிக்கடிமைபுக்கினிப்போக
விடுவனோபூண்டுகொண்டேனே.

ப - ரை. தன் அடி நிழற்கீழ் - தன் திருவடி நிழலின்கீழே, என்னையும் தகைத்த - என்னையும் தடுத்தாட்கொண்ட, சசி குலாம் மவு

லீனை - சந்திரசேகரனை, தானே - தானே, என்னிடை - என்னிடத்துள்ள, கமலம் மூன்றினுள் - மூன்று கமலங்களுள்ளும், தோன்றி எழும் - உதித்தெழுகின்ற, செழுஞ்சுடரினை - செழுமையாகிய சூரியனை, அருள்சேர் - அருள்பொருந்திய, மின்நெடு கடலுள் வெள்ளத்தை - மின்னுகின்ற நெடிய கடலினுள்ளேயிருக்கிற பிரவாகத்தை, வீழிமிழலையுள் விளங்கு - திருவீழிமிழலையுள்ளே விளங்குகிற, வெண்பளிங்கின் - வெண்மையாகிய படிகத்தின், பொன்அடிக்கு - பொன்போலுந் திருவடிக்கு, அடிமை புகுந்து - தொண்டுபூண்டு, பூண்டுகொண்டேன் - பூண்டுகொண்டவனாகிய நான், இனிபோகவிடுவேனோ - இனிப் போகவிடுவேனோ, எ - று.

வி - ரை. சசி - சந்திரன். குலாம் - விளங்குகிற, மவுலி - திருமுடியையுடையவன். இறைவன் வெண்பொடியாடிய திருமேனியனாதலால் வெண்பளிங்கு என்றார். (ச)

இத்தெய்வநெறிநன்றென்றிருண்மாயப்
பிறப்பறாவிந்திரசாலப்
பொய்த்தெய்வநெறிநான்புகாவகைபுரிந்த
புராணசிந்தாமணிவைத்த
மெய்த்தெய்வநெறிநான்மறையவர்வீழி
மிழலைவிண்ணிழிசெழுங்கோயி
லத்தெய்வநெறியிற்சிவமலாதவமு
மறிவரோவறிவுடையோரே.

ப - ரை. இத்தெய்வ நெறிநன்று என்று - இந்தத்தேவதாமார்க்கம் நன்றென்று, இருள் - இருள் வடிவாகிய, மாயம் - மாயாகாரியமாகிய, பிறப்பு அறா - பிறவி யொழியாத, இந்திரசாலம் - இந்திரசாலம் போன்ற, பொய் தெய்வநெறி - பொய்யாகிய தேவதாமார்க்கத்தில், நான் புகாவகை புரிந்த - நான்புகா வண்ணஞ்செய்த, புராணசிந்தாமணி வைத்த - புராதந சிந்தாமணி யேற்படுத்தி வைத்த, மெய் தெய்வநெறி - உண்மையாகிய தேவதா மார்க்கத்தையுடைய, நான்மறையவர் - நான்கு வேதங்களிலும் வல்லோராகிய அந்தணர் வாழ்கின்ற, வீழிமிழலை - திருவீழிமிழலையில், விண் இழி செழுங்கோயில் - விண்ணிலிருந்திறங்கின செழிய கோயிலிலெழுந்தருளிய, அத்தெய்வ நெறியில் - அந்தத்தேவதாமார்க்கத்திலுள்ள, அறிவுடையோர் - அறிவுடையவர், சிவம் அலாது - சிவத்தையேயன்றி, அவமும் அறிவரோ - அவத்தையும் அறிவாரோ, எ - று.

வி - ரை. புராணம் - பழமை. அவம் - வீண்காரியம். (ரு)

அக்கனவனைய செல்வமே சிந்தித்
தைவரோடழுந்தி நானவமே
புக்கிடாவண்ணங் காத்தெனை யாண்ட
புனிதனை வனிதைபாகனை யெண்
டிக்கெலாங்குலவும் புகழ்த்திருவீழி
மிழலையான் றிருவடி நிழற்கீழ்ப்
புக்குநிற்பவர்தம் பொன்னடிக்கமலப்
பொடியணிந்தடிமைபூண்டேனே.

ப - ரை. அ-அந்த, கனஅனைய -சொப்பனத்தை நிகர்த்த, செல்வமே சிந்தித்து - செல்வத்தையே நினைத்து, ஐவரோடு அழுந்தி-ஐவருடனே அழுந்தி, யான் - நான், அவமே புக்கிடாவண்ணம் - வீண் காரியங்களில் பிரவேசிக்காதபடி, காத்து-தடுத்து, என்னை ஆண்ட - என்னை யாண்டருளின, புனிதனை - பரிசுத்தனை, வனிதைபாகனை - பெண்பாகனை, எண் திக்கு எல்லாம் குலவும் - அஷ்டதிக்குகள் முழுதினும் விளங்குகிற, புகழ் - புகழையுடைய, திருவீழிமிழலையான் - திருவீழிமிழலையி லெழுந்தருளி யிருப்பவனது, திருவடி நிழற்கீழ் - திருவடி நிழலின்கீழே, புக்குநிற்பவர்தம் - புகுந்து நிற்பவருடைய, பொன்அடி கமலம் பொடி - பொன்னடித்தாமரைப்பொடியை, அணிந்து - தரித்து, அடிமை பூண்டேன் - தொண்டுபூண்டேன், எ - று.

வி-ரை. செல்வத்தில் மிகு வெறுப்புடையவராதலால் அக்கனவனைய செல்வம் எனச் சேய்மைச்சுட்டாற் சுட்டினார். ஐவர் என்றது ஐம்பொறிகளை, வனிதை யென்றது உமாதேவியை. பொன்னடிக்கமலப்பொடி-தாமரைமலர்போன்ற திருவடித்துகள் (ஸ்ரீபாதரேணு).

கங்கைநீரரிசிற்கரை யிருமருங்குங்
கமழ்பொழிறழுவிய கழனித்
திங்களோர்திண்டநீண்டமாளிகைசூழ்
மாடநீடுயர் திருவிழித்
தங்குசிர்ச்செல்வத் தெய்வத்தான்றோன்றி
நம்பியைத் தன்பெருஞ்சோதி
மங்கையோர்பாகத் தென்னருமருந்தை
வருந்திநான் மறப்பனோவினியே.

ப - ரை. கங்கைநீர் - கங்கைநீர் சூழ்ந்த, அரிசிற்கரை இருமருங்கும் - அரிசிற் கரையின் இரண்டுபக்கங்களினும், கமழ் - பரிமளிக்

கிற, பொழில் தழுவிய - சோலைகள் சூழ்ந்த, கழனி - கழனிகளையு டைய, திங்கள் நேர்தீண்ட நீண்ட - சந்திரனை நேரே தொடும்படி நீண்ட, மாளிகை சூழ்மாடம்நீடு - மாளிகைகள் சூழ்ந்த மாடங்கள் நீண்ட, உயர் - உயர்வையுடைய, திருவீழிதங்கு-திருவீழிமிழலையில் தங்கிய, சீர் செல்வம் - சிறப்பாகிய செல்வத்தையுடைய, தெய்வம் - தெய்வமாகிய, தான்தோன்றி நம்பியை—, தன்பெருஞ்சோதி - தனது பேரொளியாகிய, மங்கை-மலைமகள் வாழ்கின்ற, ஓர் பா கத்து - ஒருபாகத்தையுடைய, என் அருமருந்தை - என் அருமை யாகிய மருந்தை, வருந்தி - வருத்தமடைந்தும், இனி நான்மறப் பனே - இனி நான்மறப்பேனே, எ - று.

வி - ரை. அரிசில் - ஓர்நதி, தான்தோன்றி நம்பி - தானேயுண் டான சுயம்புலிங்கம். ஓர்பாகம் என்றது - இடப்பாகத்தை. (எ)

ஆயிரங்கமலஞாயிறுயிரமுக்
கண்முககரசரணத்தோன்
பாயிருங்கங்கைபனிநிலாக்கரந்த
படர்சடைமின்னுபொன்முடியோன்
வேயிருந்தோளியுமைமணவாளன்
விரும்பியமிழலைசூழ்பொழிலைப்
போயிருந்தேயும் போற்றுவார்கழல்கள்
போற்றுவார்புரந்தராதிகளே.

ப - ரை. ஆயிரம் கமலம் ஞாயிறு - ஆயிரம் தாமரைமலர்களையும் ஆயிரம் சூரியர்களையும் நிகர்த்த, ஆயிர முக்கண் முககரசரணத் தோன் - ஆயிர முக்கண்களையும் ஆயிரமுகங்களையும் ஆயிரங்கைகளை யும் ஆயிரம் திருத்தாள்களையும் உடையவன், பாய் - பாய்ந்து செல்லு மியல்பினையுடைய, இருகங்கை-பெரிய கங்காநதியையும், பனிநிலா - குளிர்ச்சியாகிய சந்திர கண்டத்தையும், கரந்த-ஒளித்த, படர்சடை - விரிந்தசடை, மின்னு - மின்னுதற்கிடமாகிய, பொன்முடியோன் - பொன்முடியையுடையவன், வேய் - மூங்கில்போன்ற, இருதோளி - பெரிய தோள்களையுடையவளாகிய, உமை மணவாளன் - உமாதேவி மணாளன், (அவன்) விரும்பிய - விரும்பி வாழ்கின்ற, மிழலைசூழ் பொழிலை - திருவீழிமிழலையைச் சூழ்ந்த சோலையில், போய் இரு ந்தேயும் - சென்று தங்கியிருந்தாயினும், போற்றுவார்-வணங்குவோ ருடைய, கழல்கள் - திருவடிகளை, புரந்தராதிகள்-இந்திரன் முதலிய தேவர்கள், போற்றுவார் - வணங்குவார்கள், எ - று.

வி - ரை. இருமை - பெருமை. மிழலைசூழ் பொழிலைப் போயி ருந்தேயும் போறறுவார் கழல்கள்போற்றுவார் புரந்தராதிகளே, என்ற

மையால் இத்திருப்பதியின் பெருமையும், இதில் தங்கியிருந்து வழி படுவோரது பெருமையும், இங்குத் திருக்கோயில்கொண் டெழுந் தருளியிருக்கும் இறைவரது பெருமையும் சொல்லாதேயமையும். மொழிலே-உருபு மயக்கம். (அ)

எண்ணில்பல்கோடிசேவடிமுடிக
ளெண்ணில்பல்கோடிதிண்டோள்க
ளெண்ணில்பல்கோடிதிருவுருநாம
மேர்கொண்முக்கண்முகமியல்பு
மெண்ணில்பல்கோடியெல்லைக்கப்பாலாய்
நின்றைஞ்ஞூற்றந்தணரேத்து
மெண்ணில்பல்கோடி குணத்தரேர்வீழி
யிவர்நம்மையாளுடையாரே.

ப - ரை. சேவடி - திருவடிகள், எண் இல் பல்கோடி-எண்ணி றந்த பலகோடி, முடிகள் - திருமுடிகள், எண் இல் பல்கோடி—, திண்தோள்கள்-திண்ணியபுயங்கள், எண்ணில்பல்கோடி—, திரு வுருநாமம் ஏர்கொள்முக்கண் முகம் இயல்பும்-திருவுருவமும்திருநா மமும் அழகைக்கொண்ட முக்கண்ணும் திருமுகமும் இயல்பும், (ஆகிய இவைகள்) எண்ணில்பல்கோடி—, (இங்ஙனம்) எல்லைக்கு அப்பாலாய் நின்று-வரம்புகடந்து நின்று, ஐஞ்ஞூறு அந்தணர் ஏத் தும்-ஐந்நூறு வேதியர் துதிக்கிற, எண்ணில்பல்கோடி குணத்தர் - எண்ணிறந்த பலகோடி குணங்களையுடையவராகிய, ஏர்-அழகாகிய, வீழி இவர்-திருவீழிமிழலையிலுள்ள இவரே, நம்மை ஆளுடையார் - எம்மை யாளாகவுடையவர், எ-று.

வி - ரை. இத்திருப்பாட்டினால் இறைவரது திருவடிமுதலிய வை அளவிறந்தன வென்பதினிது விளங்கிற்று. பிறர்கண்போலாது மூன்றாயிருந்தனவேனும் அவைதாமும் ஓரழகுடையவென்பது தோ ன்ற 'ஏர்கொண்முக்கண்' என்றார். "தில்லையேர் கொண் முக்கண் மன்" என்றார் மணிவாசகரும். இயல்பு-சுபாவம். குணம்-கல்யாண குணங்கள். (க)

தக்கன்வெங்கதிரோன்சலந்தரன்பிரமன்
சந்திரனிந்திரனெச்சன்
மிக்கநெஞ்சரக்கன் புரங்கரிகருடன்
மறலிவேளிவர்மிகைசெருத்தோன்

திக்கெலாநிறைந்தபுகழ்த்திருவீழி
மிழலையான்றிருவடிநிழற்கீழ்ப்
புக்கிருந்தவன்றன்பொன்னடிக்கமலப்
பொடியணிந்தடிமைபூண்டேனே.

ப-ரை. தக்கன்-தக்ஷன், வெம்கதிரோன் - வெவ்விய கிரணங்களை யுடையவனுகிய சூரியன், சலந்தரன்—, பிரமன்—, சந்திரன்—, இந்திரன்—, எச்சன் - யாககர்த்தா, மிக்க நெஞ்சு அரக்கன் - (அகங்காரம்) மிகுந்த மனத்தினையுடைய அரக்கனுகிய இராவணன், புரம்-முப்புரம், கரி - கயமுகாசுரன், கருடன்—, மறலி - யமன், வேள் - மன்மதன், (ஆகிய) இவர் - இவரது, மிகை - வரம்பு கடந்த நடக்கையை, செகுத்தோன் - அழித்தவன், திக்கு எல்லாம் நிறைந்த-திசைகளிலெல்லாம் நிரம்பின, புகழ் - புகழினையுடைய, திருவீழிமிழலையான் - திருவீழிமிழலையி லெழுந்தருளியிருப்பவன், (அவனது) திருவடி நிழல் கீழ்புக்கு இருந்து-திருவடி நிழலிற் புகுந்திருந்து, அவன் - அவனது, பொன் - பொன்போலும், அடிகமலம் - பாததாமரையின், பொடி - துகளை, அணிந்து - தரித்து, அடிமை பூண்டேன்-தொண்டுபூண்டேன், எ - று.

வி-ரை. வேள் - ஆகுபெயர். செகுத்தல் - அழித்தல். தன்-சாரியை. ஏ - ஈற்றசை. திக்கெலாம் என்றது பத்துத்திக்கிலும் என்றபடி; பத்துத்திக்குக்களாவன: அஷ்டதிக்கும் மண்ணும் விண்ணும். எங்கும் இவன் புகழே நிறைந்திருத்தலால் 'இவனடிக் கமலப்பொடியணிந்தடிமை பூண்டேன், என்றார். (க0)

உளங்கொளமதுரக்கதிர்விரித்துயிர்மே
லருள்சொரிதருமுமாபதியை
வளங்கிளர்நதியுமதியமுஞ்சூடி
மழவிடைமேல்வருவானை
விளங்கொளிவீழிமிழலைவேந்தேயென்
றுந்தனைச்சேந்தன்றுதையையான்
களங்கொளவழைத்தாற்பிழைக்குமோவடியேன்
கைக்கொண்டகனககற்பகமே.

ப-ரை. உயிர்மேல் - உயிர்களாகிய பயிரின்மீது, உள்ளம்கொள்ள - மனங்கொள்ள, மதுரக்கதிர் விரித்து - இனிய கதிர்களை விரித்து, அருள் - கருணையாகிய மழையை, சொரிதரும் - பொழிகின்ற,

உமாபதியை - உமைகேள்வனை, வளம்கிளர் - வளம்பொருந்திய, நதியும் - கங்கையையும், மதியமும் - சந்திரகண்டத்தையும், சூடி - தரித்து, மழவிடைமேல் - இளவெருதின்மீது, வருவானை - வருவோனை, சேந்தன்தாதையை - குமரன் தந்தையை, விளங்கு - பிரகாசிக்கிற, ஒளி - புகழினையுடைய, வீழிமிழலை வேந்தே என்று - திருவீழிமிழலைக்கரசே யென்று, ஆந்தனை-ஆமளவும், யான் - நான், களம்கொள அழைத்தால் - வாய்நிறைய அழைத்தால், அடியேன் கைக்கொண்ட - அடியேன் கைப்பற்றின, கனககற்பகம் - பொற்கற்பகம், பிழைக்குமோ - (எனக்கு) தவறுமோ, எ - று.

வி-ரை. சொரிதரும் என்பது ஒருசொல்; பகுதி சொரிதா. ஈற்றோகாரம் எதிர்மறை. (கக)

பாடலங்காரப்பரிசில்காசருளிப்
பழுத்தசெந்தமிழ்மலர்சூடி
நீடலங்காரத்தெம்பெருமக்க
ணெஞ்சினுணிறைந்துநின் றானை
வேடலங்காரக்கோலத்தினமுதைத்
திருவீழிமிழலையூராளுங்
கேடிலங்கீர்த்திக்கனககற்பகத்தைக்
கெழுமுதற்கெவ்விடத்தேனே.

ப-ரை. பாடு அலங்காரம் பரிசில் - பாடுகிற அலங்காரத்துக்குப் பரிசிலாக, காசு அருளி-காசு அருளிச்செய்து, பழுத்த-முதிர்ந்த, செந்தமிழ் மலர்சூடி, செந்தமிழ் மலர்களைத் தரித்து, நீடு அலங்காரத்து - பெரிதாகிய அழகையுடைய, எம்பெருமக்கள் - எமது பெருமக்களுடைய, நெஞ்சினுள் - மனத்தினுள்ளே, நிறைந்து நின்றானை - நிறைந்து நின்றவனை, வேடு அலங்காரக் கோலத்தின் - வேடுவனது அழகிய வேடத்தையுடைய, அமுதை - அமிர்தம்போல்பவனை, திருவீழிமிழலை ஊர் ஆளும்-திருவீழிமிழலையென்னும் ஊரையாள்கின்ற, கேடு இல்-கெடுதியில்லாத, அம் - அழகிய, கீர்த்தி-புகழையுடைய, கனகம் கற்பகத்தை-பொன்மயமாகிய கற்பகவிருக்ஷத்தை, கெழுமுதற்கு-அடைவதற்கு, எவ்விடத்தேன்-நான் எவ்விடத்தேன், எ-று.

வி-ரை. அலங்காரப்பரிசில் - அலங்காரமான பாடலுக்குப் பரிசில். காசு - பொன்பணம். பெருமக்கள் - பெரியோர் (அடியார்). கோலம் - வேடம்; (பன்றியின் பின்னே சென்ற வேடுவனதுவே

டம்). வேடு - ஆகுபெயர். எவ்விடத்தேன் என்ற வினா எவ்வகையானும் உரியனல்லேன் எனப்பொருள்படும். எவ்விடத்தேனே யென்பதற்கு எவ்விடத்தேனேனெனப் பொருளுரைத்தலுமாம். நிறைந்து நின்றானை யென்பதில் நிறைவு எதிர்மறையில்லாத நிறைவு. பாடலங்காரப் பரிசில் காசுஅருளி யென்பதற்கு, பக்கத்தே யசைந்து தொங்குகிற மாலை மரியாதையும் காசும் அருள்செய்து என்றுரைத்தலுமாம். (கஉ);

திருச்சிற்றம்பலம்.

---

## உ. திருவாவடுதுறை.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பொய்யாதவேதியர்சாந்தைமெய்ப்புகழா
ளராயிரம்பூசுரர்
மெய்யேதிருப்பணிசெய்சீர்மிகுகா
விரிக்கரைமேய
வையாதிருவாவடுதுறையமுதே
யென்றுன்னையழைத்தக்கான்
மையார்தடங்கண்மடந்தைக்கொன்றருளா
தொழிவதுமாதிமையே.

ப-ரை. பொய்யாத-பொய்க்காத, வேதியர்-வேதியர் வாழ்கிற, சாந்தை-சாந்தையூரில் வாழ்கின்ற, மெய்புகழாளர் - உண்மையாகிய புகழையுடையவராகிய, ஆயிரம் பூசுரர் - ஆயிரம் வேதியர், மெய்யே-உண்மையாகவே, திருப்பணிசெய்-திருத்தொண்டுசெய்கிற, சீர்மிகு-சிறப்பு மிகுந்த, காவிரிக்கரைமேய-காவிரிக்கரையி லெழுந்தருளின, ஐயா - ஐயனே, திருவாவடுதுறை அமுதே என்று-திருவாவடுதுறையிலுள்ள அமிர்தமேயென்று, உன்னை அழைத்தக்கால்-உன்னையழைத்தால், மைஆர் - அஞ்சனம் பொருந்திய, தடம்கண் - பெரிய கண்களையுடைய, மடந்தைக்கு - என்பெண்ணுக்கு, ஒன்று அருளாது ஒழிவது - ஒருவார்த்தை பேசாதொழிவது, மாதிமையே - உனக்கு அழகோ, எ - று.

வி-ரை. பொய்யாத என்றது உண்மையையுடைய என்றபடி, ஐயா என்பதற்கு அழகனே என்றுரைப்பினுமாம். மாதிமையே என்னுமேகாரம் எதிர்மறை. (க)

மாதிமணங்கமழும்பொழின்மணிமாட
மாளிகைவீதிசூழ்
சோதிமதிலணிசாந்தைமெய்ச்சுருதி
விதிவழியோர்தொழு
மாதியமரர்புராணனு மணியா
வடுதுறைநம்பிநின்ற
நீதியறிகிலள்பொன்னெடுந்திண்டோள்
புணரநினைக்குமே.

ப-ரை. மாதி-அழகுள்ளவளாகிய என்பெண்ணானவள், மணம் கமழும்-மணம்வீசுகிற, பொழில்-சோலைகள் சூழ்ந்த, மணி-ரத்நகசித மான, மாடமாளிகை வீதிசூழ்-மாடமாளிகையோடு கூடியதெருக்கள் சூழ்ந்த, சோதிமதில் அணி-ஒளியையுடைய மதில்களால் அலங்கரிக் கப்பெற்ற, சாந்தை-சாந்தையூரில், மெய் உண்மையாகிய, சுருதிவிதி வழியோர் தொழும்-வேதவிதியின் நெறியையுடையவர் வணங்குகிற, ஆதி-முதல்வனாய, அமரர்புராணன் ஆர்-தேவர்களுக்கு முன்னோ னாகிய, அணி-அழகாகிய, ஆவடுதுறை நம்பிநின்ற-திருவாவடுதுறை நம்பி நின்ற, நீதி அறிகிலள்-நீதியை அறியுமாற்றலில்லாதவளாகி, பொன்-பொன்மயமாகிய, நெடு-நெடிய, திண்-உறுதியாகிய, தோள்-திருப்புயங்களை, புணர-சேர, நினைக்கும்-நினையாநின்றாள், எ-று.

வி - ரை. சுருதிவிதிவழியோர் - வேதியர். புராணன் - பழையோன்; புராதனன்என்பது புராணன் என மருவியது. நம்பி-இறைவன். அறிகிலள்-முற்றெச்சம். (உ)

நினைக்குநிரந்தரனேயென்னுநிலாக்கோலச்
செஞ்சடைக்கங்கைநீர்
நனைக்குநலங்கிளர்கொன்றைமேனயம்பேசு
நன்னுதனங்கைமீர்
மனக்கின்பவெள்ளமலைமகண்மணவாள
நம்பிவண்சாந்தையூர்
தனக்கின்பனாவடுதண்டுறைத்தருணேந்து
சேகரனென்னுமே.

ப - ரை. நினைக்கும்-நினைப்பாள், நிரந்தரனே என்னும்-நிரந்தரனே யென்கிருள், நிலாகோலம்-நிலவினுல் அழகு செய்யப்பட்ட, செஞ்சடை-செவந்த சடையில், கங்கைநீர்-கங்கைநீரால், நனைக்கும்-நனைக்கப்பட்ட, நலம் கிளர்-அழகுவிளங்காநின்ற, கொன்றைமேல்-கொன்றையின் மீதுள்ள, நயம்பேசும்-தனதுவிருப்பத்தைப் பேசுகிருள், நல்நுதல்-அழகிய நெற்றியையுடைய, நங்கைமீர்-பெண்களே, மனக்கு - மனத்துக்கு, இன்பவெள்ளம் - இன்பப்பெருக்காயிருப்பவன், மலைமகள்-மலைமகளுக்கு, மணவாளநம்பி-மணுளநம்பி, வண்சாந்தையூர்தனக்கு இன்பன் - வளவிய சாந்தையூருக்கு இன்பத்தைச் செய்பவன், தண் - குளிர்ச்சிபொருந்திய, ஆவடுதுறை-திருவாவடுதுறையி லெழுந்தருளின, தருணேந்து சேகரன்-தருணேந்துசேகரன், என்னும்-என்கிருள், எ-று.

வி - ரை. நிரந்தரன்-என்று முள்ளவன். நிலாக்கோலம்-சந்திரிகையினழகு. கொன்றை ஆகுபெயராய்க் கொன்றைமலர் மாலையைக்குறித்தது. தருணேந்து சேகரன் என்பதை தருணம் இந்துசேகரன் எனப்பிரித்து, இளம்பிறையைத் தரித்த திருமுடியையுடையவன் எனப் பொருளுரைத்துக்கொள்க. (௩)

தருணேந்துசேகரனேயெனுந்தடம்பொன்னித்
தென்கரைச்சாந்தையூர்ப்
பொருணேர்ந்தசிந்தையவர்தொழப்புகழ்செல்வ
மல்குபொற்கோயிலு
ளருணேர்ந்தமர்திருவாவடுதுறையாண்ட
வாண்டகையம்மானே
தெருணேர்ந்தசித்தம்வலியவாதிலக
நுதலிதிறத்திலே.

ப-ரை. தருணேந்து சேகரனே என்னும் - தருணேந்து சேகரனே யென்கிருள், தடம்பொன்னி-விசாலமாகிய காவிரியாற்றின், தென்கரை - தென்கரையிலுள்ள, சாந்தையூர் - சாந்தையூரில், பொருள்நேர்ந்த சிந்தையவர்தொழ - மெய்ம்மைசேர்ந்த மனத்தையுடையவர் வணங்க, புகழ்செல்வம்மல்கு - புகழும் செல்வமும் நிறைந்த, பொற்கோயிலுள் - பொன்மயமான கோயிலுக்குள்ளே, அருள்நேர்ந்து - அருளோடுகூடி, அமர் - எழுந்தருளிய, திருவாவடுதுறை ஆண்ட - திருவாவடுதுறையை யாண்டருளின, ஆண்தகை அம்மானே - ஆண்தன்மையிற் சிறந்த அம்மானே, திலகம் நுதலிதிறத்

திலே - பொட்டணிந்த நெற்றியை யுடையவளாகிய என் பெண்ணின் விஷயத்திலே, தெருள்சேர்ந்த சிந்தம் - தெளிவையுடைய உன் திருவுள்ளம், வலியவா - வலிதாயிருந்தவா றென்னே, எ-று.

வி-ரை. பொருள் - மெய்ம்மை; இது "இருள்சே ரிருவினையுஞ் சேராவிறைவன், பொருள்சேர் புகழ்புரிந்தார்மாட்டு" என்னுந் திருக்குற ளுரையானுமறிக. அமர்தல் - விரும்புதலுமாம். வலியவாறு என்பது வலியவா என ஈறு தொகுத்த லாயிற்று. (௪)

திலகநுதலுமைநங்கைக்குந்திருவா
வடுதுறைநம்பிக்குங்
குலகவடியவர்க்கென்னையாட்கொடுத்தாண்டு
கொண்டகுணக்கட
லலவொன்றறிகின்றிலேமெனுமணியும்
வெண்ணீறஞ்செழுத்தலால்
வலவொன்றிலளிதற்கென்செய்கேன்வயலந்தண்
சாந்தையர்வேந்தனே.

ப-ரை. திலகநுதல்-பொட்டணிந்த நெற்றியையுடைய, உமை மங்கைக்கும் - உமாதேவிக்கும், திருவாவடுதுறை நம்பிக்கும் - திருவாவடுதுறை நம்பிக்கும், குலக அடியவர்க்கு - கூட்டமாகிய அடியவர்க்கும், என்னை ஆள்கொடுத்து - என்னை யடிமையாகக் கொடுத்து, ஆண்டுகொண்ட - ஆண்டுகொண்டருளின, குணக்கடல் அல்லது-குணசாகரமல்லாமல், ஒன்று - வேறொன்றையும், அறிகின்றிலேம் என்னும் - அறியேமென்கிறாள், அணியும் - தரிக்கிற, வெண்ணீறு - திருவெண்ணீறும், அஞ்சு எழுத்து - ஸ்ரீபஞ்சாக்ஷரமும், அல்லால் - அல்லாமல், வல்லது ஒன்று இலள் - செய்யவல்லதாகிய ஒன்றையும் உடையளல்லள், இதற்கு என்செய்கேன் - இதற்கு நான் என்செய்யக்கடவேன், வயல்அம்தண் - வயலழகும் குளிர்ச்சியுமுள்ள, சாந்தையூர்வேந்தனே - சாந்தையூர்க்கரசனே, எ-று.

வி-ரை. குலம் - கூட்டம். குலகவடியவர் - கூட்டமாகிய அழகையுடைய அடியவர் எனினுமாம். (௫)

வேந்தன்வளைத்ததுமேருவில்லரவுநாண்
வெங்கணைசெங்கண்மால்
போந்தமதிலணிமுப்புரம்பொடியாட
வேதப்புரவித்தேர்

சாந்தைமுதலயன்சாரதிகதியரு
ளென்னுமித்தையலை
யாந்தண்டிருவாவடுதுறையான்செய்கை
யாரறிகிற்பாரே.

ப-ரை. வேந்தன் - இறைவன், வளைத்தது-வளைத்தது, மேரு வில் - மேருமலையாகிய வில், அரவுநாண் - பாம்புநாண், வெம்கணை - வெவ்வியபாணம், செங்கண்மால் - திருமால், போந்தமதில் அணி முப்புரம் - உண்டாகிய மதிலழகையுடைய முப்புரம், பொடியாட - பொடிபட, வேதப்புரவித்தேர் - வேதமாகிய குதிரைபூண்டதேர், சாந்தைமுதல் - சாந்தையூர் முதல்வனுக்கு, அயன்சாரதி - பிரமன் சாரதி, கதி அருள் - கதியருளக்கடவை, என்னும்-என்று சொல்லுகிற, இத்தையலை - இந்தப்பெண்ணை, ஆம்தண் திருவாவடு துறையான் செய்கை - நீரினாலுண்டாகிய குளிர்ச்சியையுடைய திருவாவடு துறையை யுடையவனது செய்கையை, அறிகிற்பார்யார்-அறியவல்லவர் யார், எ-று.

வி-ரை. அரவு என்றது ஆதிசேடனாகிய பாம்பை. ஆம் - நீர். அறிகிற்பார் என்பதில் கில் ஆற்றற் பொருண்மை விகுதி. முதல் - பண்பாகுபெயர். (௬)

கிற்போமெனத்தக்கன்வேள்விபுக்கெடுத்தோடிக்
கெட்டவத்தேவர்கள்
சொற்போலுமெய்ப்பயன்பாவிகாளென
சொல்லிச்சொல்லுமித்தூமொழி
கற்போன்மனங்கனிவித்தவெங்கருணா
லயாவந்திடாயென்றாற்
பெற்போபெருந்திருவாவடுதுறையாளி
பேசாதொழிவதே.

ப-ரை. கிற்போம்என - யாம்வல்லோமென்று, தக்கன்வேள்வி புக்கு - தக்கனது வேள்வியிற் பிரவேசித்து, எடுத்து ஓடிகெட்ட - ஓட்டமெடுத்து அழிந்த, அத்தேவர்கள் - அந்தத் தேவர்களுடைய, சொல்போலும்-புகழ்போலும், மெய்ப்பயன் - மெய்யின்பயன், பாவிகாள் - பாவிகளே, என சொல்லி சொல்லும் - என்று பலகாற்சொல்லுகிற, இ-இந்த, தூமொழி-பரிசுத்தமாகிய வார்த்தையை யுடையவள், கல்போல் மனம்கனிவித்த - கல்லை நிகர்த்த மனத்தைக்

கணியச்செய்த, எம் கருணாலயா - எமது கருணாலயனே, வந்திடாய் என்றால் - வருவாயாகவென்றால், பெருந் திருவாவடுதுறையாளி - பெரிய திருவாவடுதுறையை யாள்வோனே, பேசாதொழிவது - பேசாதிருப்பது, பெற்போ-உனக்கு அழகோ, எ-று.

வி-ரை. சொல்-சொல்லப்படுவது (புகழ்). கருணாலயன் - கருணைக்கு இருப்பிடமாயுள்ளவன். பெற்பு - அழகு. (எ)

ஒழிவொன்றிலாவுண்மைவண்ணமுமூலப்பில
ளூறின்பவெள்ளமு
மொழிவொன்றிலாப்பொன்னித்தீர்த்தமுமுனி
கோடிகோடியாமூர்த்தியு
மழிவொன்றிலாச்செல்வச்சாந்தையூரணியா
வடுதுறையாடினா
ளிழிவொன்றிலாவகையெய்திநின்றிறுமாக்கு
மென்னிளமானனே.

ப-ரை. ஒழிவு ஒன்று இல்லா - ஒழிவுசிறிதுமில்லாத, உண்மைவண்ணமும்-உண்மைத்தன்மையும், ஊறு - சுரக்கின்ற, இன்பவெள்ளமும்-இன்பப்பெருக்கும், உலப்பு இலள்-கெடுதலில்லாதவள், மொழிவு ஒன்றிலா பொன்னிதீர்த்தமும்-சொல்லப்படாத பெருமையுள்ள காவிரிதீர்த்தமும், முனிகோடி கோடி ஆம் மூர்த்தியும்-கோடிகோடியாகிய முனியுருவங்களும், அழிவு ஒன்று இல்லா - அழிவுசிறிது மில்லாத, செல்வம் - செல்வப்பெருக்குள்ள, சாந்தையூர்-சாந்தையூரை, அணி-அலங்கரிக்கிற, ஆவடுதுறை ஆடினாள்-திருவாவடுதுறையை யடைந்தாள், இழிவு ஒன்று இல்லாவகை - இழிவுசிறிது மில்லாதவண்ணம், எய்திநின்று - அடைந்துநின்று, என் இளமான் அனே - என் இளமான்போல்வாளாகியபெண், இறுமாக்கும்-செருக்காநின்றாள், எ-று.

வி-ரை. ஒன்று இவ்விடத்துச் சிறிதென்னும் பொருளில் வந்தது. உலப்பு-கெடுதி. மூர்த்தி - உரு. இளமான் - உவமையாகு பெயர். (அ)

மானேர்கலைகளையுங்கவர்ந்துளங்கொள்ளை
கொள்ளவழக்குண்டே
தேனேயமுதேயென்சித்தமேசிவலோக
நாயகச்செல்வமே

யானேயலம்புபுனற்பொன்னியணியா
வடுதுறையன்பர்தங்
கோனேநின்மெய்யடியார்மனக்கருத்தை
முடித்திடுங்குன்றமே.

ப - ரை. மான்-என் பெண்ணினது, எர்-அழகாகிய, கலைவளை யும் கவர்ந்து - கலையையும் வளையையும் கவர்ந்துகொண்டு, உள்ளம் - மனத்தையும், கொள்ளைகொள்ள-கொள்ளை கொள்ளும்படி, வழக்கு உண்டே-நியாயமுண்டோ, தேனே - தேனே, அமுதே-அமிர்தமே, என்சித்தமே - என்மனமே, சிவலோகநாயகச்செல்வமே - சிவலோக நாயகனாகிய செல்வமே, ஆனே-இடபமே, அலம்பு புனல் பொன்னி- சத்திக்கிற நீரையுடைய காவிரியாற்றின், அணி - அழகுவாய்ந்த, ஆவடுதுறை - திருவாவடுதுறையில், அன்பர்தம்கோனே - அன்பர்க் கிறைவனே, நின் மெய்யடியார் மனக்கருத்தை - உன் மெய்யடியா ருடைய உள்ளக் கருத்தை, முடித்திடும் - முற்றுவித்துத் தரவல்ல, குன்றமே - மலையே, எ-று.

வி - ரை. கலை-ஆடை. கலைவளை கவர்தலாவது கலைவளைகள் நெகிழச்செய்தல். வழக்குண்டே என்பதில் ஏகாரம் வினாவும் எதிர் மறையுமாம். (க)

குன்றேந்திகோகனதத்தயனறியா
நெறியென்னைக்கூட்டினா
யென்றேங்கியேங்கியழைக்கின்றாளிளவல்லி
யெல்லைகடந்தன
ளன்றேயலம்புபுனற்பொன்னியணியா
வடுதுறையாடினா
ணன்றேயிவணம்பரமல்லணவலோக
நாயகன்பாலளே.

ப-ரை. குன்று எந்தி-குன்றேந்தினவனாகிய திருமாலும், கோக னதத்து-தாமரைமலரை யாசனமாகவுடைய, அயன்-பிரமனும், அறி யாநெறி - அறியாதவழியில், என்னை கூட்டினாய் என்று - என்னைச் சேர்த்தாயென்று, எங்கி எங்கி அழைக்கின்றாள் - இரங்கி இரங்கி யழைக்கிறாள், இளவல்லி இளங்கொடி போல்வாளாகிய என் பெண் ணணவள், எல்லை கடந்தனள்-வரம்பு கடந்தாள், அன்றே - அப்பொ ழுதே, அலம்பு புனல்பொன்னி - சத்திக்கிற நீரையுடைய காவிரி

யாற்றினல், அணி - அலங்கரிக்கப்பட்ட, ஆவடுதுறை ஆடினள் - திருவாவடுதுறையை அடைந்தாள், நன்றே - நன்மையே, இவள் நம்பரம் அல்லள்-இவள் நமது பக்ஷத்தள் அல்லள், நவலோகநாயகன் பாலள் - நூதநமாகிய லோகநாதன் பக்ஷத்தாள், எ-று.

வி-ரை. குன்றேந்தியென்பதில் ஏந்திவினையாலணையும்பெயர். இளவல்லி - பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். நவம் - புதுமை. (௧௦)

பாலுமமுதமுந்தேனுமாயானந்தந்
தந்துள்ளேபாலிப்பான்
போலுமெனருயிர்ப்போகமாம்புரகால
காமபுராந்தகன்
சேலுங்கயலுந்திளைக்குநீர்த்திருவா
வடுதுறைவேந்தனே
டாலுமதற்கேமுதலுமாமறிந்தோ
மிவைபொய்யாததே.

ப-ரை. பாலும் அமுதமும் தேனும் ஆய் - பாலும் அமிர்தமும் தேனுமாகி, உள்ளே ஆனந்தம்தந்து-மனத்திற்கு இன்பங்கொடுத்து, பாலிப்பான்போலும்-காப்பாற்றுவான்போலும், என் ஆர் உயிர்-எனது அரியவுயிர்க்கு, போகம் ஆம்-அநுபவ ரூபமாகிய, புரகால காமபுராந்தகன்-முப்புரம் யமன் காமன் இவர்களுக்கு யமனானவன், சேலும் - சேல் மீனும், கயலும் - கடல் மீனும், திளைக்கும் நீர் - விளையாடுகிற நீரையுடைய, திருவாவடுதுறை வேந்தனொடு - திருவாவடுதுறைக் கரசனொடு, ஆலுமதற்கே - விளையாடுதற்கே, முதலுமாம் - முந்துவாளாம், அரிவை பொய்யாதது அறிந்தோம் - இந்தப்பெண் பொய்க்காததை யறிந்துகொண்டோம், எ-று.

வி-ரை. பாலித்தல்-காப்பாற்றல். காமபுராந்தகன் என்பதற்கு காமனது சரீரத்தை யெரித்தவன் எனப்பொருள் கூறுக. புரம்-சரீரம்; இது எரிபட்டபிறகு இவனுக்கு அநங்கன் எனப்பெயருண்டாயிற்று. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## ௩. திருவிடைக்கழி.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மாலுலாமனந்தந்தென்கையிற்சங்கம்
வவ்வினான்மலைமகண்மதலை
மேலுலாந்தேவர்குலமுழுதாளுங்
குமரவேள்வள்ளிதன்மணாளன்
சேலுலாங்கழனித்திருவிடைக்கழியிற்
றிருக்குராநீழற்கீழ்நின்ற
வேலுலாந்தடக்கைவேந்தனென்சேந்த
னென்னுமென்மெல்லியலிவளே.

ப-ரை. மால் உலாம் மனம் தந்து - ஆசையுள்ள மனத்தைக் கொடுத்து, என் கையில் சங்கம் வவ்வினான் - என்கையிலிருந்த சங்கவளையலைக் கவர்ந்துகொண்டான், (அவன் யாரெனின்) மலைமகள் மதலை - மலைமகளுக்குப் புதல்வன், மேல் உலாம் - மேலுலகில் வாழ்கின்ற, தேவர்குலம் முழுது - தேவர்குலமுழுதும், ஆளும் - ஆள்கின்ற, குமரவேள் - குமாரக்கடவுள், வள்ளி தன் மணாளன் - வள்ளிமணவாளன், சேல்உலாம் கழனி - சேல்மீன்கள் சஞ்சரிக்கிற கழனிகளையுடைய, திருவிடைக்கழியில் - திருவிடைக்கழியினிடத்தே, திருக்குராநீழற் கீழ்நின்ற - திருக்குராமரத்தின் நிழலில் நிலைபெற்ற, வேல்உலாம் - வேலேந்திய, தடக்கை வேந்தன் - பெரிய கையினையுடைய அரசன், என்சேந்தன் - என்சேந்தன், என்னும் - என்று சொல்லாநின்றாள், (யாரெனின்) என்மெல்லியல் இவள் - என்மெல்லியலாகிய இவள், எ - று.

வி-ரை. மேல் - பண்பாகுபெயர். திருவிடைக்கழி - ஓர் திருப்பதி. மெல்லியல் - மென்மையாகிய சாயலையுடையவள்; இது பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். (௧)

இவளைவாரிளமென்கொங்கைபீர்பொங்க
வெழில்கவர்ந்தானிளங்காளை
கவளமாகரிமேற்கவரிசூழ்குடைக்கீழ்க்
கனகக்குன்றெனவருங்கள்வன்

றிவளமாளிகைசூழ்திருவிடைக்கழியிற்
திருக்குராநீழற்கீழ்நின்ற
குவளைமாமலர்க்கணங்கையானைக்குங்
குழகனல்லழகனங்கோவே.

ப-ரை. இளங்காளை - இளங்காளை போல்பவன், கவளம் - கவளங்கொள்ளுகிற, மா கரிமேல்-பெரியயானையின்மீது, கவரி சூழ் - சவரிகள் சூழ்ந்த, குடைக்கீழ்-குடையின்கீழே, கனகக் குன்று என - பொன்மலைபோல, வரும் - வருகிற, கள்வன் - திருடன், திவள - விளங்க, மாளிகை சூழ்-மாளிகைகள் சூழ்ந்த, திருவிடைக்கழியில் - திருவிடைக்கழியில், திருக்குரா நீழற்கீழ் நின்ற - திருக்குராமரத்தி னிழலில் நிலைபெற்ற, குவளை மா மலர் - நீலோற்பலத்தின் அழகிய மலர்போன்ற, கண் - கண்களையுடைய, நங்கை யானைக்கும் - பெண்ணாகிய தெய்வயானைக்கும், குழகன் - மணாளன், நல் அழகன் - நல்ல அழகன், நம் கோ-எம்மிறைவன், இவளை-இந்தப் பெண்ணை, வார் இள-கச்சணிந்த இளமைபொருந்திய, மெல் கொங்கை - மெல்லிய தனங்களின்மீது, பீர் பொங்க-பசலைநிறம் அதிகரிக்க, எழில் கவர்ந்தான் - இவளது இயற்கை யழகைக்கவர்ந்துகொண்டான், எ - று.

வி-ரை. பீர் - பசலைநிறம்; இது பசப்பு எனவும்படும். இதனை மாமையெனவுங் கூறுவர்; வடநூலார் இதனை வைவர்ண்யம் என்பர்.

கோவினைப்பவளக்குழமணக்கோலக்
குழாங்கள்சூழ்கோழிவெல்கொடியோன்
காவனற்சேனையென்னக்காப்பவனென்
பொன்னைமேகலைகவர்வானே
தேவினற்றலைவன்றிருவிடைக்கழியிற்
திருக்குராநீழற்கீழ்நின்ற
தூவிநற்பீலிமாமயிலூருஞ்
சுப்பிரமண்ணியன்றானே.

ப-ரை. கோவினை - இறைமைத் தொழிலையுடைய, பவளம் - பவளம் போன்ற, குழ - இளமையாகிய, மணக்கோலக் குழாங்கள் சூழ் - மணக்கோலத்தை யுடைய கூட்டங்கள் சூழ்ந்த, வெல்-வெல் லுந் தொழி லமைந்த, கோழிக்கொடியோன் - கோழிக் கொடியை யுடையவன், காவல் நற்சேனை என்ன - சேனாபதியென்று சொல்லு தலும், காப்பவன் - காப்பாற்றுவோன், தேவின் நல் தலைவன்-தெய்

வங்களுக்கு நல்லதலைவன், திருவிடைக்கழியில் —, திருக்குராநீழற் கீழ்நின்ற —, தூவி - இறகினையும், நல்பீலி - நல்ல தோகையினையும் உடைய, மாமயில் ஊரும் - பெரிய, மயில் வாகனத்தை நடத்துகிற, சுப்பிரமண்ணியன் - சுப்பிரமணியக்கடவுள், என் பொன்னை - என் பெண்ணை, மேகலை கவர்வானே - மேகலை கவர்வானோ, எ-று.

வி-ரை. வெல்லுதல் - மேம்படுதல். தேவு - பண்பாகுபெயர். பொன் - உவமையாகுபெயர். கவர்வானே யென்னு மேகாரம் வினா.

தானமர்பொருதுவானவர்சேனை
மடியச்சூர்மார்பினைத்தடிந்தோன்
மானமர்தடக்கைவள்ளறன்பிள்ளை
மறைநிறைசட்டறம்வளரத்
தேனமர்பொழில்சூழ்திருவிடைக்கழியிற்
றிருக்குராநீழற்கீழ்நின்ற
கோனமர்கூத்தன்குலவிளங்களிறென்
கொடிக்கிடர்பயப்பதுங்குணமே.

ப-ரை. தான் அமர் பொருது - தான் போர்செய்து, வானவர் சேனை மடிய - தேவர் சேனைகள் மடியாநிற்க (கண்டு), சூர் மார்பினை தடிந்தோன் - சூரனது மார்பைப் பிளந்தவன், மான் அமர் தடக்கை வள்ளல் தன் பிள்ளை - மான்பொருந்திய பெரிய கையினையுடைய சிவபெருமானுக்குப் புதல்வன், மறை நிறை - வேதங்களில் நிரம்பின, சட்ட அறம் வளர - சட்டமாகிய அறம் வளரும்படி, தேன் அமர்பொழில் சூழ் - வண்டுகள் விரும்புகிற சோலைகள் சூழ்ந்த, திருவிடைக் கழியில் —, திருக்குராநீழற் கீழ்நின்ற —, கோன் அமர் கூத்தன் - இறைவனும் கூத்தை விரும்பினவனுமாகிய சிவபிரானது, குலம் இளங் களிறு - மேன்மை பொருந்திய இளைய யானையானது, என்கொடிக்கு - என் பெண்ணுக்கு, இடர் பயப்பதும் - துன்பமுண்டாக்குவதும், குணமே - குணமோ, எ-று.

வி-ரை. சூர் - சூரபன்மன். சட்ட அறம் சட்டறம் என நிலைமொழி யீற்றகரம் தொகுத்தலாயிற்று. அமர்தல் - விரும்புதல். இளங்களிறு என்றது இளமையாகிய யானைக்கன்று போன்ற முருகக் கடவுளை.

(௪)

குணமணிக்குருளைக்கொவ்வைவாய்மடந்தை
படுமிடர்குறிக்கொளாதழகோ

மணமணிமறையோர்வானவர்வைய
முய்யமற்றடியனேன்வாழத்
திணமணிமாடத்திருவிடைக்கழியிற்
றிருக்குராநீழற்கீழ்நின்ற
கணமணிபொருநீர்க்கங்கைதன்சிறுவன்
கணபதிபின்னிளங்கிளேயே.

ப-ரை. மணம் அணி மறையோர் - மணத்திஞல் அழகுபெற்ற வேதியர், வானவர்-தேவர், வையம்-உலகம், (இவர்கள்) உய்ய-பிழைக்கும்படியாகவும், அடியனேன் வாழ-அடியேன் வாழும்படியாகவும், திண் அம் மணி மாடம்-உறுதியாகிய அழகிய ரத்நமாடங்கள் நெருங்கின, திருவிடைக் கழியில்—, திருக்குரா நீழற்கீழ் நின்ற—, கணமணிபொரும் நீர் - கூட்டமாகிய மணிகளைக் கொழிக்கின்ற நீரையுடைய, கங்கைதன் சிறுவன்-கங்காதேவியின் சிறுவனுகிய, கணபதி பின் - கணபதிக்குப் பின்பிறந்த, இளங்கிளை - தம்பியாகிய சுப்பிரமணியன், குணம் அணி குருளை - குணத்திஞல் அழகிய சிறுமி, கொவ்வை வாய் மடந்தை - கொவ்வைக் கனிபோலும் அதரத்தையுடைய இளம்பெண், (இவள்) படும் இடர்-படுந்துன்பத்தை, குறிக்கொளாது-குறிக்கொண்டு காவாதிருப்பது, அழகோ - அழகாமோ, எ - று.

வி-ரை. திண்ணம் - உறுதி, அது திணமென்றிடை தொகுத்ததெனினுமாம். குணமணி - குணரத்நம் எனினுமமையும். கொவ்வை - பொருளாகுபெயர், இதனை முதலாகுபெயரெனவுங் கூறுப.

கிளையிளஞ்சேயக்கிரிதனைக்கீண்ட
வாண்டகைகேடில்வேற்செல்வன்
வளையிளம்பிறைச்செஞ்சடையரன்மதலை
கார்நிறமாறிருமருகன்
றிளையிளம்பொழில்சூழ்திருவிடைக்கழியிற்
றிருக்குராநீழற்கீழ்நின்ற
முளையிளங்களிறென்மொய்குழற்சிறுமிக்
கருளுங்கொன்முருகவேள்பரிந்தே.

ப-ரை. கிளை இளஞ்சேய்-கிளையாகிய இளஞ்சேய், அக்கிரிதனை கீண்ட - அந்தக் கிரவுஞ்சமலையைப் பிளந்த, ஆண்டகை-ஆண்மை

யிற் சிறந்தோன், கேடு இல்-கெடுதியில்லாத, வேல் செல்வன்-வேற் படையையுடைய செல்வன், வளை - வளைந்த, இளம் பிறை - இளம் பிறையை யணிந்த, செஞ்சடை-செவந்த சடையையுடைய; அரன் மதலை - சிவபிரானுக்குப் புதல்வன், கார் நிறம்-மேகநிறத்தையுடைய, மால் - திருமாலுக்கு; திருமருகன் - திருமருகன், நிரை இளம்பொழில் சூழ் - நிறைந்த இளஞ்சோலைகள் சூழ்ந்த, திருவிடைக்கழியில் —, திருக்குராநீழற் கீழ்நின்ற—, முளை இளங்களிறு - முளைக்கின்ற இளைய யானை, முருகவேள்-முருகவேள், என் மொய் குழல் சிறுமிக்கு - எனது நெருங்கின கூந்தலையுடைய சிறுமிக்கு, பரிந்து அருளுங்கொல் - இரங்கியருளுவனோ, எ - று.

வி-ரை. சேய் - முருகவேளுக்கோர் பரியாய நாமம். கிளை-அன்பர்க் குறவாயிருப்பவன். (சு)

பரிந்தசெஞ்சுடரோபரிதியோமின்னோ
பவளத்தின்குழவியோபசும்பொன்
சொரிந்தசிந்துரமோதூமணித்திரளோ
சுந்தரத்தரசிதுவென்னத்
தெரிந்தவைதிகர்வாழ்திருவிடைக்கழியிற்
றிருக்குராநீழற்கீழ்நின்ற
வரிந்தவெஞ்சிலைக்கைமைந்தனையஞ்சொன்
மையல்கொண்டையுறும்வகையே.

ப-ரை. பரிந்த - இரங்குதற்குரிய, செஞ்சுடரோ - செஞ்சுடர் தானோ, பரிதியோ - சூரியனோ, மின்னோ - மின்னலோ, பவளத்தின் குழவியோ - பவளக்கொழுந்தோ, பசும்பொன் சொரிந்த-பசும்பொன்னைப் பொழிந்த, சிந்துரமோ-சிந்தூரமோ, தூ மணித் திரளோ-பரிசுத்தமாகிய மாணிக்கத் தொகுதியோ, சுந்தரத்து அரசு - அழகுக்கு அரசாவது, இது என்ன - இதுவென்று, தெரிந்த - அறிந்த, வைதிகர் வாழ் - வைதிகர் வாழ்கின்ற, திருவிடைக்கழியில்—, திருக்குராநீழற் கீழ்நின்ற—, வரிந்த-வரிந்து கட்டின, வெம் சிலை - வெவ்விய வில்லைக்கொண்ட, கை - கையையுடைய, மைந்தனை - திறலினை, அம் சொல் - அழகிய சொல்லை யுடையவளாகிய என் பெண்ணானவள், மையல் கொண்டு - மயக்கங் கொண்டு, ஐயுறும் வகை - ஐயுறும்வித மிருந்தவா றென்னை, எ - று.

வி-ரை. வைதிகர் - வேதமார்க்கத்தை யுடையவர்; மைந்தன் - திண்ணியன் எனினுமாம்; மைந்து - திண்மை. அஞ்சொல் - பண்

புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப் பெயர். (எ)

வகைமிகுமசுரர்மாளவந் * துழிஞை
வானமர்விளைத்ததாளாளன்
புகைமிகுமனலிற்புரம்பொடிபடுத்த
பொன்மலைவில்லிதன்புதல்வன்
திகைமிகுகீர்த்தித்திருவிடைக்கழியிற்
றிருக்குராநீழற்கீழ்நின்ற
தொகைமிகுநாமத்தவன்றிருவடிக்கென்
றுடியிடைமடறொடங்கினளே.

ப-ரை. வகை மிகும் - வகுப்புக்களால் மிகுந்த, அசுரர் - அசுரர்கள், மாள - மடியும்படி, வந்து - அவதரித்து, உழிஞை - உழிஞை மாலையைத் தரித்து, வான் அமர் விளைத்த - பெரிய போரைச்செய்த, தாளாளன் - முயற்சியுடையோன், புகை மிகும் அனலின் - புகை மிகுந்த நெருப்பினால், புரம் பொடிபடுத்த - முப்புரத்தைப் பொடியாக்கின, பொன் மலை வில்லி தன் புதல்வன் - பொன்மலையை வில்லாக வுடையவனாகிய சிவபிரானுக்குப் புதல்வன், திகை மிகு கீர்த்தி - திக்குக்களைக் கடந்த புகழையுடைய, திருவிடைக்கழியில்—, திருக்குராநீழற்கீழ் நின்ற—, தொகை மிகும் - தொகை மிகுந்த, நாமத்தவன் - திருநாமங்களை யுடையவன், (அவனது) திருவடிக்கு - திருவடிகளுக்கு, என் துடியிடை - என் பெண்ணானவள், மடல் தொடங்கினள் - மடலேறத் தொடங்கினாள், எ - று.

வி-ரை. வகை மிகும் அசுரர் - தானவர் தகுவர் தைத்தியர் முதலானோர். தாள் - முயற்சி. துடியிடை - உவமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். (அ)

தொடங்கினண்மடலென்றணிமுடித்தொங்கற்
புறவிதழாகிலுமருளா
விடங்கொளக்குறத்திதிறத்திலுமிறைவன்
மறத்தொழில்வார்த்தையுமுடையன்
திடங்கொள்வைதிகர்வாழ்திருவிடைக்கழியிற்
றிருக்குராநீழற்கீழ்நின்ற

* உழிஞை என்பது:—“முடிமிசை யுழிஞை சூடியொன்னார், கொடிநுடங் காரெயில் கொளக்கரு தின்று” என்றாகலின்.

மடங்கலைமலரும்பன்னிருநயனத்
 தறுமுகத்தமுதினைமருண்டே.

ப-ரை. திடம் கொள் - மனவுறுதியைக் கொண்ட, வைதிகர் வாழ்-வைதிகர் வாழ்கின்ற, திருவிடைக்கழியில்—, திருக்குராநீழற் கீழ்நின்ற—, மடங்கலை - சிங்கத்தை, மலரும் - மலர்ந்த, பன்னிரு நயனத்து-பன்னிரண்டு கண்களையும், அறுமுகத்து-ஆறுமுகங்களையுமுடைய, அமுதினை - அமிர்தத்தை, மருண்டு - மனந்திகைத்து, மடல் தொடங்கினள் என்று-மடலூரத்தொடங்கினாளென்று, அணி-தானணிந்திருக்கிற, முடி தொங்கல் - முடிமாலையின், புறவிதழாகிலும் - புறவிதழையாயினும், அருளான் - அருள்செய்யான், இடம் கொள் அ குறத்தி திறத்திலும்-இடங்கொண்ட அந்தக் குறத்தியிடத்திலும், இறைவன் - இறைவனானவன், மறத்தொழில் வார்த்தையும் உடையன்-கோவத்தொழிலோடு கூடிய சொல்லையுமுடையவனாயிராநின்றான், எ - று.

வி-ரை. தொங்கல் -மாலை. புறவிதழைப் புல்லியென்பர். மடங்கல் - சிங்கம். (க)

மருண்டுறைகோயின்மல்குநன்குன்றப்
 பொழில்வளர்மகிழ்திருப்பிடவூர்
வெருண்டமான்விழியார்க்கருள்செயாவிடுமே
 விடலையேயெவர்க்குமெய்யன்பர்
தெருண்டவைதிகர்வாழ்திருவிடைக்கழியிற்
 றிருக்குராநீழற்கீழ்நின்ற
குருண்டபூங்குஞ்சிப்பிறைச்சடைமுடிமுக்
 கண்ணுடைக்கோமளக்கொழுந்தே.

ப-ரை மெய்யன்பர் - மெய்யன்பராகிய, தெருண்ட வைதிகர் வாழ்-தெளிந்த வைதிகர் வாழ்கின்ற, திருவிடைக்கழியில்—, திருக்குராநீழற் கீழ்நின்ற—, குருண்ட-சுருண்ட, பூ குஞ்சி-பொலிவாகிய மயிரினையும், பிறை - பிறையைத்தரித்த, சடை முடி - சடை முடியையும், முக்கண் - மூன்று கண்களையும், உடை - உடைய, கோமளக்கொழுந்து-கோமளக்கொழுந்தானது, மருண்டு உறை கோவில்-மருண்டு வாழ்கின்ற கோயிலும், மல்கும் நல்குன்றம்-நிறைந்த நல்ல மலையும், பொழில் வளர் - சோலைகள் வளர்ந்த, மகிழ் - மகிழ்ச்சிக்குரிய, திருப்பிடவூர் - திருப்பிடவூரில், வெருண்ட மான் விழியார்

க்கு - வெருண்ட மானினது நோக்கத்தையுடைய மாதர்க்கு, அருள் செயாவிடுமே - அருள் செய்யாமல் விடுவனே, எவர்க்கும் விடலையே - யாவரினும் காளைப்பருவ முடையவனாயிற்றே, எ - று.

வி-ரை. கோமளக்கொழுந்து என்றது முருகவேளை. (௧0)

கொழுந்திரள்வாயார்தாய்மொழியாகத்
 தூமொழியமரர்கோமகனைச்
செழுந்திரட்சோதிச்செப்புறைச்சேந்தன்
 வாய்ந்தசொல்லிவைசுவாமியையே
செழுந்தடம்பொழில்சூழ்திருவிடைக்கழியிற்
 றிருக்குராநீழற்கீழ்நின்ற
வெழுங்கதிரொளியையேத்துவார்கேட்பா
 ரிடர்கெடுமாலுலாமனமே.

ப-ரை. கொழுந்திரள் வாய் ஆர்-கொழுமை திரண்ட வாயினையுடையாராகிய, தாய் மொழியாக - தாய்மாருடைய வார்த்தையாக, தூ மொழி - பரிசுத்தமான மொழியையுடைய, அமரர் கோமகனை - தேவர்களுக்கிறைவனை, செழுந்திரள் - செழுந்திரளாகிய, சோதிச் செப்பு உறை - ஒளியாகிய செப்பில் தங்குகிற, சேந்தன்-சேந்தனது, வாய்ந்தசொல் இவை - பொருந்திய சொல்லாகிய இவைகளைக்கொண்டு, சுவாமியை - சுப்பிரமணியனை, செழு-செழிய, தடம் பொழில் சூழ் - பெரிய சோலைகள் சூழ்ந்த, திருவிடைக்கழியில்—, திருக்குரா நீழற் கீழ்நின்ற—, எழும் கதிரொளியை-உதிக்கின்ற பாலசூரியனது ஒளியை, ஏத்துவார் - துதிப்பவர்களும், கேட்பார் - கேட்பவர்களும் (ஆகிய இவர்களுடைய), மால் உலாம் மனம் - மயக்கத்தையுடைய மனமானது, இடர் கெடும் - துன்பமொழியப் பெறும், எ - று.

வி-ரை. சேந்தன் - செந்நிறமுடையோன். சுவாமி யென்பது முருகக்கடவுளுக்கோர் பரியாயத் திருநாமம். (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

# கருவூர்த்தேவர் திருவிசைப்பா.

## ௧. கோயில்.

பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

கணம்விரிகுடுமிச்செம்மணிக்கவைநாக்
    கறையணற்கட்செவிப்பகுவாய்ப்
பணம்விரிதுத்திப்பொறிகொள்வெள்ளெயிற்றுப்
    பாம்பணிபரமர்தங்கோயில்
மணம்விரிதருதேமாம்பொழின்மொழுப்பின்
    மழைதவழ்வளரிளங்கமுகந்
திணர்நிரையரும்புபெரும்பற்றப்புலியூர்த்
    திருவளர்திருச்சிற்றம்பலமே.

ப-ரை. கணம் - கூட்டமாக, விரி - விரிந்த, குடுமி-உச்சியில், செம்மணி - மாணிக்கத்தையும், கவை நா - பிளவுபட்ட நாவையும், கறை அணல் - விடம்பொருந்திய மேல்வாயையும், கண் செவி-கண்ணாகிய செவியையும், பகு வாய்-பிளந்த வாயையும், பணம் விரி - விரிந்த படத்தில், துத்தி பொறி கொள்-துத்திப் பொறிகளையும் கொண்ட, வெள் எயிறு-வெண்மையாகிய பற்களையுடைய, பாம்பு - பாம்பை, அணி - ஆபரணமாகத் தரித்த, பரமர் தம் கோயில் - சிவபெருமானது கோயிலாயிருப்பது, மணம் விரிதரு-மணம் பரவிய, தேமாம் பொழில் மொழுப்பில் - தேமாமரச்சோலையினுச்சியில், மழை தவழ்-மேகங்கள் தவழ்கிற, வளர்-வளராநின்ற, இளங்கமுகந்திணர்-இளங்கமுகந்தாறுகள், நிரை அரும்பு - வரிசையாயரும்புகிற, பெரும்பற்றப்புலியூர்-பெரும்பற்றப்புலியூரிலுள்ள, திரு வளர் திருச்சிற்றம்பலமே - அழகு வளராநின்ற திருச்சிற்றம்பலமேயாம், எ - று.

வி ரை. விரிதரு என்பதற்குப் பகுதி விரிதா. (௧)

இவ்வரும்பிறவிப்பௌவநீர்நீந்து
    ஏழையேற்கென்னுடன்பிறந்த

வைவரும்பகையேயார்துணையென்று
லஞ்சலென்றருள்செய்வான்கோயில்
கைவரும்பழனங்குழைத்தசெஞ்சாலிக்
கடைசியர்களைதருநீலஞ்
செய்வரப்பரும்புபெரும்பற்றப்புலியூர்த்
திருவளர்திருச்சிற்றம்பலமே.

ப-ரை. இ - இந்த, அரு - கடத்தற் கருமையாகிய, பிறவி வௌவம் நீர்-பிறவிக்கடலினீரை, நீந்தும்-நீந்துகின்ற, ஏழையேற்கு-ஏழையாகிய எனக்கு, என்னுடன் பிறந்த ஐவரும் - என்னோடு பிறந்த ஐவரும், பகையே-பகைவரே; யார் துணை என்றால் - எனக்குத் துணையாவார் யாவர் என்றால், அஞ்சல் என்று-பயப்படாதேயென்று, அருள் செய்வான் கோயில் - அருள்செய்பவனாகிய சிவபெருமானுக்குக் கோயிலாயிருப்பது, கைவரும்பழனம்-தாம் பழகின வயல்களில், குழைத்த - செழித்த, செஞ்சாலி - செந்நெற்பயிரில், கடைசியர்-கடைசியர், களைதரும் - களைந்தெறிந்த, நீலம் - நீலோற்பலங்கள், செய் வரம்பு-கழனி வரம்புகளில், அரும்பு - அரும்புகிற, பெரும்பற்றப்புலியூர்—, திருவளர் திருச்சிற்றம்பலமே—, எ - று.

வி-ரை. என்னுடன் பிறந்த ஐவரும் என்றது ஐம்பொறிகளை; ஐம்பொறிகளாவன-மெய் வாய் கண் மூக்கு செவி யென்பன. இவை தத்தம் விடயங்களாகிய சத்தாதிகளிற் கொண்டுபோய் ஆன்மாக்களுக்குப் பிறவித் துன்பத்தை யுண்டாக்கலால் 'ஐவரும் பகையே' என்றார். (உ)

தாயினேரிரங்குந்தலைவவோவென்றுந்
தமியனேன்றுணைவவோவென்றும்
நாயினேனிருந்துபுலம்பினாலிரங்கி
நலம்புரிபரமர்தங்கோயில்
வாயினேரரும்புமணிமுருக்கலர
வளரிளஞ்சோலைமாந்தளிர்செந்
தீயினேரரும்புபெரும்பற்றப்புலியூர்த்
திருவளர்திருச்சிற்றம்பலமே.

ப-ரை. தாயின் நேர் இரங்கும்-தாய்க்குச் சமானமாக இரங்குகிற, தலைவ ஓ என்றும் - தலைவனே ஓ வென்றும், தமியனேன் துணைவ - தனியேனுக்குத் துணைவனே, ஓ என்றும்-ஓ வென்றும், நாயினேன்

இருந்து புலம்பினல் - நாயேனிருந்து புலம்பினல், இரங்கி-இரங்கி, நலம்புரி - எனக்கு நன்மையைச் செய்கிற, பரமர்தம் கோயில்-பரம ருக்குக் கோயிலா யிருப்பது; வாயில் நேர் அரும்பும் - வாயிலுக்கு நேராக அரும்புகிற, மணி முருக்கு அலர - அழகிய முருக்கமலர்கள் மலர, வளர் இளஞ்சோலை - வளராநின்ற இளஞ்சோலைகளில், மாந் தளிர் - மாந்தளிரானது, செந்தீயின் நேர் அரும்பு - செந்தீக்கு நிக ராக அரும்புகிற. பெரும்பற்றப்புலியூர்—, திருவளர் திருச்சிற்றம் பலமே—, எ - று.

வி-ரை. வாயின் நேர் அரும்புமணி முருக்கு அலர என்பதற்கு மாதர் அதரத்துக்கு நிகராக அரும்புகிற அழகிய முருக்கம்பூ மலர என்றுரைத்தலுமாம். (ந)

துந்துபிகுழல்யாழ்மொந்தைவானியம்பத்
தொடர்ந்திருடியர்கணந்துதிப்ப
நந்திகைமுழவமுகிலெனமுழங்க
நடம்புரிபரமர்தங்கோயி
லந்தியின்மறைநான்காரணம்பொதிந்த
வரும்பெறன்மறைப்பொருண்மறையோர்
சிந்தையிலரும்பும்பெரும்பற்றப்புலியூர்த்
திருவளர்திருச்சிற்றம்பலமே.

ப-ரை. துந்துபி - துந்துமி குழல், யாழ் - யாழ், மொந்தை - மொந்தை, வான் இயம்ப - ஆகாயத்தில் ஒலிக்க, இருடியர் கணம் - இருடியர் கூட்டம், தொடர்ந்து துதிப்ப-தொடர்ந்து வாழ்த்த, நந்தி கை முழவம் - நந்தியின் கையிலுள்ள முழவமானது, முகில் என முழங்க - மேகம்போல முழங்க, நடம்புரி - திருநடனஞ் செய்கிற, பரமர் தம்கோயில் - பரமருக்குக் கோயிலாயிருப்பது; அந்தியில்-அந் திக்காலத்தில், மறை நான்கு-வேதங்கள் நான்கு, ஆரணம் பொதி ந்த - ஆரணங்களோடு கூடின, அரும்பெறல்-பெறுதற்கரிய, மறைப் பொருள் - வேதார்த்தத்தை யறிந்த, மறையோர் சிந்தையில் அரும் பும் - வேதியர் மனத்தில் உதிக்கிற, பெரும்பற்றப்புலியூர்—, திரு வளர் திருச்சிற்றம்பலமே, எ - று.

வி-ரை. வானியம்ப என்றது சுவர்க்கலோகத்தாரால் முழக்கப் பட வென்றபடி. சிந்தையி லரும்புதலாவது அவர் மனத்தைவிட்டு நீங்காதிருத்தல். ஆரணம் - வேதத்தில் ஞானபாகம். (ச)

கண்பனியரும்பக்கைகண்மொட்டித்தென்
களைகணேயோலமென்றேலிட்
டென்பெலாமுருகுமன்பர்தங்கூட்டத்
தென்னையும்புணர்ப்பவன்கோயில்
பண்டலதெளிதேன்பாடிநின்றாடப்
பனிமலர்ச்சோலைசூழ்மொழுப்பிற்
செண்பகமரும்பும்பெரும்பற்றபுலியூர்த்
திருவளர்திருச்சிற்றம்பலமே.

ப-ரை. கண் - கண்கள், பனி அரும்ப - பனிநீர்போலக் கண்ணீர் சொரிய, கைகள் மொட்டித்து - கைகள் குவிந்து, என் களைகணே - எனது பற்றுக்கோடே, ஓலம் என்று-முறையோவென்று, ஓலிட்டு - முறையிட்டு, என்பு எல்லாம் உருகும் - எலும்பெல்லாம் உருகுகின்ற, அன்பர்தம் கூட்டத்து-அன்பரது கூட்டத்தில், என்னையும் புணர்ப்பவன் கோயில்-என்னையும் சேர்ப்பவனாகிய சிவபெருமானுக்குக் கோயிலாயிருப்பது, பண் பல - பலபண்களையும், தெளி தேன் - தெளிந்த வண்டுகள், பாடிநின்று ஆட - பாடிநின்று விளையாட, பனி - குளிர்ச்சியாகிய, மலர் சோலை சூழ் - பூஞ்சோலைகள் சூழ்ந்த, மொழுப்பில் - பிரதேசத்தில், செண்பகம் அரும்பும்-சண்பகம் அரும்புகிற, பெரும்பற்றப்புலியூர்—, திருவளர் திருச்சிற்றம்பலமே, எ - று.

வி-ரை. கைகள் மொட்டித்தல் - அஞ்சலி செய்தல். ஓலமிட்டு என்பது ஓலிட்டு என நிலைமொழியீறு தொகுத்தலாயிற்று. தெளிதல் - தேர்தல். (௫)

நெஞ்சிடரகலவகம்புகுந்தொடுங்கு
நிலைமையோடிருள்கிழித்தெழுந்த
வெஞ்சுடர்சுடர்வபோன்றொளிதுளும்பும்
விரிசடையடிகடங்கோயி
லஞ்சுடர்ப்புரிசையாழிசூழ்வட்டத்
தகம்படிமணிநிரைபரந்த
செஞ்சுடரரும்பும்பெரும்பற்றப்புலியூர்த்
திருவளர்திருச்சிற்றம்பலமே.

ப-ரை. நெஞ்சு - மனத்திலுள்ள, இடர்அகல-துன்பமொழிய, அகம் புகுந்து - உள்ளே புகுந்து, ஒடுங்கும் நிலைமையோடு - அடங்கு

தற்குரிய நிலையுடனே, இருள் கிழித்து எழுந்த-இருளையழித்தெழுந்த, வெம் சுடர் சுடர்வ போன்ற-சூரியன் பிரகாசிப்பது போன்ற, ஒளி துளும்பும் - ஒளி ததும்புகின்ற, விரி சடை - விரிந்த சடையையுடைய, அடிகள்தம் கோயில் - சிவபெருமானுக்குக் கோயிலாயிருப்பது, அம் சுடர்-அழகிய ஒளியையுடைய, புரிசை-மதில்சூழ்ந்த, அகழி சூழ் வட்டத்து-அகழி சூழ்ந்த வட்டத்தில், அகம்படி-உள்ளிடத்தில், மணிநிரை பரந்த - ரத்நசமூகம் நிறைந்த, செஞ்சுடர் அரும்பும் - செவ்வொளி யரும்புகிற, பெரும்பற்றப்புலியூர்—, திருவளர் திருச்சிற்றம்பலமே—, எ-று.

வி-ரை. சுடர்வது சுடர்வ எனத் தொகுத்தது. வெஞ்சுடர் சுடர்வபோன்று என்பதற்கு வெப்பமாகிய சூரிய கிரணங்கள் பிரகாசிப்பனபோன்று என்றுரைப்பினுமாம். அரும்புதல் – வீசுதல்.

தீத்திரளுருவஞ்செங்கதிர்விரியாப்
புந்தியில்வந்தமால்விடையோன்
றாத்திரட்பளிங்கிற்றோன்றியதோற்றந்
தோன்றநின்றவன்வளர்கோயி
னாத்திரண்மறையோர்ந்தோமகுண்டத்து
நறுநெயான்மறையவர்வளர்த்த
தீத்திரளரும்புபெரும்பற்றப்புலியூர்த்
திருவளர்திருச்சிற்றம்பலமே.

ப-ரை. தீ திரள் உருவம் - தீத்திரள்போலும் உருவத்தை நிகர்த்து, செங்கதிர் விரியா-செவந்த ஒளியைப் பரப்பி, புந்தியில் வந்த - எமது மனத்திற் றோன்றின, மால் விடையோன் - மால்விடையையுடையவன், தா திரள் - பரிசுத்தமாகிய தொகுதியையுடைய, பளிங்கின்-பளிங்கினிடத்து, தோன்றிய - உண்டாகிய, தோற்றம்-காட்சியானது, தோன்ற - தோன்றும்படி, நின்றவன் - நின்றவனாகிய சிவபிரான், வளர் கோயில்-வளராநின்ற கோயிலானது, நா-தமது நாவினால், திரள் மறை ஓர்ந்து - கூட்டமாகிய வேதார்த்தங்களை யறிந்து, ஓமகுண்டத்து - ஓமகுண்டத்தில், நறு நெய்யால் - மணமுள்ள நெய்யினால், மறையவர் வளர்த்த - வேதியர் வளர்த்த, தீ திரள் அரும்பும் - நெருப்புத்திரள் அரும்புகிற, பெரும்பற்றப்புலியூர்—, திருவளர் திருச்சிற்றம்பலமே—, எ-று.

வி-ரை. மால்விடையோன் - பெரிதாகிய இடபத்தையுடையவன், அன்றித் திருமாலாகிய இடபத்தையுடையவன். வெண்ணீற்

னால் மறைக்கப்பட்ட திருமேனியை யுடையவனாதலால், 'தூத்திரட் பளிங்கிற் றோன்றிய தோற்றந் தோன்ற நின்றவன்' என்றார். (எ)

சேர்த்ததிண்புவனமுழுவதுமேனைத்
திசைகளோடண்டங்களனைத்தும்
போர்த்ததம்பெருமைசிறுமைபுக்கொடுங்கும்
புணர்ப்புடையடிகடங்கோயி
லார்த்துவந்தமரித்தமரரும்பிறரு
மலைகடலிடுதிரைபுனிதத்
தீர்த்தநீரரும்பும்பெரும்பற்றப்புலியூர்த்
திருவளர்திருச்சிற்றம்பலமே.

ப-ரை. சேர்த்த-சிறப்புப்பொருந்திய, திண் புவனமுழுவதும்-திடமாகிய உலகமுழுதும், ஏனை திசைகளோடு - மற்றைத் திக்குகளுடன், அண்டங்கள் அனைத்தும் - உலகங்களெல்லாம், போர்த்த-மூடிய, தம் பெருமை - தம் பெருமையில், சிறுமை - சிறுமையாகி, புக்கு ஒடுங்கும் - புகுந்தொடுங்குகிற, புணர்ப்பு உடை - சக்தியையுடைய, அடிகள் தம் கோயில்-இறைவனுக்குத் திருக்கோயிலாயிருப்பது, ஆர்த்து வந்து - ஆரவாரித்து வந்து, அமரித்து - அமரித்து, அமரரும் - தேவரும், பிறரும் - மற்றவரும், அலைகடல் - அலைகடல் போல, இடு-சமர்ப்பிக்கிற, திரை - அலைகளையுடைய, புனிதம் - பரிசுத்தமான, தீர்த்த நீர் அரும்பும் - தீர்த்தநீர் பெருகுகிற, பெரும்பற்றப்புலியூர்—, திருவளர் திருச்சிற்றம்பலமே—, எ - று.

வி-ரை. அமரித்தல்-பொருதல். புனிதம் - தம்மிடத்து மூழ்குவோருடைய பாவங்களைப் போக்கும் தூய்மை. தீர்த்தநீர் - கங்கை முதலிய புண்ணியதீர்த்தநீர். (அ)

பின்னுசெஞ்சடையும்பிறைதவழ்மொழுப்பும்
பெரியதங்கருணையுங்காட்டி
யன்னதேன்கலந்தின்னமுதுகந்தளித்தாங்
கருள்புரிபரமர்தங்கோயில்
புன்னைதேன்சொரியும்பொழிலகங்குடைந்து
பொறிவரிவண்டினம்பாடுந்
தென்னதேனரும்பும்பெரும்பற்றப்புலியூர்த்
திருவளர்திருச்சிற்றம்பலமே.

ப-ரை. பின்னு செஞ்சடையும்-பின்னப்பட்ட செஞ்சடையையும், பிறை தவழ் மொழுப்பும் - பிறை தவழ்கிற திருமுடியையும், பெரிய - பெரிதாகிய, தம் கருணையும்-தமது கருணையையும், காட்டி-சாண்பித்து, அன்னை - தாயானவள், தேன் கலந்து-தேன்சேர்த்து, இன் அமுது-இளிய அமுதை, உகந்து அளித்தாங்கு - விரும்பி யூட்டினாற்போல, அருள் புரி - அருள்செய்கிற, பரமர் தம்கோயில் - பரமருக்குக் கோயிலாயிருப்பது, புன்னை-புன்னைமலர்கள், தேன் சொரியும் - தேனைப் பொழிகின்ற, பொழிலகம் - சோலைகளினிடத்தில், குடைந்து - கிண்டி, பொறி - புள்ளிகளையும், வரி - கீற்றுக்களையுமுடைய, வண்டு இனம் - வண்டுக்கூட்டங்கள், பாடும் - பாடுகிற, தென்ன - அழகையுடைய, தேன் அரும்பும்-தேன்சுரக்கிற, பெரும்பற்றப்புலியூர்—, திருவளர் திருச்சிற்றம்பலமே—, எ - று.

வி-ரை. பின்னு செஞ்சடை-பின்னே தொங்குகிற செஞ்சடையெனினுமாம். புன்னை - பொருளாகு பெயர். (க)

உம்பர்நாடிம்பர்விளங்கியாங்கெங்கு
மொளிவளர்திருமணிச்சுடர்கான்
றெம்பிரானடஞ்செய்சூழலங்கெல்லா
மிருட்பிழம்பறவெறிகோயில்
வம்புலாங்கோயில்கோபுரங்கூடம்
வளர்நிலைமாடமாளிகைகள்
செம்பொனாலரும்பும்பெரும்பற்றப்புலியூர்த்
திருவளர்திருச்சிற்றம்பலமே.

ப-ரை. உம்பர் நாடு - மேலுலகமானது, இம்பர் - இவ்வுலகத்தில், விளங்கியாங்கு - விளங்கினாற்போல, எங்கும் - எவ்விடத்தும், ஒளி வளர்-ஒளிவளர்கின்ற, திரு மணி சுடர் கான்று - அழகிய மணிகளின் ஒளியை யுமிழ்ந்து, எம்பிரான் - எம்பெருமான், நடம் செய் - நடனஞ்செய்கிற, சூழல் அங்கு எல்லாம் - இடங்களெல்லாம், இருள் பிழம்பு அற எறி - இருட்கூட்ட மொழியும்படி வீசுகிற, கோயில் - கோயிலானது, வம்பு உலாம்-புதுமை பொருந்திய, கோயில்-கோயிலும், கோபுரம் - கோபுரமும், கூடம் - கூடமும், வளர் - உயர்ந்த, நிலை - நிலைகளையுடைய, மாடமாளிகைகள் - மாடமாளிகைகளும், செம்பொன்னால் அரும்பும் - செம்பொன்னாற் செய்யப்பட்ட, பெரும்பற்றப்புலியூர்—, திருவளர் திருச்சிற்றம்பலமே—, எ - று.

வி-ரை. உம்பர்நாடு - சுவர்க்கலோகம். கான்று என்பதற்குப் பகுதி கால். சூழல் - இடம். (௧௦)

இருந்திரைத்தரளப்பரவைசூழகலத்
தெண்ணிலங்கண்ணில்புன்மாக்க
டிருந்துயிர்ப்பருவத்தறிவுறுகருவூர்த்
துறைவளர்தீந்தமிழ்மாலை
பொருந்தருங்கருணைப்பரமர்தங்கோயிற்
பொழிலகங்குடைந்துவண்டுறங்கச்
செருந்திநின்றரும்பும்பெரும்பற்றப்புலியூர்த்
திருவளர்திருச்சிற்றம்பலமே.

ப-ரை. இருந்திரை தரளம் - பெரிய அலைகளையுடையதாய் அசையாநின்ற, பரவை சூழ்-கடல்சூழ்ந்த, அகலத்து - உலகிலுள்ள, எண் இல்-அளவில்லாத, அம் கண் இல்-அழகிய அறிவில்லாத, புன்மாக்கள் - அற்பமனிதர்கள், திருந்து - திருந்துதற்குரிய, உயிர்ப்பருவத்து - உயிர்ப்பக்குவத்தில், அறிவுறு - அறிவுவிளர்கின்ற, கருவூர் துறை வளர் - கருவூர் என்னுந் துறையிலுண்டாகிய, தீ - இனிமையாகிய, தமிழ் மாலை - தமிழ் மாலையை, பொருந்து - அங்கீகரித்த, பொருந்து அருகருணை - பெறுதற்கரிய கருணையையுடைய, பரமர் தம்கோயில் - பரமருக்குக் கோயிலாயிருப்பது; பொழிலகம் - சோலைகளினிடத்தில், குடைந்து-மலர்களைக்கிண்டி, வண்டு உறங்க-வண்டுகள் தூங்க, செருந்தி நின்று அரும்பும்-செருந்தமரங்கள் நின்றரும்புகிற, பெரும்பற்றப்புலியூர்—, திருவளர் திருச்சிற்றம்பலமே—,எ-று.

வி-ரை. தரளப்பரவை - முத்துக்களையுடைய கடல் எனினுமாம். கண் - அறிவு. "தெண்ணீர்க்குவளை பொருகயல்வேலென்று, கண்ணில் புன்மாக்கள் கவற்றவிடுவனே" என்பதிலும் கண் அறிவெனப் பொருள்படுதல் காண்க. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## உ. திருக்களந்தையாதித்தேச்சரம்.

பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

கலைகடம்பொருளுமறிவுமாயென்னைக்
கற்பினிற்பெற்றெடுத்தெனக்கே
முலைகடந்தருளுந்தாயினுநல்ல
முக்கணனுறைவிடம்போலு

மலைகுடைந்தனையநெடுநிலைமாட
மருங்கெலாமறையவர்முறையோத்
தலைகடன்முழங்குமந்தணீர்க்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே.

ப-ரை. கலைகள் தம் பொருளும்-கலைகளின் பொருளும், அறிவும் - அறிவும், ஆய் - ஆகி, என்னை - என்னை, கற்பினில் பெற்றெடுத்து - கற்பு நெறியால் ஈன்றெடுத்து, எனக்கு - எனக்கு, முலைகள் தந்தருளும்-முலைகளை உண்பித்தருளுகிற, தாயினும்-தாயைப் பார்க்கிலும், நல்ல-நன்மைசெய்கிற, முக்கணன்-சிவபிரான், உறைவிடம் - உறைவிடமா யிருப்பது, மலை குடைந்தனைய - மலையைக் குடைந்தாற் போன்ற, நெடு நிலை மாடம் - நெடிய நிலைகளையுடைய மாடங்களின், மருங்கு எல்லாம் - இடங்களிலெல்லாம், மறையவர்-வேதியர்களுடைய, முறை - முறையாகிய, ஓத்து-வேதங்கள், அலை கடல் முழங்கும் - அலைகடல்போல முழங்குகிற, அம் தண்ணீர் - அழகும் குளிர்ச்சியுமுள்ள நீர்சூழ்ந்த, களந்தை - களந்தைப்பதியில், அணி திகழ்-அழகோடு கூடி விளங்குகிற, ஆதித்தேச்சரமே - ஆதித்தேச்சரமேயாம், எ - று.

வி-ரை. போலும் - அசை. உறைவிடம் என்பதனை உறைவு இடம் எனப் பிரித்து உறைதற்குரிய இடம் எனப் பொருள்கொள்க. களந்தை - களத்தூர். (௧)

சந்தனகளபந்துதைந்தநன்மேனித்
தவளவெண்பொடிமுழுதாடுஞ்
செந்தழலுருவிற்பொலிந்துநோக்குடைய
திருநுதலவர்க்கிடம்போலு
மிந்தனவிலங்கலெறிபுனந்தீப்பட்
டெரிவதொத்தெழுநிலைமாட
மந்தணரழலோம்பலைபுனற்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே.

ப-ரை. சந்தனகளபம் துதைந்த-சந்தனக் கலவை பூசப்பட்ட, நல் மேனி-அழகிய திருமேனியில், தவள வெண்பொடி முழுதாடும்-வெண்மையாகிய திருநீறு உத்தூளனம் செய்யப்பெற்ற, செந்தழல் உருவின் பொலிந்து-செந்தீப்போலு முருவத்தால் விளங்கி, நோக்கு உடைய திருநுதலவர்க்கு - கண்ணுள்ள திருநெற்றியை யுடையவர்

சீகு, இடம் - இடமாயிருப்பது, இந்தன விலங்கல் எறி புனம் - விறகடர்ந்த மலையினிடத்து வெட்டப்பட்ட புனமானது, தீ பட்டு எரிவது ஒத்து - தீப்பற்றி யெரிவது போன்று, எழுநிலை மாடம் - எழுநிலை மாடங்களில். அந்தணர் அழல் ஓம்பு - வேதியர் யாகாக் கினியை வளர்க்கிற, அலை புனல் - அலைநீர் சூழ்ந்த, களந்தை அணி திகழ் ஆதித்தேச்சரமே—; எ-று.

வி-ரை. களபம் - கலவை. நோக்குடைய திருநுதலவர்-நெற் றிக்கண்ணை யுடையவர். இந்தனம் - விறகு. (௨)

கரியரேயிடந்தான்செய்யரேயொருபாற்
கழுத்திலோர்தனிவடஞ்சேர்த்தி
முரிவரேமுனிவர்தம்மொடாலிழற்கீழ்
முறைதெரிந்தோருடம்பினரா
மிருவரேமுக்கணாற்பெருந்தடந்தோ
ளிறைவரேமறைகளுந்தேட
வரியரேயாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே.

ப-ரை. இடம்தான் கரியரே (ஆகில்) - இடப்பக்கம் கரியரே யானால், ஒருபால் செய்யரே (ஆகில்) - ஒருபக்கம் செய்யரேயானால், கழுத்தில்-கண்டத்தில், ஓர் தனிவடம் சேர்த்தி முரிவரே (ஆகில்) - ஒரு தனிவடத்தைத் தரித்து விளங்குவோரேயானால், முனிவர் தம் மொடு - முனிவரோடு, ஆல் நிழற்கீழ்-கல்லாலின் நீழலின்கீழே யிரு ந்து, முறை தெரிந்து - முறையை யறிவித்து, ஓர் உடம்பினர் ஆம்- ஒருடம்புடையராகிய, இருவரே (ஆகில்)-இருவரேயானால், முக்கண் - மூன்றுகண்களையும், நால் பெரு தடம் தோள் - நான்காகிய பெரிய தடந்தோள்களையுமுடைய, இறைவரே (ஆகில்) - இறைவரேயானால், மறைகளும் தேட - வேதங்களுந் தேடுதற்கு, அரியரே ஆகில்-அரிய வரேயானால், அவர் இடம் - அவர்க்கிடமாயிருப்பது, களந்தை அணி திகழ் ஆதித்தேச்சரமே—, எ - று.

வி-ரை. ஒருபால் என்றது வலப்பக்கத்தை. முரிதல்-விளங்கு தல். முனிவர் - சநகர் முதலிய நான்கு முனிவர். முறை - ஞான நிஷ்டையின் கிரமம், அதாவது மௌநநிலை. ஒருடம்பினராமிரு வர் - அர்த்தநாரீச்சுரர். இறுதியிலுள்ள ஆகில் என்பதனைக் கரியரே யென்பது முதலானவைகளோடு சேர்த்துரைக்கப்பட்டது. (௩)

பழையராந்தொண்டர்க்கெளியரேமிண்டர்க்
கரியரேபாவியேன்செய்யும்
பிழையெலாம்பொறுத்தென்பிணிபொறுத்தருளாப்
பிச்சரேநச்சராமிளிருங்
குழையராய்வந்தென்குடிமுழுதாளுங்
குழகரேயொழுகுநீர்க்கங்கை
யழகரேயாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே.

ப-ரை. பழையர் ஆம் தொண்டர்க்கு எளியரே (ஆகில்)-பழவடியார்க்கு எளியரேயானால், மிண்டர்க்கு அரியரே (ஆகில்) - துஷ்டருக்கு அரியரேயானால், பாவியேன் செய்யும் பிழை எல்லாம் பொறுத்து-பாவியாகிய நான்செய்கிற எல்லாப்பிழைகளையும் பொறுத்து, என்பிணி பொறுத்தருளா - என்பிணியைப் பொறுத்தருளாத, பிச்சரே (ஆகில்)-பித்தரேயானால், நச்சுஅரா மிளிரும் குழையராய் வந்து-நஞ்சையுடைய பாம்பைவிளங்குகிற காதணியாகவுடையவராய் வந்து, என் குடி முழுது ஆளும்-என்குடி முழுவதையும் ஆள்கின்ற, குழகரே (ஆகில்) - குழகரேயானால், ஒழுகும் நீர் கங்கை - ஒழுகாநின்ற நீரையுடைய கங்கையைத் தரித்த, அழகரே ஆகில்-அழகரேயானல், அவர் இடம் - அவர்க்கிடமாயிருப்பது, களந்தை அணி திகழ் ஆதித்தேச்சரமே—, எ - று.

வி-ரை. என்பிணி யென்றது என் துன்பத்தை யென்றவாறு. நஞ்சு - நச்சு என வலித்தலாயிற்று. குழகர் - அழகர். (௪)

பவளமேமகுடம்பவளமேதிருவாய்
பவளமேதிருவுடம்பதனிற்
றவளமேகளபந்தவளமேபுரிநூ
றவளமேமுறுவலாடரவந்
துவளுமேகலையுந்துகிலுமேயொருபாற்
றுடியிடையிடமருங்கொருத்தி
யவளுமேயாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே.

ப-ரை. மகுடம் பவளமே (ஆகில்)-திருமுடி பவளமேயானல், திருவாய் பவளமே (ஆகில்) - திருவாய் பவளமேயானல், திருவுடம்பு பவளமே (ஆகில்) - திருமேனி பவளமேயானல், அதனில் - அந்தத் திருமேனியில், களபம் தவளமே (ஆகில்) - கலவை வெண்

மையேயானால், புரிநூல் தவளமே (ஆகில்) - முப்புரிநூல் வெண்மையேயானால், முறுவல் தவளமே (ஆகில்) - திருநகை வெண்மையேயானால், ஆடு அரவம் - ஆடுகிற பாம்பானது, துவளுமே (ஆகில்)- தொங்குமேயானால், ஒருபால் மேகலையும் துகிலுமே (ஆகில்) - ஒரு பக்கத்தில் மேகலையும் ஆடையுமேயானால், இடமருங்கு - இடப்பக்கத்தில், துடி இடை ஒருத்தி அவளுமே ஆகில்-துடிபோலும் இடையை யுடையவளாகிய ஒருத்தி அமர்ந் திருப்பாளேயானால், அவர் இடம் - அவர்க்கிடமா யிருப்பது, களந்தை அணி திகழ் ஆதித்தேச்சரமே, எ-று.

வி-ரை. களபம் - வெண்ணீறு. துடி - உடுக்கை. (ஞ)

நீலமேகண்டம்பவளமேதிருவாய்
நித்திலநிரைத்திலங்கினவே
போலுமேமுறுவனிறையவானந்தம்
பொழியுமேதிருமுகமொருவர்
கோலமேயச்சோவழகிதேயென்று
குழைவரேகண்டவருண்ட
தாலமேயாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே.

ப-ரை. கண்டம் நீலமே (ஆகில்) - கண்டம் நீல நிறமேயானால், திருவாய் பவளமே (ஆகில்) - திருவாய் பவளமேயானால், முறுவல் - திருநகை, நித்திலம் நிரைத்து இலங்கினவே போலுமே (ஆகில்) - முத்துக்கள் வரிசையாய் வைக்கப்பட்டு விளங்குவனவற்றையே போலுமேயானால், திருமுகம் - திருமுகமானது, நிறைய ஆநந்தம் பொழியுமே (ஆகில்) - நிறைய இன்பத்தைப் பொழியுமேயானால், கண்டவர் - பார்த்தவர், ஒருவர் கோலமே - ஒப்பற்றவரது அழகோ, அச்சோ-அதிசயம், அழகிதே என்று குழைவரே (ஆகில்)- அழகியதேயென்று மனங் குழைவாரேயானால், உண்டது ஆலமே (ஆகில்) - உண்டது நஞ்சேயானால், அவர் இடம் - அவர்க்கிடமா யிருப்பது, களந்தை அணி திகழ் ஆதித்தேச்சரமே, எ-று.

வி-ரை. நிரைத்தல் - வரிசையாய் வைத்தல். அச்சோ-அதிசய விடைச்சொல். (சு)

திக்கடாநினைந்துநெஞ்சிடிந்துருகுந்
திறத்தவர்புறத்திருந்தலச

மைக்கடாவனையவென்னையாள்விரும்பி
மற்றொருபிறவியிற்பிறந்து
பொய்க்கடாவண்ணங்காத்தெனக்கருளே
புரியவும்வல்லரேயெல்லை
யக்கடாவாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே.

ப-ரை. திக்கு - திக்குக்களில், அடா - அடுத்து, வினைந்து - வினைத்து, நெஞ்சு இடிந்து உருகும் திறத்தவர் - மனமிடிந்துருகும் தன்மையோர், புறத்து இருந்து அலச - புறத்தேயிருந்து வருந்த, மை கடா அனைய - கரிய எருமைக்கடாவை நிகர்த்த, என்னை ஆள் விரும்பி - என்னையாளுதலை விரும்பி, மற்றொரு பிறவியில் பிறந்து- வேறொரு பிறவியிற் பிறந்து, பொய்க்கு அடாவண்ணம்-பொய்யை அடுக்காதபடி, காத்து - காப்பாற்றி, எனக்கு அருளே புரியவும் வல்லரே (ஆகில்) - எனக்கு அருள் செய்யவும் வல்லவரேயானால், எல்லேயக்கடாவாகில்—, அவரிடம் - அவர்க்கிடமாயிருப்பது, களந்தை அணி திகழ் ஆதித்தேச்சரமே—, எ - று.

வி-ரை. அடா-செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். அலசுதல் - வருந்துதல். ஆள்-முதனிலைத் தொழிற்பெயர். பொய்க்கு-உருபுமயக்கம். எல்லே அக்கடா என்பன அதிசயவிடைச் சொற்கள். (எ)

மெய்யரேமெய்யர்க்கிடுதிருவான
விளக்கரேயெழுதுகோல்வளையாண்
மையரேவையம்பலிதிரிந்துறையு
மயானரேயுளங்கலந்திருந்தும்
பொய்யரேபொய்யர்க்கடுத்தவான்பளிங்கின்
பொருள்வழியிருள்கிழித்தெழுந்த
வையரேயாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே.

ப-ரை. மெய்யரே (ஆகில்) - மெய்யரேயானால், மெய்யர்க்கு இடு - மெய்யருக்கிட்ட, திரு ஆன விளக்கரே (ஆகில்)-அழகிய தீபம் போல்பவரேயானால், எழுதுகோல்வளை ஆண்மையரே (ஆகில்)-சித்திரிக்கத்தகுந்த அழகிய வளையலணிந்த உமாதேவியையாள்பவரேயானால், வையம் - உலகத்தில், பலி - பிக்ஷையின்பொருட்டு, திரி

ந்து - திரிந்து, உறையும் மயானரே (ஆகில்) - மயானத்தில் வாழ்ப வரேயானால், உள்ளம் கலந்து இருந்தும்-மனத்திற் சேர்ந்திருந்தும், பொய்யரே (ஆகில்) - பொய்யரேயானால், பொய்யர்க்கு - பொய்யரு க்கு, அடுத்த - அடுத்திருக்கிற, வான்பளிங்கின் பொருள்வழி-மேலா ன பளிங்கின் குணம்போல, இருள் கிழித்து எழுந்த-இருளையழித் தெழுந்த, ஐயரே ஆகில் - ஐயரேயானால், அவர் இடம் - அவர்க்கிட மாயிருப்பது, களந்தை அணி திகழ் ஆதித்தேச்சரமே—, எ - று.

வி-ரை. மெய்யர் - உண்மையையுடையவர், அழியாதவர். கோ லம்வளை யெனற்பாலது கோல்வளையென நிலைமொழியீற் றம்முக் கெட்டுப் புணர்ந்தது. (அ)

குமுதமேதிருவாய்குவளையேகளமுங்
குழையதேயிருசெவியொருபால்
விமலமேகலையுமுடையரேசடைமேன்
மிளிருமேபொறிவரிநாகங்
கமலமேவதனங்கமலமேநயனங்
கனகமேதிருவடிநிலைநீ
ரமலமேயாகிலவரிடங்களந்தை
யணிதிகழாதித்தேச்சரமே.

ப-ரை. திருவாய் குமுதமே (ஆகில்) - திருவாய் குமுதமலரே யானால், களமும் குவளையே (ஆகில்) - கண்டமும் குவளைமலரே யானால், இருசெவி குழையதே (ஆகில்) - இருசெவியுங் குழையை யுடையதேயானால், ஒருபால்-ஒருபக்கத்தில், விமலம்-பரிசுத்தமான, மேகலையும் உடையவரே (ஆகில்)-மேகலையையும் உடையவரேயானால், சடைமேல் - சடையின்மீது, பொறி வரி நாகம் மிளிருமே (ஆகில்) - புள்ளிகளையும் வரிகளையுமுடைய பாம்பு பிரகாசிக்குமேயானால், வத னம் கமலமே (ஆகில்) - முகம் தாமரைமலரேயானால், நயனம் கம லமே (ஆகில்) - கண்கள் தாமரைமலரேயானால், திருவடிநிலை கனக மே (ஆகில்)-திருவடிநிலை பொன்னேயானால், நீர் அமலமே ஆகில் - குணமும் பரிசுத்தமேயானால். அவர் இடம்-அவர்க்கிடமாயிருப்பது, களந்தை அணி திகழ் ஆதித்தேச்சரமே—, எ - று.

வி-ரை. குமுதம் - செவ்வல்லிமலர். குவளை - நீலமலர். குமு தம் குவளை யென்பன முதலாகு பெயர்கள். ஒருபால் என்றது இடப் பக்கத்தை. நீர் இங்குக் குணத்தைக் குறித்தது. (கூ)

நீரணங்கசும்புகழனிசூழ்களந்தை
நிறைபுகழாதித்தேச்சரத்து
நாரணன்பரவுந்திருவடிநிலைமே
னலமலிகலைபயில்கருவூ
ராரணமொழிந்தபவளவாய்சுரந்த
வமுதமூறிய தமிழ்மாலை
யேரணங்கிருநான்கிரண்டிவைவல்லோ
ரிருள்கிழித்தெழுந்தசிந்தையரே.

ப-ரை. நீர் - நீரானது, அணங்கு அசும்பு - அழகாகச் சுரக்கின்ற, கழனி சூழ்-வயல்கள் சூழ்ந்த, களந்தை - களந்தையில், நிறை புகழ் - நிறைந்த புகழையுடைய, ஆதித்தேச்சரத்து-ஆதித்தேச்சரத்தில், நாரணன் பரவும்-திருமால் வழிபடுகின்ற, திருவடி நிலைமேல்-திருவடி நிலைமீது, நலம் மலி கலை பயில் - நன்மைமிகுந்த கலைகளிற் பயின்ற, கருவூரார்-கருவூர்த்தேவர், அணமொழிந்த - பொருத்தமாகச்சொல்லிய, பவளவாய் சுரந்த - பவளவாயிலுண்டான, அமுதம் ஊறிய-அமிர்தம் சுரந்த, தமிழ் மாலை-தமிழ்மாலையின், ஏர் அணங்கு - மிக்க அழகுள்ள, இருநான்கு இரண்டு இவை - பத்துப்பாடல்களாகிய இவற்றை, வல்லோர்-கற்றுவல்லோர், இருள் கிழித்து எழுந்த-(அஞ்ஞானமாகிய) இருட்டைக் கிழித்தெழுந்த, சிந்தையர்-மனமுடையோராவர், எ - று.

வி-ரை. அசும்புதல் - சுரத்தல். கருவூராரண மொழிந்த பவள வாய் என்பதற்கு, கருவூரர் வேதசாகைகளைச் சொன்ன பவளம்போலும் வாய் என்றுரைப்பினுமாம். இருநான்கு இரண்டு - பத்து. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## க.—திருக்கீழ்க்கோட்டூர்மணியம்பலம்.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

தளிரொளிமணிப்பூம்பதஞ்சிலம்பலம்பச்
சடைவிரித்தலையெறிகங்கைத்
தெளிரொளிமணிநீர்த்திவலைமுத்தரும்பித்
திருமுகமலர்ந்துசொட்டட்டக்

கிளரொளிமணிவண்டறைபொழிற்பழனங்
    கெழுவுகம்பலைசெய்கீழ்க்கோட்டூர்
வளரொளிமணியம்பலத்துணின்றாடு
    மைந்தனென்மனங்கலந்தானே.

ப-உரை. தளிர் ஒளி-தளிரினது ஒளிபோன்ற ஒளியினையுடைய, மணி - அழகாகிய, பூ - தாமரை மலர்போன்ற, பதம் - திருவடிகளில், சிலம்பு அலம்ப - சிலம்பொலிக்கவும், சடை விரித்து - சடையை விரித்து, அலை எறி கங்கை - அலைவீசுகிற கங்கையாற்றின், தெளிர் ஒளி மணி - தெளிந்த ஒளியுள்ள மணிகளையும், முத்து - முத்துகளையும், நீர்த்திவலை அரும்பி-நீர்த்துளிகளோடு கொழித்து, திருமுகம் மலர்ந்து - திருமுகமானது மலர்ந்து, சொட்டு அட்ட - வேர்வைத்துளி சிந்தவும், கிளர் ஒளி-விளங்குகின்ற ஒளியையுடைய, மணி வண்டு அறை-அழகிய வண்டுகள் ஒலிக்கிற, பொழில் பழனம்-சோலையும் வயல்களும், கெழுவு கம்பலை செய் - பொருந்திய ஆரவாரத்தைச் செய்கிற, கீழ்க்கோட்டூர் - திருக்கீழ்க்கோட்டூரில், வளர் ஒளி - மிக்க வொளியையுடைய, மணியம்பலத்துள் நின்று - மணியம்பலத்தில் நின்று, ஆடும் - நடனஞ்செய்கிற, மைந்தன் - திண்ணியன், என் மனம் கலந்தான் - என்மனத்தை யடைந்தான், எ-று.

வி-ரை. அலம்பல் - சத்தித்தல். சொட்டு - துளி. மைந்து - திண்மை. மணிவண்டு - நீலமணிபோலும் வண்டு எனினுமாம்; கருநிறத்தையுடைய வண்டு எனினும் பொருந்தும். அலம்ப அட்ட கலந்தான் என முடிக்க. (க)

துண்டவெண்பிறையும்படர்சடைமொழுப்புஞ்
    சுழியமுஞ்சூலமுநீல
கண்டமுங்குழையும்பவளவாயிதழுங்
    கண்ணுதற்றிலகமுங்காட்டிக்
கெண்டையுங்கயலுமுகளுநீர்ப்பழனங்
    கெழுவுகம்பலைசெய்கீழ்க்கோட்டூர்
வண்டறைமணியம்பலத்துணின்றாடு
    மைந்தனென்மனங்கலந்தானே.

ப-ரை. துண்டம்-துணிக்கையாகிய, வெண் பிறையும்-வெண்மையாகிய பிறையையும், படர் - விரிந்த, சடை மொழுப்பும் - சடாமகுடத்தையும், சுழியமும் - உச்சிக் கொண்டையையும், சூலமும் -

சூலத்தையும், நீலகண்டமும் - நீலகண்டத்தையும், குழையும் - காதணியையும், பவளவாய் இதழும் - பவளவாயோடு இதழையும், கண்ணுதல் - கண்ணையுடைய நெற்றியிலணிந்த, திலகமும் காட்டி - திலகத்தையும் காட்டி, கெண்டையும் கயலும் - கெண்டை மீன்களும் கயல்மீன்களும், உகளும் - குதிக்கிற, நீர் - நீரையுடைய, பழனம் - வயல்களில், கெழுவு கம்பலை செய் - (கடைஞர்) ஆரவாரஞ் செய்கிற, கீழ்க்கோட்டூர் - திருக்கீழ்க்கோட்டூரில், வண்டு அறை - வண்டுகள் ஒலிக்கின்ற, மணியம்பலத்துள் நின்று ஆடும்-மணியம்பலத்தில் நின்று நடனஞ்செய்கிற, மைந்தன் என் மனம் கலந்தான், எ - று.

வி-ரை. துண்டம் - துண்டு. காட்டி கலந்தான் எனமுடிக்க. நீலகண்டம் - நஞ்சுண்டதனாற் கறுத்த கண்டம். (௨)

திருநுதல்விழியும்பவளவாயிதழுந்
திலகமுமுடையவன் சடைமேற்
புரிதருமலரின் றாதுநின்றூதப்
போய்வருந்தும்பிகாளிங்கே
கிரிதவழ்முகிலின்கீழ்த்தவழ்மாடங்
கெழுவுகம்பலைசெய்கீழ்க்கோட்டூர்
வருதிறன்மணியம்பலவனைக்கண்டென்
மனத்தையுங்கொண்டுபோதுமினே.

ப-ரை. திரு நுதல் விழியும் - அழகிய நெற்றிக் கண்ணையும், பவளவாய் இதழும் - பவளவாயோடு இதழையும், திலகமும்-திலகத்தையும், உடையவன்-உடையவனாகிய சிவபெருமானது, சடைமேல்-சடையின்மீது, புரிதரு மலரின் தாது-விரும்பத்தகுந்த தாதுகளில், நின்று ஊத - நின்று ஊதும்பொருட்டு, போய்வரும் தும்பிகாள்-போய்வருகிற வண்டுகளே, இங்கே-இவ்விடத்தே, கிரி தவழ்-மலைகளின்மேல் தவழ்கின்ற, முகிலின் கீழ் தவழ் - மேகங்களின் கீழே தவழ்கின்ற, மாடம் - மாடங்களில், கெழுவு - பொருந்திய, கம்பலை செய் - (அங்குள்ளார்) ஆரவாரஞ் செய்கிற, கீழ்க்கோட்டூர் - திருக்கீழ்க்கோட்டூரில், வரு - எழுந்தருளிய, திறல் - வெற்றியையுடைய, மணியம்பலவனை கண்டு - மணியம்பலவனைப் பார்த்து, என் மனத்தையும் கொண்டுபோதுமின் - என் மனத்தையும் கொண்டுவாருங்கள், எ-று.

வி-ரை. தாது - மகரந்தம். முகிலின்கீழ்த் தவழ்மாடம் என்றமையால் மாடங்களின்மேல் மேகங்கள் தவழ்கின்றனவென்றாயிற்று. இதனால் மாடங்களி னுயர்ச்சி தோன்றுகின்றது. (ரு)

தெள்ளுநீறவனீறென்னுடல்விரும்புஞ்
செவியவனறிவுநூல்கேட்கு
மெள்ளவேயவன்பேர்விளம்பும்வாய்கண்கள்
விமானமேநோக்கிவெவ்வுயிர்க்குங்
கிள்ளைபூம்பொதும்பிற்கொஞ்சிமாம்பொழிற்கே
கெழுவுகம்பலைசெய்கிழ்க்கோட்டூர்
வள்ளலேமணியம்பலத்துணின்றாடு
மைந்தனேயென்னுமென்மனனே.

ப-ரை. என் உடல் - என் உடலானது, தெள்ளும் நீறவன் - தெளிவாகிய திருநீற்றையுடையவனாகிய சிவபெருமானது, நீறு-திருவெண்ணீற்றை, விரும்பும் - விரும்புகின்றது; செவி- என் காதுகள், அவன் அறிவுநூல் - அவனது அறிவுநூல்களை, கேட்கும் - கேளாநின்றன; வாய் - என்வாயானது, மெள்ளவே-மெல்லெனவே, அவன் பேர் - அவனது திருநாமத்தை, விளம்பும் - சொல்லாநின்றது; கண்கள் - என் கண்கள், விமானமே நோக்கி - அவனது விமானத்தையே பார்த்து, வெவ்வுயிர்க்கும் - வெய்துயிர்க்கின்றது; என் மனன்-என் மனமானது, கிள்ளை - கிளிகள், பூம்பொதும்பில்-பூஞ்சோலைகளில், கொஞ்சி - கொஞ்சிப்பேசி, மாம்பொழிற்கே - மாஞ்சோலையிலே, கெழுவு கம்பலை செய் - பொருந்திய ஆரவாரத்தைச் செய்கிற, கீழ்க்கோட்டூர்-கீழ்க்கோட்டூரில் எழுந்தருளிய, வள்ளலே-உதாரசீலனே, மணியம்பலத்துள் நின்று ஆடும் மைந்தனே—, என்னும் - என்று நினையாநின்றது, எ-று.

வி-ரை. என்னுடல் சிவபெருமானது திருவெண்ணீற்றை விரும்பும்; என் செவி அவனறிவுநூல்களைக் கேட்கும்; என்வாய் அவன் திருநாமத்தை யுச்சரிக்கும்; என் கண்கள் அவன் விமானத்தை நோக்கி வெய்துயிர்க்கும்; என் மனம் திருக்கீழ்க்கோட்டூர் வள்ளலே, மணியம்பலத்து நின்றாடும் மைந்தனே யென்னும் என முடித்துக்கொள்க. (சு)

தோழியாஞ்செய்ததொழிலெனெம்பெருமான்
றுணைமலர்ச்சேவடிகாண்பா

னூழிதோறூழியுணர்ந்துளங்கசிந்து
நெக்குநைந்துளங்கரைந்துருகுங்
கேழலும்புள்ளுமாகிநின்றிருவர்
கெழுவுகம்பலைசெய்கீழ்க்கோட்டூர்
வாழியமணியம்பலவனைக்காண்பான்
மயங்கவுமாலொழியோமே.

ப-ரை. தோழி - தோழீ, யாம் செய்த தொழில் என் - யாம் செய்த தொழில் யாது; எம்பெருமான் - எம்பெருமானது, துணை மலர்சேவடிகாண்பான்-இரண்டு தாமரைமலர்போலுந் திருவடிகளைக் காணும் பொருட்டு, ஊழிதோறு ஊழி-அநேக ஆழிக்காலங்களாக, உணர்ந்து - நினைந்து, உளம் கசிந்து-மனங்கசிந்து, நெக்கு நைந்து-நெகிழ்ந்து நைந்து, உள்ளம் கரைந்து உருகும் - மனங்கரைந் துருகுகின்ற, கேழலும் புள்ளும் ஆகி நின்று - பன்றியும் பறவையுமாகி நின்று, இருவர்-இருவர், கெழுவு கம்பலைசெய் - பொருந்திய கம்பலையைச் செய்கிற, கீழ்க்கோட்டூர் - திருக்கீழ்க்கோட்டூரில், மணியம்பலவனை காண்பான் - மணியம்பலவனைக் காணும்பொருட்டு, மயங்கவும் - மயங்காநிற்கவும், மால் ஒழியோம் - (அவனிடத்து) ஆசையை யொழியோம், எ-று.

வி-ரை. துணை - உயிர்த்துணை யெனினுமாம். கேழல்-வராகம். புள்-பறவைப்பொது; அது இருவர் மயங்கவும் என்ற குறிப்பால் அன்னத்தைக் குறித்தது. இருவர்-விண்டுவும் பிரமனும். வாழிய-அசை.

என்செய்கோந்தோழிதோழிநீதுணையா
யிரவுபோம்பகல்வருமாகி
லஞ்சலோவென்னானாழியுந்திரையு
மலமருமாறுகண்டயர்வன்
கிஞ்சுகமணிவாயரிவையர்தெருவிற்
கெழுவுகம்பலைசெய்கீழ்க்கோட்டூர்
மஞ்சணிமணியம்பலவவோவென்று
மயங்குவன்மாலையம்பொழுதே.

ப-ரை. தோழி-தோழீ, நீ துணையாய்-நீ துணையாயிருக்க, இரவு போம் - இராக்காலம் கழியும்; பகல் வருமாகில் - பகற்காலம் வருமானால், அஞ்சல் என்னான் - அஞ்சாதேயென்று சொல்லான்; ஆழியும் திரையும் - கடலும் அலையும், அலமரும் ஆறுகண்டு அயர்வன்-கலங்

கும் விதத்தை நோக்கி அயர்வேன்; கிஞ்சுகம்-முருக்கமலர்போன்ற, மணி வாய் - அழகிய வாயினையுடைய, அரிவையர்-மாதர், தெருவில் - வீதிகளில், கெழுவு கம்பலை செய் - பொருந்திய, ஆரவாரஞ்செய்கிற, கீழ்க்கோட்டூர் - திருக்கீழ்க்கோட்டூரில், மஞ்சு அணி - அழகைக் கொண்ட, மணியம்பலவ ஓவென்று - மணியம்பலவனே ஓவென்று, மாலையம்பொழுது மயங்குவன் - மாலைக்காலத்தில் மயங்குவேன்; தோழி - தோழீ, என் செய்கோம் - வேறென் செய்யக்கடவோம், எ - று.

வி-ரை. அரிவையர் - மாதர் பொதுப்பெயர்; பருவங்குறித்த தன்று. மாலையம்பொழுது என்பதில் அம் சாரியை. கிஞ்சுகமணிவாய் என்றது அதரத்தை. (சு)

தழைதவழ்மொழுப்புந்தவளநீற்றொளியுஞ்
சங்கமுஞ்சகடையின்முழக்குங்
குழைதவழ்செவியுங்குளிர்சடைத்தெண்டுங்
குண்டையுங்குழாங்கொடுதோன்றுங்
கிழைதவழ்கனகம்பொழியுநீர்ப்பழனங்
கெழுவுகம்பலைசெய்கீழ்க்கோட்டூர்
மழைதவழ்மணியம்பலத்துணின்றாடு
மைந்தர்தம்வாழ்வுபோன்றனவே.

ப-ரை. தழைதவழ் மொழுப்பும்-செழிப்பமைந்த சிகையும், தவளம் நீறு ஒளியும் - திருவெண்ணீற்றினொளியும், சங்கமும் - சங்கும், சகடையின் முழக்கும் - சகடையின் முழக்கமும், குழை தவழ் செவியும் - குழையசைகின்ற செவியும், குளிர்சடைத்தெண்டும் - குளிர்ந்த சடைத்திரளும், குண்டையும்-எருதும் (ஆகிய இவைகளே), குழாம் கொடுதோன்றும்- திரளாகக்காணப்படுகிற, கிழைதவழ் கனகம் பொழியும் - ஒளியுள்ள பொன்னைக் கொழிக்கிற, நீர் - நீரையுடைய, பழனம் - வயல்களில், கெழுவு கம்பலை செய் - (கடைஞர்) பொருந்திய ஆரவாரத்தைச் செய்கிற, கீழ்க்கோட்டூர்—, மழை தவழ்-மேகங்கள் தவழ்கின்ற, மணியம்பலத்துள் நின்று ஆடும்—, மைந்தர் தம் வாழ்வு போன்றன - திண்ணியராது செல்வம் போன்றன, எ - று.

வி-ரை. சகடை - ஓர் வாச்சியம். சடைத்தெண்டு - சடைமுடி யெனினுமாம். வாழ்வு - கருவியாகுபெயராய்ச் செல்வத்தை யுணர்த்திற்று. (எ)

தன்னகமழலைச்சிலம்பொடுசதங்கை
தமருகந்திருவடிதிருநீ
றின்னகைமழலைகங்கைகொங்கிதழி
யிளம்பிறைகுழைவளரிளமான்
கின்னரமுழவமழலையாழ்வீணை
கெழுவுகம்பலைசெய்கீழ்க்கோட்டூர்
மன்னவன்மணியம்பலத்துணின்றாடு
மைந்தனென்மனத்துள்வைத்தனனே.

ப-ரை. தன் அகம் - தன்னிடத்துள்ள, மழலைச் சிலம்பொடு - மெல்லிய சிலம்பொலியோடு, சதங்கை-சதங்கையும், தமருகம்-தமருகமும், திருவடி - திருவடியும், நீறு - திருநீறும், இன் நகை மழலை கங்கை - இனிய நகையையும் மழலைச்சொல்லையுமுடைய கங்கையும், கொங்கு இதழி - வாசனையுள்ள கொன்றைமலரும், இளம்பிறை - இளம்பிறையும், குழை - காதணியும், வளர் இளமான் - வளர்கின்ற மான்கன்றும், கின்னரம் முழவம் மழலை யாழ்வீணை-கின்னரம் மத்தளம் மெல்லிய யாழ்வீணை என்பனவும், கெழுவுகம்பலை செய்-பொருந்திய ஆரவாரத்தைச் செய்கிற, கீழ்க்கோட்டூர் மன்னவன்—, மணியம்பலத்துள் நின்று ஆடும்மைந்தன்—, (அவனே) என்மனத்துள் வைத்தனன் - என்மனத்தி லிருத்தினேன், எ - று.

வி-ரை. மணியம்பலத்து ணின்றாடுமைந்தன் தன்னகமழலைச் சிலம்பொடு சதங்கை முதலியவற்றை யென்மனத்துள் வைத்தான் எனினும் பொருந்தும். அவனது சிலம்பு முதலியவற்றை யிடையறாது நினைத்துக்கொண் டிருக்கிறேன் என்பது கருத்து. (அ)

யாதுநீநினைவதெவரையாமுடைய
தெவர்களும்யாவையுந்தானாய்ப்
பாதுகைமழலைச்சிலம்பொடுபுகுந்தென்
பணிமலர்க்கண் ணுணின்றகலான்
கேதகைநிழலைக்குருகெனமருவிக்
கெண்டைகள்வெருவுகீழ்க்கோட்டூர்
மாதவன்மணியம்பலத்துணின்றாடு
மைந்தனென்மனம்புகுந்தானே.

ப-ரை. கேதகை நிழலை - தாழம்பூவின் நிழலை. குருகு என மருவி - குருகென்று மனத்திற்கொண்டு, கெண்டைகள் வெருவு -

கெண்டை மீன்கள் அஞ்சுகிற, கீழ்க்கோட்டூர்—, மாதவன்-பெருந்தவத்தான், மணியம்பலத்துள் நின்று ஆடும் மைந்தன்—, என் மனம் புகுந்தான்-என்மனத்தை யடைந்தான்; எவர்களும் யாவையும் தான் ஆய் - எவர்களும் யாவையும் தானேயாகி, பாதுகை மழலைச் சிலம்பொடு புகுந்து - பாதுகை மெல்லிய சிலம்பு என்பவற்றோடு புகுந்து, என் - எனது, பனி - குளிர்ச்சிபொருந்திய், மலர் - தாமரை மலர்போன்ற, கண்ணுள் நின்று - கண்ணில் நின்றும், அகலான் - நீங்காதிருக்கிறான் (ஆதலால் மனமே), நீ நினைவது யாது - நீ நினைப்பதுயாது; யாம் உடையது எவரை - யாமுடையது யாரை, எ-று.

வி-ரை. கேதகை - பொருளாகுபெயர். சநகாதியராகிய தவத்தினர்க்கு உபதசித்தவனாதலால் இறைவனை 'மாதவன்' என்றார். மாதவன் - ஒரு பாகத்திற் பெண்ணை யுடையவன் எனினுமாம். (கூ)

அந்திபோ லுருவுமந்தியிற்பிறைசே
　　ரழகியசடையும்வெண்ணீறுஞ்
சிந்தையானினையிற்சிந்தையுங்காணேன்
　　செய்வதென்றெளிபுனலலங்கற்
கெந்தியாவுகளுங்கெண்டைபுண்டரிகங்
　　கிழிக்குந்தண்பணைசெய்கீழ்க்கோட்டூர்
வந்தநாண் மணியம்பலத் துணின்றாடு
　　மைந்தனேயறியுமென்மனமே.

ப-ரை. அந்திபோல் உருவும் - அந்திவானம்போ லுருவையும், அந்தியின் பிறை சேர் - அந்திவானத்திற்போல பிறைதங்கிய, அழகிய சடையும் - அழகாகிய சடையையும், வெண்ணீறும் - திருவெண்ணீற்றையும். சிந்தையால் நினையின் - மனத்தால் நினைக்கவேண்டுமெனின், சிந்தையும் காணேன் - மனத்தையும் காணேன், செய்வது என் - செய்வதுயாது, தெளிபுனல் அலங்கல் - தெளிந்த நீரையுடைய அலைகளில், கெந்தியா உகளும் - கந்தித்துத் தாவுகிற, கெண்டை - கெண்டைமீன்கள், புண்டரிகம் கிழிக்கும் - தாமரையைக் கிழிக்கின்ற, தண்பணை செய் - குளிர்ச்சியாகிய வயல்சூழ்ந்த, கீழ்க்கோட்டூர் வந்த-திருக்கீழ்க் கோட்டூரில் எழுந்தருளிய, நாள் - புதுமையான. மணியம்பலத்துள் நின்று ஆடும்—, மைந்தனே-திண்ணியனே. என்மனன் அறியும் - என்மனத்தை யறிவான், எ-று.

வி-ரை. அந்திபோலுரு - செவ்வுரு. அலங்கல் - அசைதல்; அது அசைதலையுடைய அலைகளுக் காயினமையால் தொழிலாகு

பெயர். கந்தித்தல் - மணத்தல்; தாமரைத் தடங்களில் வாழ்வத ஞல் கெண்டைக்கு மணங் கூறப்பட்டது. (க0)

கித்திநின் றாடுமரிவையர்தெருவிற்
கெழுவுகம்பலைசெய்கீழ்க்கோட்டூர்
மத்தனைமணியம்பலத்துணின்றாடு
மைந்தனையாரணம்பிதற்றும்
பித்தனேன்மொழிந்தமணிநெடுமாலை
பெரியவர்க்ககலிருவிசும்பின்
முத்தியாமென்றேயுலகரேத்துவரேன்
முகமலர்ந்தெதிர்கொளுந்திருவே.

ப-ரை. நின்று கித்தி ஆடும்-நின்று கித்தி விளையாடுகிற, அரிவையர்-மாதர், தெருவில்-தெருக்களில், கெழுவுகம்பலைசெய்-பொருந்திய ஆரவாரத்தைச் செய்கின்ற, கீழ்க்கோட்டூர் மத்தனை - திருக்கீழ்க்கோட்டூரிலெழுந்தருளின மத்தனை, மணியம்பலத்துள் நின்று ஆடும் மைந்தனை—, ஆரணம் பிதற்றும்-வேதத்தைப்பிதற்றுகிற,பித்தனேன் - பித்தனாகிய நான், மொழிந்த-புகழ்ந்து சொல்லிய, மணி நெடுமாலை - அழகிய பெரிய தமிழ்மாலையால், பெரியவர்க்கு - பெரியோருக்கு, அகல் இரு விசும்பின் - அகன்ற பெரிய சுவர்க்கலோகம் போல, முத்தி ஆம் என்று - முத்தியுமுண்டாகுமென்று, உலகர் ஏத்துவரேல் - உலகத்தார் துதிப்பாராயின், திரு - இலக்குமியும், முக மலர்ந்து எதிர்கொள்ளும் - முகமலர்ந்து எதிர் கொள்வாள், எ - று.

வி-ரை. கித்தி - மகளிர் விளையாட்டிலொன்று. மத்தன்-உன்மத்தன். மைந்தன் - திண்ணியன் (அழியாதவன்). (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## ௪. திருமுகத்தலை.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

புவனநாயகனேயகவுயிர்க்கமுதே
பூரணாவாரணம்பொழியும்
பவளவாய்மணியேபணிசெய்வார்க்கிரங்கும்
பசுபதீபன்னகாபரணா

வவனிஞாயிறுபோன்றருள்புரிந்தடியே
னகத்திலுமுகத்தலைமூதூர்த்
தவளமாமணிப்பூங்கோயிலுமமர்ந்தாய்
தனியனேன்றனிமைநீங்குதற்கே.

ப-ரை. புவன நாயகனே - லோகநாதனே, அகவுயிர்க்கு அமுதே - அந்த வுலகினுள்ளுயிர்களுக்கு அமிர்தமே, பூரணா - எங்கும் நிறைந்தவனே, ஆரணம் பொழியும் - வேதங்களைச்சொரிகின்ற, பவளவாய் மணியே - பவளம்போலும் திருவாயினையுடைய மாணிக்கமே, பணி செய்வார்க்கு இரங்கும் - தொண்டு செய்வோர்க்கு இரங்கி யருள்கின்ற, பசுபதீ - பசுபதியே, பன்னகம் ஆபரணா - சர்ப்பாபரணனே, அவனி - உலகத்திற்கு, ஞாயிறு போன்று - சூரியனை நிகர்த்து, அருள் புரிந்து - அருள்செய்து, அடியேன் அகத்திலும் - அடியேனது மனத்திலும், முகத்தலை மூதூர் - திருமுகத்தலையென்னும் பழைய ஊராகிய, தவளம் மாமணிபூம் கோயிலும் - வெண்மையாகிய பெருமை பொருந்திய ரத்நங்கள் இழைத்த அழகாகிய கோயிலிலும், தனியனேன் - தனியேனது, தனிமை - தனிமையானது, நீங்குதற்கு அமர்ந்தாய் - ஒழிவதற்கு எழுந்தருளி யிருந்தாய், எ - று.

வி-ரை. பசுபதி - ஆன்மகோடிகளுக்குத் தலைவன். பன்னகம் - காலால் நடவாதது (பாம்பு). தனிமை - தனித்திருப்பு. கோயிலும் என்பதில் இல் என்னும் ஏழனுருபு தொக்கது. (க)

புழுங்குதீவினையேன்வினைகெடப்புகுந்து
புணர்பொருளுணர்வுநூல்வகையால்
வழங்குதேன்பொழியும்பவளவாய்முக்கண்
வளரொளிமணிநெடுங்குன்றே
முழங்குதீப்புனல்பாய்ந்திளவராலுகளு
முகத்தலையகத்தமர்ந்தடியேன்
விழுங்குதீங்கனியாயினியவானந்த
வெள்ளமாயுள்ளமாயினையே.

ப-ரை. புழுங்கு - மனம் புழுங்குகின்ற, தீவினையேன் - தீவினையுடையேனது, வினைகெட - வினை யொழியும்படி, புகுந்து - எழுந்தருளி, புணர்பொருள் - புணர்க்கப்பட்ட எல்லாப் பொருள்களையும், உணர்வுநூல் வகையால் - அறிவுநூல் வகையினால், வழங்கு - வழங்குகிற, தேன் பொழியும் - தேன் சொரிகின்ற, பவளவாய் - பவ

ளம்போலும் வாயினையும், முக்கண் - மூன்று கண்களையும், வளர் ஒளி - மிக்க ஒளியையுமுடைய, நெடு - நெடிய, மணிக்குன்றே - மாணிக்கமலையே, முழங்கு-ஒலிக்கின்ற, தீம் புனல் பாய்ந்து-இனிய நீரிற் பாய்ந்து, இளவரால்-இளமையாகிய வரால் மீன்கள், உகளும் - குதிக்கப்பெற்ற, முகத்தலை அகத்து அமர்ந்து - திருமுகத் தலையினிடத்து எழுந்தருளி, அடியேன் விழுங்கு - அடியேன் விழுங்குகின்ற, தீங்கனியாய் - மதுரமுள்ள பழமாகி, இனிய ஆனந்த வெள்ளமாய் - இனிதாகிய இன்பப் பெருக்காய், உள்ளம் ஆயினை - என்னுள்ளமு மாயினாய், ஏ - இஃதென்ன வியப்பு, எ-று.

வி-ரை. உணர்வுநூல் - வீட்டுநூல். (உ)

கன்னெகாவுள்ளக்கள்வனேனின்கட்
கசிவிலேன்கண்ணினீர்சொரியேன்
முன்னகாவொழியேனாயினுஞ்செழுநீர்
முகத்தலையகத்தமர்ந்துறையும்
பன்னகாபரணாபவளவாய்மணியே
பாவியேனாவியுள்புகுந்த
தென்னகாரணநீயேழைநாயடியேற்
கெளிமையோபெருமையாவதுவே.

ப-ரை. நெகா கல் - உருகாத கல்லைப்போன்ற, உள்ளம் - மனத்தையுடைய, கள்வனேன் - கள்வனாகிய நான், நின்கண் கசிவு இலேன் - உன்னிடத்துக் கசிதலையுடையே னல்லேன்; கண்ணில் நீர் சொரியேன் - கண்ணில்நின்றும் நீரைப் பொழியேன்; முன் நகா ஒழியேன் - உன் எதிரே நின்று சிரித்து நீங்கேன்; ஆயினும் - ஆனாலும், செழுநீர் - செழுமையாகிய நீர் சூழ்ந்த, முகத்தலை அகத்து - திருமுகத்தலையென்னும் திருப்பதியில், அமர்ந்து உறையும் - விரும்பி வாழ்கின்ற, பன்னக ஆபரணா - சர்ப்பாபரணனே, பவளவாய் மணியே - பவளம்போலும் திருவாயினையுடைய மாணிக்கமே, பாவியேன் - பாவியாகிய என்னுடைய, ஆவியுள் நீ புகுந்தது- உயிரினுள்ளே நீ புகுந்தது, என்ன காரணம் - யாதுநிமித்தம், ஏழை நாயடியேற்கு - அறிவிலியாகிய நாய்போன்ற அடியேனுக்கு, எளிமையோ - எளிமையா யிருப்பதுவோ, பெருமையாவது - உனக்குப் பெருமையாவது, எ-று.

வி-ரை. அமர்தல் - விரும்புதல். (ங)

கேடிலாமெய்ந்நூல்கெழுமியுஞ்செழுநீர்க்
கிடையனாருடையவென்னெஞ்சிற்
பாடிலாமணியேமணியுமிழ்ந்தொளிரும்
பரமனேபன்னகாபரணா
மேடெலாஞ்செந்நெற்பசுங்கதிர்விளைந்து
மிகத்திகழ்முகத்தலைமூதூர்
நீடினாயெனினுமுள்புகுந்தடியே
னெஞ்செலாநிறைந்துநின்றாயே.

ப-ரை. கேடு இல்லா - கெடுதல் இல்லாத, மெய்ந் நூல் கெழுமியும் - உண்மை நூல்களோடு பழகியும், செழு நீர்-செழுமையாகிய நீரிலுள்ள, கிடை அனார் உடைய - கிடைபோன்ற, என் நெஞ்சில் - என் மனத்தில் அமர்ந்த, பாடு இல்லா மணியே - அழிவற்ற மாணிக்கமே, மணி உமிழ்ந்து ஒளிரும் - மாணிக்கங்கள் ஒளியைக் கக்கிப் பிரகாசிக்கின்ற, பரமனே - மேலானவனே, பன்னக ஆபரணா - சர்ப்பாபரணனே, மேடு எல்லாம் - மேட்டு நிலங்களெல்லாம், செந்நெல் - செந்நெல்லினது, பசுங்கதிர் விளைந்து - பசுமையாகிய கதிர்கள் விளைந்து, மிக திகழ் - மிகுதியாக விளங்குகின்ற, முகத்தலை மூதூர் - திருமுகத்தலை யென்னும் பழமையாகிய வூரிடத்து, நீடினாய் எனினும் - நெடுங்காலமாய் வாழ்ந்திருந்தா யெனினும், அடியேன் உள் புகுந்து- அடியேன் மனத்திற் புகுந்து, நெஞ்சு எல்லாம்- நெஞ்சு முழுதும், நிறைந்து நின்றாய் - நிறைந்து நின்றனை, எ-று.

வி-ரை. கிடை - சடை (தக்கை); இது எப்பொழுதும் நீரிலிருந்தும் நீர் பற்றாததுபோல என்மனமும் உண்மையாகிய நூல்களோடு பழகியும் அவற்றின் பொருள்களிற் பற்றின்றி யிருக்குமென்பதுதோன்ற, 'கேடிலா மெய்ந்நூல் கெழுமியுஞ் செழுநீர்க் கிடையனா ருடையவென் னெஞ்சு' என்றார். கேடு, பாடு என்பன முதனிலை திரிந்த தொழிற்பெயர்கள். (ச)

அக்கனாவனையசெல்வமேசிந்தித்
தைவரோடென்னொடும்விளைந்த
விக்கலாமுழுதுமொழியவந்துள்புக்
கென்னையாளாண்டநாயகனே
முக்கணாயகனேமுழுதுலகிறைஞ்ச
முகத்தலையகத்தமர்ந்தடியேன்

பக்கலானந்தமிடையறுவண்ணம்
பண்ணிஞய்பவளவாய்மொழிந்தே.

ப-ரை. அ கண அனைய - அந்தச் சொப்பனத்தையே நிகர்த்த, செல்வமே சிந்தித்து - செல்வத்தையே நினைத்து, ஐவரோடு என்னொடும் விளைந்த - ஐவருக்கும் எனக்கும் உண்டான, இகலாம் முழுதும் ஒழிய - இந்தக் கலகம் முழுதும் ஒழியும்படி, வந்து உள் புக்கு - எழுந்தருளி என்னுள்ளத்தில் புகுந்து, என்னை ஆள் ஆண்ட - என்னை ஆளாக ஆண்டருளின, நாயகனே - தலைவனே, முக்கண் நாயகனே - மூன்று கண்களையுடைய தலைவனே, முழுது உலகு இறைஞ்ச - உலகமுழுதும் வணங்கும்படி, முகத்தலை அகத்து அமர்ந்து - திருமுகத்தலையினிடத்தில் அமர்ந்தருளி, பவளவாய் மொழிந்து - பவளம்போலும் திருவாயினல் உபதேசித்தருளி, அடியேன் பக்கல் - அடியேனிடத்தில், ஆனந்தம் - இன்பமானது, இடையறுவண்ணம் பண்ணிஞய்-இடையருதபடி செய்தனை, எ-று.

வி-ரை. ஐவர் - ஐம்பொறிகள், ஐவரோடென்னொடும் உருபு மயக்கம். மொழிதல் - உபதேசித்தல். (ரு)

புனல்படவுருகிமண்டழல்வெதும்பிப்
பூம்புனல்பொதிந்துயிரளிக்கும்
வினைபடுநிறைபோனிறைந்தவேதகத்தென்
மனநெகமகிழ்ந்தபேரொளியே
முனைபடுமதின்மூன்றெரித்தநாயகனே
முகத்தலையகத்தமர்ந்தடியேன்
வினைபடுமுடனீபுகுந்துநின்றமையால்
விழுமியவிமானமாயினதே.

ப-ரை. புனல்பட உருகி - நீர்பட உருகி, மண்டு அழல் வெதும்பி - மிகுதியாகிய நெருப்பினல் வெதும்பி, பூம்புனல் பொதிந்து - அழகிய நீர்நிறைந்து, உயிர் அளிக்கும்-உயிர்களைக் காக்கின்ற, வினைபடு நிறைபோல் நிறைந்த - தொழிலமைந்த நிறைகருவிபோல் நிறைந்த, வேதகத்து - வேதகத்தினல், என்மனம் நெக - என்மனம் நெகிழும்படி, மகிழ்ந்த - மனமகிழ்ந்த, பேரொளியே - பெருஞ்சோதியே, முனைபடு - முனைந்து வந்த, மதில் மூன்று - மும்மதில்களை, எரித்த - நீறக்கின, நாயகனே-இறைவனே, முகத்தலை அகத்து அமர்ந்து - திருமுகத்தலையினிடத்தமர்ந்தருளி, அடியேன்-அடியேனது,

வினைபடும் உடல் - வினையினுலெடுத்த உடம்பில், நீ புகுந்து நின்றமையால் - நீ புகுந்து நின்றதனுல், (அவ்வுடம்பு) விழுமிய விமானம் ஆயினது - உனக்கு மேலான விமானமாயிற்று, எ - று.

**வி-ரை.** நிறை - நிறைகோல் (தராசு). வேதகம் - வேறுபாடு. முனைதல் - எதிர்த்தல். உடலெடுத்தற்குக் காரணம் வினையாதலால் 'வினைபடுமுடல்' என்ருர். (சு)

**வி**ரியுநீராலக்கருமையுஞ்சாந்தின்
வெண்மையுஞ்செந்நிறத்தொளியுங்
கரியுநீருடுங்கனலுமொத்தொளிருங்
கழுத்திலோர்தனிவடங்கட்டி
முரியுமாறெல்லாமுரிந்தழகியையாய்
முகத்தலையகத்தமர்ந்தாயைப்
பிரியுமாறுளதேபேய்களோஞ்செய்த
பிழைபொறுத்தாண்டபேரொளியே.

**ப-ரை.** விரியுநீர் - கடல்நீரிற் பிறந்த, ஆலக்கருமையும்-விடத்தின் கருநிறமும், சாந்தின் வெண்மையும் - திருநீற்றின் வெண்மையும், செந்நிறத்து ஒளியும் - செந்நிறமாகிய தேஜசும், கரியும் நீறு ஆடும் கனலும் - சுடப்பட்ட நீற்றில் மறைந்த நெருப்பும், ஒத்து - நிகர்த்து, ஒளிரும் - பிரகாசிக்கிற, கழுத்தில்-கண்டத்தில், ஓர் தனி வடம் கட்டி - ஒப்பற்ற ஒற்றைவடம் பூட்டி, முரியுமாறு எல்லா முரிந்து - தோற்றுவதையெல்லாம் தோற்றி, அழகியை ஆய்-அழகுடையையாகி, முகத்தலை அகத்து - திருமுகத்தலையினிடத்தில், அமர்ந்தாயை - எழுந்தருளின வுன்னை, பிரியுமாறு உளதே-பிரியும் வகையுளதோ, பேய்களோம்-பேய்களை நிகர்த்தவர்களாகிய நாங்கள், செய்த - பண்ணின, பிழைபொறுத்து ஆண்ட-பிழைகளைப்பொறுத்தாண்டருளின, பேர் ஒளியே - பெருஞ்சோதியே, எ - று.

**வி-ரை.** கடலினும் விரிந்த நீரில்லையாதலால் அதனை 'விரியுநீர்' என்ருர். "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்-துண்ணின் றுடற்றும் பசி" என்ருர் பிறரும். ஆலம் - விடம். முரிதல் - தோற்றுதல். (எ)

**எ**ன்னையுன்பாதபங்கயம்பணிவித்
தென்பெலாமுருகநீயெளிவந்

துன்னையென்பால்வைத்தெங்குமெஞ்ஞான்று
மொழிவறநிறைந்தவொண்சுடரே
முன்னையென்பாசமுழுவதுமகல
முகத்தலையகத்தமர்ந்தெனக்கே
கன்னலும்பாலுந்தேனுமாரமுதுங்
கனியுமாயினியையாயினையே.

ப - ரை. என்னை - அடியேனை, உன் - உனது பாதபங்கயம் - திருவடித்தாமரைமலரை, பணிவித்து - வணங்கப்பண்ணி, என்பு எல்லாம் உருக - என்பு முழுதும் உருகும்படி, நீ எளிவந்து - நீ எளிதில் எழுந்தருளி, உன்னை - நின்னை, என்பால் வைத்து - என்னிடத்து வைத்து, எங்கும் - எவ்விடத்தும், எஞ்ஞான்றும் - எந்நாளும், ஒழிவு அற நிறைந்த - நீக்கமில்லாமல் நிறைந்த, ஒண் சுடரே - ஒட்பமாகிய ஒளியே, முன்னை - முற்பட்ட, என் பாசம் முழுவதும் - என் பாச முழுதும், அகல - நீங்க, முகத்தலை அகத்து அமர்ந்து - திருமுகத்தலை யென்னுமிடத்து எழுந்தருளி, எனக்கு - அடியேனுக்கு, கன்னலும் - கருப்பஞ்சாறும், பாலும் - பாலும், தேனும் - தேனும், ஆர் அமுதம் - அருமையாகிய அமிர்தமும், கனியும் ஆய் - கனிகளுமாகி, இனியை ஆயினை - இனிமை யுடையையாயினாய், எ - று.

வி - ரை. பாதபங்கயம் - வடசொற் புணர்ச்சியாதலால் இயல்பாயிற்று. கன்னல் - சர்க்கரை யெனினுமாம். (அ)

அம்பராவனலாவனிலமேபுவிநீ
யம்புவேயிந்துவேயிரவி
யும்பராலொன்றுமறியொணுவணுவா
யொழிவறநிறைந்தவொண்சுடரே
மொய்ம்பராய்நலஞ்சொன்மூதறிவாளர்
முகத்தலையகத்தமர்ந்தெனக்கே
யெம்பிரானாகியாண்டநீமீண்டே
யெந்தையுந்தாயுமாயினையே.

ப - ரை. அம்பரா - ஆகாயமா யிருப்பவனே, அனலா - நெருப்பாயிருப்பவனே, அனிலமே - காற்றாயிருப்பவனே, புவி நீ - மண்ணும் நீயே, அம்புவே - நீராயிருப்பவனே, இந்துவே - சந்திரனு

யிருப்பவனே, இரவி - சூரியனு யிருப்பவனே, உம்பரால் - தேவர்களால், ஒன்றும் - சிறிதும், அறியொணு - அறியவொண்ணுத, அணுவாய் - அணுரூபமாகி, ஒழிவு அற நிறைந்த - (எங்கும்) நீக்கமில்லாமல் நிறைந்த, ஒள் சுடரே - ஒட்பமாகிய ஒளியே, மொய்ம்பர் ஆய் - மனவுறுதி யுடையராகி, நலம் சொல் - நன்மையைப் போதிக்கிற, மூதறிவாளர் - பேரறிவாளர் வாழ்கின்ற, முகத்தலையகத்து அமர்ந்து - திருமுகத்தலையி லெழுந்தருளி, எனக்கே எம்பிரான் ஆகி - எனக்கே உபகாரகனுகி, ஆண்ட நீ-ஆண்டருளின நீ, மீண்டு-மறுபடியும், எந்தையும் தாயும் ஆயினை - என் தந்தையும் தாயுமானுய், எ-று.

வி-ரை. அம்பரம் - ஆகாயம். அனல் - நெருப்பு. அனிலம் - காற்று. அம்பு - நீர். மொய்ம்பு - மனவுறுதி. (௯)

மூலமாய்முடிவாய்முடிவிலாமுதலாய்
முகத்தலையகத்தமர்ந்தினிய
பாலுமாயமுதாம்பன்னகாபரணன்
பணிமலர்த்திருவடியிணைமே
லாலையம்பாகினனையசொற்கருவூ
ரமுதூறழ்தீந்தமிழ்மாலை
சீலமாப்பாடுமடியவரெல்லாஞ்
சிவபதங்குறுகிநின்றாரே.

ப-ரை. மூலம் ஆய் - முதலாகி, முடிவு ஆய்-முடிவாகி, முடிவு இல்லா முதல் ஆய் - முடிவில்லாத முதற்பொருளாகி, முகத்தலை அகத்து அமர்ந்து - திருமுகத்தலையி லெழுந்தருளி, இனிய பாலும் ஆய் - இனிய பாலுமாகி, அமுது ஆம் - அமுதம் ஆகின்ற, பன்னகாபரணன் - சர்ப்பாபரணனது, பணி - குளிர்ச்சி பொருந்திய, மலர் - தாமரை மலர்போன்ற, திருவடி இணைமேல் - இரண்டு சீர்பாதத்தின் மீது, ஆலை பாகின் அனைய - கருப்பஞ் சாற்றை யொத்த, சொல் - சொற்களால், கருவூர் - கருவூர்த்தேவர், (செய்த) அமுது உறழ் - அமிர்தத்தை யொத்த, தீ தமிழ்மாலை - இனிதாகிய தமிழ்மாலையை, சீலமா பாடும் - நியமமாகப் பாடுகின்ற, அடியவர் எல்லாம் - அடியாரெல்லாரும், சிவபதம் - சிவபதவியை, குறுகி நின்றாரே - அடைந்து நின்றவரேயாவர், எ-று.

வி-ரை. அமுதாம் என்பதில் இறந்தது தழீஇயவெச்சவும்மை தொக்கது. பாலும் என்றவும்மை எதிரது தழீஇயது. ஆலையம்பாகின் என்பதில் அம் சாரியை. நின்றார் என்றிறந்தகாலத்தாற் கூறினது துணிவுபற்றி யென்க. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௫—திரைலோக்கியசுந்தரம்.

### பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

நீரோங்கிவளர்கமலநீர்பொருந்தாத்தன்மையன்றே
யாரோங்கிமுகமலர்ந்தாங்கருவினையேன்றிறமறந்தின்
றூரோங்கும்பழிபாராதுன்பாலேவிழுந்தொழிந்தேன்
சீரோங்கும்பொழிற்கோடைத்திரைலோக்கியசுந்தரனே.

ப-ரை. நீர் - நீரினிடத்து, ஓங்கி வளர் - சிறந்து வளர்கின்ற, கமலம் - தாமரை, நீர் பொருந்தா தன்மை அன்றே-நீரைப் பெருத தன்மை யல்லவா, ஆர் ஓங்கி - அருமை மிகுந்து, முகம் மலர்ந்தார்-முகமலர்ந்தாற்போல, அருவினையேன் - தொலைத்தற்கரிய வினையையுடையேனது, திறம் - தன்மையை, மறந்து - மறந்து, இன்று - இந்நாள், ஊர் ஓங்கும் - ஊரில் மிக்குத் தோன்றுகிற, பழி பாராது-பழியை நோக்காமல், உன்பாலே விழுந்தொழிந்தேன் - உன்னிடத்திற்றுனே வீழ்ந்தொழிந்தேன், சீர் ஓங்கும் - சிறப்பு மிகுந்த, பொழில்-சோலைகள் சூழ்ந்த, கோடை திரைலோக்கிய சுந்தரனே - கோடைத் திரைலோக்கிய சுந்தரனே, எ-று.

வி-ரை. அருவினையேன் திறம் - ஆன்மபோதம். பழி-நிந்தை.

நையாதமனத்தினனைநைவிப்பானித்தெருவே
யையாநீயுலாப்போந்தவன்றுமுதலின்றுவரை
கையாரத்தொழுதருவிகண்ணூரச்சொரிந்தாலுஞ்
செய்யாயோவருள்கோடைத்திரைலோக்கியசுந்தரனே.

ப-ரை. நையாத மனத்தினனை - வருத்தாத மனத்தை யுடையவனாகிய என்னை, நைவிப்பான் - வருத்தும்பொருட்டு, இத்தெருவே - இந்தத் தெருவின்கண்ணே, ஐயா - ஐயனே, நீ உலா போந்த - நீ உலாவந்த, அன்றுமுதல் - அன்றுமுதலாக, இன்றுவரை - இன்று வரைக்கும், கையார தொழுது - கையார வணங்கி, கண்ணூர அருவி சொரிந்தாலும் -கண்ணூர நீரருவியைப் பொழிந்தாலும், அருள் செய்யாயோ - அருள் செய்யமாட்டாயோ, கோடைதிரைலோக்கிய சுந்தரனே—, எ-று.

வி-ரை. நையாத - உருகாத எனினுமாம். உலாப்போதல் - பவனி வருதல். கண்ணூர அருவி சொரிந்தாலும் என வினையும்.

கண்ணூர் அருவி சொரிதலாவது - கண்களில் அருவியாறுபோல நீரைப் பெருக்குதல். (உ)

அப்பளிங்குபகலோன்பாலடைப்பற்றாயிவன்மனத்தின்
முன்பளித்தகாதலுநின்முகந்தோன்றவிளங்கிற்றால்
வம்பளித்தகனியேயென்மருந்தேநல்வளர்முக்கட்
செம்பளிங்கேபொழிற்கோடைத்திரைலோக்கியசுந்தர...

[இச்செய்யுள் கருகல்.]

மைஞ்ஞின்றகுழலாடன்மனந்தரவும்வளைதாரா
திஞ்ஞின்றகோவணவனிவன்செய்ததியார்செய்தார்
மெய்ஞ்ஞின்றதமர்க்கெல்லாமெய்ஞ்ஞிற்கும்பண்பினுறு
செய்ஞ்ஞன்றியிலன்கோடைத்திரைலோக்கியசுந்தரனே.

ப-ரை. மைஞின்ற - கருமை நிலைபெற்ற, குழலாள் - கூந்தலை யுடையவள், தன்மனம் தரவும்-தன் மனத்தைக் கொடுக்கவும், வளை தாராது - வளையலைக் கொடாமல், இஞின்ற கோவணவன் - இந்த நிலைபெற்ற கோவணத்தை யுடையனாகிய, இவன் செய்தது-இவன் செய்த காரியத்தை, யார் செய்தார் - வேறு யாவர் செய்தார்; மெய் ஞின்ற - உண்மை நெறியில் நிற்கின்ற, தமர்க்கு எல்லாம் - அன்பர்க் கெல்லாம், மெய் ஞிற்கும் பண்பின் உறு-உண்மையாய் நிற்கும் குண த்தால் மிகுந்த, செய்ஞன்றி இலன் - செய்நன்றியிலன், கோடைத் திரைலோக்கிய சுந்தரனே—, எ-று.

வி-ரை. ஞின்ற என்பதில் நகரத்திற்கு ஞகரம் போலியாய் வந்தது. நன்றி - உபகாரம். (ச)

நீவாராதொழிந்தாலுநின்பாலேவிழுந்தேழை
கோவாதமணிமுத்துங்குவளைமலர்சொரிந்தனவா
லாவாவென்றருள்புரியாயமரர்கணந்தொழுதேத்துந்
தேவாதென்பொழிற்கோடைத்திரைலோக்கியசுந்தரனே.

ப-ரை. நீ வாராது ஒழிந்தாலும் - நீ வராதொழிந்தாலும், நின் பாலே விழுந்து - உன்னிடத்திலே விழுந்து, ஏழை - என் பெண் ணினது, குவளை மலர் - குவளைமலர்கள், கோவாத மணிமுத்தும் - கோவாத மணிகளாகிய முத்துக்களையும், சொரிந்தன - சிந்தின, ஆல் - ஆகையால், ஆவா என்று - ஐயோவென்று, அருள் புரியாய் -

அருள் செய்வாயாக; அமரர் கணம் தொழுது எத்தும் - தேவர் கூட்டங்கள் வணங்கித் துதிக்கின்ற, தேவா-தேவனே, தென் பொழில்-அழகிய சோலை சூழ்ந்த, கோடைத் திரைலோக்கிய சுந்தரனே—, எ-று.

வி-ரை. கோவாத மணியென்றது கண்ணீர்த் துளிகளை. மணி-அழகு எனினுமமையும். குவளைமலர் என்றது கண்களை. (௫)

முழுவதுநீயாயினுமிம்மொய்குழலாள்மெய்ம்முழுதும்
பழுதெனவேநினைந்தோராள்பயில்வதுநின்னொருநாம
மழுவதுநின்றிறநினைந்தேயதுவன்றேபெறும்பேறு
செழுமதில்சூழ்பொழிற்கோடைத்திரைலோக்கியசுந்தரனே.

ப-ரை. முழுவதும் - உலகங்கள் முழுதும், நீ ஆயினும் - நீயே யானாலும், இ - இந்த, மொய் குழலாள் - நெருங்கிய கூந்தலை யுடையவளான என் பெண்ணனவள், மெய் முழுதும் - சரீரங்களெல்லாம், பழுது எனவே நினைந்து ஓராள் - பழுதென்றே நினைத்து ஆராயாதவளாய், பயில்வதும் - இடையறாது உச்சரிப்பதும், நின் ஒருநாமம்-உனது ஒப்பற்ற திருநாமங்களையே; அழுவதும் - அவள் அழுவதும், நின் திறம் நினைந்தே - உன் மங்கள குணங்களை நினைந்தே; அது அன்றே - அதுவல்லவோ, பெறும் பேறு - அவள் பெறுதற்குரிய பயன்; செழு மதில் சூழ் பொழில் - செழுமையாகிய மதில்களையும் சூழ்ந்த சோலைகளையுமுடைய, கோடைத்திரைலோக்கிய சுந்தரனே—, எ-று.

வி-ரை. பழுது - நிலையில்லது. ஓர்தல் - ஆராய்தல். (௬)

தன்சோதியெழுமேனித்தபனியப்பூஞ்சாய்காட்டா
யுன்சோதியெழில்காண்பானோலிடவுமுருக்காட்டாய்
துஞ்சாகண்ணிவளுடையதுயர்நிருமாறுரையாய்
செஞ்சாலிவயற்கோடைத்திரைலோக்கியசுந்தரனே.

ப-ரை. தன் - தனது, சோதி எழு ஒளி யெழுகின்ற, மேனி-திருமேனியின், தபனியம் - பொன்னினது, பூ சாய் காட்டாய் - அழகிய சாயலைக் காட்டமாட்டாய்; உன் - உனது, சோதி எழில் - ஒளியோடு கூடின அழகை, காண்பான் - காணும் பொருட்டு, ஓலிடவும் - முறையிடவும், உரு காட்டாய் - உருவைக் காட்டமாட்டாய்; கண் துஞ்சா-கண் ணுறங்காத, இவளுடைய-இவளது, துயர்-

துன்பமானது, திருமாறு - திருந் வண்ணம், உரையாய் - சொல்லக்கடவை; செஞ்சாலி வயல் - செந்நெல் வயல்சூழ்ந்த, கோடைத் திரைலோக்கிய சுந்தரனே—, எ-று.

வி-ரை. சாய் - நிறம் எனினுமாம். ஓலிடல் - ஓலமிடல் என்பதன் விகாரம். திருமாறு என்பதில் ஆறு உபாயம் எனினுமாம்.

அரும்பேதைக்கருள் புரியாதொழிந்தாய்நின்னவிர் சடைமே
னிரம்பாதபிறை தாவுநெருப்பொடுநின்கையிலியாழ்
நரம்பாலுமுயிரீர்ந்தாய்நளிர்புரிசைக்குளிர்வனம்பா
திரம்போதுசொரிகோடைத்திரைலோக்கியசுந்தரனே.

ப-ரை. அரு-அருமையாகிய, பேதைக்கு - என் பெண்ணுக்கு, அருள் புரியாது ஒழிந்தாய் - அருள் செய்யாது ஒழிந்தாய்; நின் - உனது, அவிர் சடைமேல் - விளங்குகின்ற சடையின்மீதுள்ள, நிரம்பாத பிறை-இளம்பிறையானது, தாவும்-தாவுகின்ற, நெருப்பொடு - நெருப்புடனே, நின் கையில் - நின்கையிலுள்ள, யாழ் நரம்பாலும் - வீணையின் நரம்பினாலும், உயிர் ஈர்ந்தாய் - உயிரைப் பிளந்தனை; நளிர் - குளிர்ச்சிபொருந்திய, புரிசை - மதிலின்மீது, குளிர் வனம் - குளிர்ந்த சோலைகள், பாதிரம் போது சொரி - பாதிரிப்பூக்களைச் சிந்துகின்ற, கோடைத் திரைலோக்கிய சுந்தரனே—, எ-று.

வி-ரை. அவிர்தல் - ஒளி செய்தல். நிரம்பாத பிறை - கலைகள் நிறையாத சந்திரன் எனினுமாம். ஈர்தல் - பிளத்தல். பாதிரம் - பாதிரிமரம். (அ)

ஆறாதபேரன்பினவருள்ளக்குடிகொண்டு
வேறாகப்பலர்சூழவீற்றிருத்தியதுகொண்டு
வீறுடிபிவளுன்னைப்பொதுநீப்பான்விரைந்தின்னந்
தேறுடென்பொழிற்கோடைத்திரைலோக்கியசுந்தரனே.

ப-ரை. ஆறாத - தணியாத, பேரன்பினவர் - பேரன்பினையுடையவரது, உள்ளம்-மனத்தில், குடிகொண்டு-குடியாகி, வேறாக-அயலாக, பலர் சூழ - பலபேர் சூழும்படி, வீற்றிருத்தி - வீற்றிருக்கிறாய், அதுகொண்டு - அதனால், வீறுடி - மேன்மை யடைந்து, இவள் - இந்தப் பெண்ணானவள், உன்னை-நின்னை, பொது நீப்பான்-பொதுத் தன்மையில் உன்னை நீக்கும்பொருட்டு, விரைந்து - விரைவுகொண்டு, இன்னம் - இன்னமும், தேறாள் - தெளியாதவளாயிருக்கிறாள், தென்பொழில் - அழகாகிய சோலைகள் சூழ்ந்த, கோடைத் திரைலோக்கிய சுந்தரனே—, எ-று.

வி-ரை. பொது நீத்தல் - தானே துய்த்தல். கொண்டு - மூன்ருவதன் சொல்லுருபு. தேறல் - தெளிதல். (கூ)

சரிந்ததுகிறளர்ந்தவிடையவிழ்ந்தகுழலிளந்தெரிவை
யிருந்தபரிசொருநாள்கண்டிரங்காயெம்பெருமானே
முரிந்தநடைமடந்தையர்தமுழங்கொலியும்வழங்கொலியுந்
திருந்துவிழவணிகோடைத்திரைலோக்கியசுந்தரனே.

ப-ரை. சரிந்த துகில்-நழுவின ஆடையையும், தளர்ந்த இடை-தளர்ந்த இடையையும், அவிழ்ந்த குழல் - அவிழ்ந்த கூந்தலையுமுடைய, இளம்தெரிவை - இளம்பெண்ணனவள், இருந்த பரிசு - இருந்த நிலைமையை, ஒருநாள் - ஒருநாளாயினும், கண்டு - பார்த்து, இரங்காய்-இரங்கியருளாய், எம்பெருமானே - எங்கள் பெருமானே, முரிந்த நடை - துள்ளு நடையையுடைய, மடந்தையர்தம் - மாதர்களுடைய, முழங்கு ஒலியும் - முழங்குகின்ற ஓசையும், வழங்கு ஒலியும் - அவர்கள் சஞ்சரிக்கிற ஓசையும், திருந்து - திருத்தமாயிருக்கிற, விழவு அணி - திருவிழாவின் அழகைக்கொண்ட, கோடைத் திரைலோக்கிய சுந்தரனே—, எ-று.

வி-ரை. தளர்ந்தவிடை-துவண்ட இடை யெனினுமாம். (க0)

ஆரணத்தேன்பருகியருந்தமிழ்மாலைகமழவருங்
காரணத்தினிலைபெற்றகருவூரன்றமிழ்மாலை
பூரணத்தாலீரைந்தும்போற்றிசைப்பார்காந்தாரஞ்
சீரணைத்தபொழிற்கோடைத்திரைலோக்கியசுந்தரனே

ப-ரை. ஆரணம் தேன் பருகி - வேதமாகிய தேனையுண்டு, அருந்தமிழ் மாலை கமழ - அருமையாகிய தமிழ்ச் சொல்மாலை பரிமளிக்க, வரும் - தோன்றின, காரணத் தின் - காரணத்தால், நிலை பெற்ற - நிலைபெற்ற, கருவூரன் - கருவூரன், (சொல்லிய) தமிழ் மாலை - தமிழ்மாலையின், ஈரைந்தும் - பத்துப் பாடல்களையும், பூரணத்தால்-பூரணமாக, போற்றி - வணங்கி, காந்தாரம் இசைப்பார் - காந்தாரப்பண்ணேடு பாடுவோர், சீர் அணைத்த பொழில் - சிறப்பையுடையசோலைகள் சூழ்ந்த, கோடைத் திரைலோக்கிய சுந்தரனே—, எ-று.

திருச்சிற்றம்பலம்.

---

## ௬—கங்கைகொண்ட சோளேச்சரம்.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

அன்னமாய்விசும்புபறந்தயன்றேட
 அங்ஙனேபெரியநீசிறிய
வென்னையாள்விரும்பியென்மனம்புகுந்த
 வெளிமையையென்றுநான்மறக்கேன்
முன்னமாலறியாவொருவனாமிருவா
 முக்கணாநாற்பெருந்தடந்தோட்
கன்னலேதேனேயமுதமேகங்கை
 கொண்டசோளேச்சரத்தானே.

ப-உரை. அயன் - பிரமனானவன், அன்னம் ஆய் - அன்னவடிவாகி, விசும்பு - ஆகாயத்தில், பறந்து தேட - பறந்து தேடும்படி, அங்ஙனே - அவ்வாறே, பெரிய நீ-பெரும்பொருளாயிருந்த நீ, சிறிய என்னை - சிறுபொருளாகிய என்னை, ஆள் விரும்பி - ஆளவிரும்பி, என் மனம் புகுந்த - என்மனத்திற் பிரவேசித்த, எளிமையை-எளிய தன்மையை, என்றும் - எக்காலத்தும், நான் மறக்கேன் - நான் மறக்கமாட்டேன்; முன்னம்-முற்காலத்தில், மால் அறியா-விஷ்ணு அறியாத, ஒருவன் ஆம் - ஒருவனாகிய, இருவா - பெருமையுடையோனே, முக்கணா - மூன்றுகண்களை யுடையோனே, பெருதடம்-மிகப்பெரிய, நால் தோள் - நான்கு தோள்களையுடைய, கன்னலே - கரும்பே, தேனே - தேனே, அமுதமே - அமிர்தமே, கங்கைகொண்ட சோளேச்சரத்தானே - கங்கைகொண்ட சோளேச்சரத்தில் எழுந்தருளி யிருப்பவனே, எ-று.

வி-உரை. அயன் அன்னமாய் விசும்புபறந்து தேடினது இறைவன் நெருப்புப் பொருப்பாய் நிமிர்ந்துநின்ற காலத்தில். ஒருவன் - ஒப்பற்றவன் எனினுமாம். இருவா - இரண்டுருவா யிருப்பவனே என்றலுமாம் (பெண்பாகனே). (௧)

உண்ணெகிழ்ந்துடலநெக்குமுக்கண்ணா
 வோலமென்றோலமிட்டொருநாண்
மண்ணினின்றலறேன்வழிமொழிமாலை
 மழலையஞ்சிலம்படிமுடிமேற்

பண்ணிநின் றுருகேன் பணிசெயேனெனினும்
பாவியேனாவியுள் புகுந்தென்
கண்ணினின் றகலானென்கொலோகங்கை
கொண்டசோளேச்சரத்தானே.

ப-ரை. உள் நெகிழ்ந்து - மனம் நெகிழ்ந்து, உடலம் நெக்கு - உடம்பு குழைந்து, முக்கண்ணா - முக்கண்ணனே, ஓலம் என்று - முறையோவென்று, ஓலமிட்டு - முறையிட்டு, ஒருநாள் - ஒருநாளாயினும், மண்ணில் நின்று அலறேன் - பூமியிலிருந்து அலறமாட்டேன்; வழி - முறைப்படி, மொழி மாலை - சொல்மாலையை, மழலை அம் சிலம்பு அடி-மென்மையாகிய அழகிய சிலம்பணிந்த திருவடியை, முடிமேல்பண்ணி-சிரசின்மேல் சூட்டிக்கொண்டு, நின்று - சொல்லி நின்று, உருகேன் - உருகமாட்டேன்; பணி செய்யேன் - திருத்தொண்டு செய்யமாட்டேன்; எனினும் - ஆயினும், பாவியேன் - பாவியாகிய எனது, ஆவியுள் புகுந்து - உயிர்க்குள்ளே நுழைந்து, என் கண்ணில் நின்று அகலான் - என் கண்களினின்றும் நீங்காதிருக்கின்றான்; (அவன் யாவனெனின்) கங்கைகொண்ட சோளேச்சரத்தான் - கங்கைகொண்ட சோளேச்சரத்தை யுடையவன், (அவன் இப்படிச் செய்தற்குக் காரணம்) என்கோலோ - யாதோ (அறியேன்), எ-று.

வி-ரை. மொழிமாலை - அன்பரது சொன்மாலைகளை யணிந்த எனினுமமையும். மழலை - மெல்லிய வோசை. (உ)

அற்புதத்தெய்வமிதனின்மற்றுண்டே
யன்பொடுதன்னையஞ்செழுத்தின்
சொற்பதத்துள்வைத்துள்ளமள்ளூறுந்
தொண்டருக்கெண்டிசைக்கனகம்
பற்பதக்குவையும்பைம்பொன்மாளிகையும்
பவளவாயவர்பணைமுலையுங்
கற்பகப்பொழிலுமுழுதுமாங்கங்கை
கொண்டசோளேச்சரத்தானே.

ப-ரை. அற்புதம் - ஆச்சரியகரமாகிய, தெய்வம் - தெய்வமானது, இதனின்-இந்தத் தெய்வத்தைப் பார்க்கிலும், மற்று உண்டே - வேறு ஒன்றுளதோ, (அது எந்தத் தெய்வமெனில்) கங்கைகொண்ட சோளேச்சரத்தானே - கங்கைகொண்ட சோளேச்சரத்தி லிருப்ப

வனே; (என்னையெனின்) தன்னை - தன்னை, அன்பொடு - அன்போடு, அஞ்செழுத்தின் - அஞ்செழுத்தாகிய, சொற்பதத்துள் வைத்து - சொல்லினிடத்து வைத்து, உள்ளம் அள்ளூறும் - மனம் களிக்கின்ற, தொண்டருக்கு - அடியாருக்கு, எண்திசை - அட்ட திக்கிலும், கனகம் - பொன்னினது, பற்பத குவையும் - பலவாகிய ஒளியுள்ள குவியல்களும், பைம்பொன் மாளிகையும் - பசும்பொன்னாற் செய்யப்பட்ட மாளிகைகளும், பவளவாயவர் - பவளம்போலும் அதரத்தையுடைய மாதரது, பணை முலையும் - பருத்த ஸ்தனங்களும், கற்பகப் பொழிலும் - கற்பகச் சோலையும், (ஆகிய) முழுதும் - எல்லாப் பொருள்களும், ஆம் - உண்டாகும், எ-று.

வி-ரை. அஞ்செழுத்து-ஸ்ரீ பஞ்சாக்ஷரம். இது குருமுகத்தால் விளக்கத்தக்கது. பவளவாய் என்பதில் வாய் அதரத்தைக் குறித்தது.

ஐயபொட்டிட்டவழகுவாணுதலு
மழகியவிழியும்வெண்ணீறுஞ்
சைவம்விட்டிட்டசடைகளுஞ்சடைமேற்
றரங்கமுஞ்சதங்கையுஞ்சிலம்பு
மொய்கொளெண்டிக்குங்கண்டநின்றொண்டர்
முகமலர்ந்திருகணீரரும்பக்
கைகண்மொட்டிக்குமென்கொலோகங்கை
கொண்டசோளேச்சரத்தானே.

ப-ரை. ஐய - அழகையுடைய, பொட்டு இட்ட - பொட்டணிந்த, அழகு வாள் நுதலும் - அழகாகிய வொளிபொருந்திய நெற்றியும், அழகிய விழியும் - அழகாகிய கண்களும், வெண்ணீறும் - திருவெண்ணீறும், சைவம் விட்டிட்ட சடைகளும் - சைவசின்னமாகத் தொங்கவிடப்பட்ட சடைகளும், சடைமேல் தரங்கமும் - சடைமேலணிந்த கங்கையும், சதங்கையும்-சதங்கைகளும், சிலம்பும் - சிலம்புகளும், (ஆகிய இவற்றை) மொய் கொள்-நெருக்கத்தைக்கொண்ட, எண்திக்கும் - எட்டுத்திக்குகளிலும், கண்ட-தரிசித்த, நின் தொண்டர்-உன்னடியாரது, முகம் மலர்ந்து-முகம் விகசித்து, இருகண் நீர் அரும்ப - இரண்டு கண்களிலும் நீர் ததும்ப, கைகள் மொட்டிக்கும்-கைகள் குவியும், (இதற்குக் காரணம்) என்கொலோ - யாதோ, கங்கைகொண்ட சோளேச்சரத்தானே—, எ-று.

வி-ரை. தரங்கம் - அலை, அது சினையாகுபெயராய் அதனையுடையகங்கையை யுணர்த்திற்று. மொட்டித்தல் - கூம்புதல். (௬)

சுருதிவானவனுந் திருநெடுமாலுஞ்
சுந்தரவிசும்பினிந்திரனும்
பரிதிவானவனும்படர்சடைமுக்கட்
பகவனுமகவுயிர்க்கமுதா
யெருதுவாகனனுமெயில்கண்மூன்றெரித்த
வேறுசேவகனுமாம்பின்னுங்
கருதுவார்கருதுமுருவமாங்கங்கை
கொண்டசோளேச்சரத்தானே.

ப-ரை. கங்கை கொண்ட சோளேச்சரத்தானே - கங்கைகொண்ட சோளேச்சரத்தானாகிய ஒருவனே, சுருதிவானவன் ஆம்-பிரமதேவனுவன்; திருநெடுமால் ஆம் - திருநெடுமாலாவன்; சுந்தரவிசும்பின் இந்திரன் ஆம் - அழகிய சுவர்க்கலோகத்திற்கு இறைவனாகிய இந்திரனுவன்; பரிதிவானவன் ஆம் - சூரியதேவன் ஆவன்; படர் சடை - விரிந்த சடையையுடைய, முக்கட்பகவன் ஆம்-மூன்று கண்களையுடைய உருத்திரமூர்த்தியாவன்; அகவுயிர்க்கு அமுது ஆம் - உடம்பினுளிருக்கிற உயிர்களுக்கு அமிர்தமாவன்; எருது வாகனன் ஆம் - இடபவாகனன் ஆவன்; எயில்கள் மூன்று எரித்த-மும்மதில்களையும் நீறுக்கின, ஏறு சேவகனும் ஆம் - மிக்க வீரத்தன்மையுடையவனும் ஆவன்; பின்னும்-மேலும், கருதுவார்-நினைப்பவர்கள், கருதும் - நினைக்கின்ற, உருவம் ஆம் - உருவங்களுமாவன், எ-று.

வி-ரை. சுருதி - வேதம். பிரமன் வேதாதிகாரியாதலால் அவனை 'சுருதிவானவன்' என்றார். எல்லா வுலகங்களிலுஞ் சிறந்த அழகுள்ளது சுவர்க்கலோகமாதலால் அதனை 'சுந்தரவிசும்பு' என்றார். ()

அண்டமோரணுவாம்பெருமைகொண்டணுவோ
ரண்டமாஞ்சிறுமைகொண்டடியே
னுண்டவூணுனக்காம்வகையெனதுள்ள
முள்கலந்தெழுபரஞ்சோதி
கொண்டநாண்பாம்பாம்பெருவரைவில்லிற்
குறுகலர்புரங்கண்மூன்றெரித்த
கண்டனேநீலகண்டனேகங்கை
கொண்டசோளேச்சரத்தானே.

ப-ரை. அண்டம் ஓர் அணுவாம் - அண்டங்களெல்லாம் ஓர் அணுவாதற்குரிய, பெருமை கொண்டு - பெருமையைக்கொண்டும்,

அணு - அணுவானது, ஓர் அண்டம் ஆம்-ஒப்பற்ற உலகங்களாதற்குரிய, சிறுமைகொண்டு - சிறுமையைக்கொண்டும், அடியேன்-அடியேன், உண்ட ஊண் - உண்ட உணவு, உனக்கு ஆம் வகை - உனக்கு உரித்தாகும்படி, எனது உள்ளம் உள் - எனது மனத்தினுள்ளே, கலந்து எழு - கலந்து விளங்குகின்ற, பரஞ்சோதி - பரஞ்சோதியே, பாம்பு ஆம் நாண் கொண்ட-பாம்பாகிய நாண் பூட்டிய, பெருவரை வில்லின் - பெரியமலையாகிய வில்லினால், குறுகலர்-பகைவருடைய, புரங்கள் மூன்று எரித்த - முப்புரங்களை நீறாக்கின, கண்டனே - வீரனே, நீலகண்டனே - நீலகண்டத்தையுடையவனே, கங்கைகொண்ட சோளேச்சரத்தானே—, எ-று.

வி-ரை. பெருமைகொண்ட அணு - பெருமைகொண்டணு எனத் தொகுத்தலாயிற்றெனினுமாம். பரஞ்சோதி-மேலான ஒளி. பெருவரை யென்றது மேருமலையை. (சு)

மோதலைப்பட்டகடல்வயிறுதித்த
முழுமணித்திரளமுதாங்கே
தாய்தலைப்பட்டங்குருகியொன்றாய
தன்மையிலென்னைமுன்னீன்ற
நீதலைப்பட்டாலியானுமவ்வகையே
நிசிசரரிருவரோடொருவர்
காதலிற்பட்டகருணையாய்கங்கை
கொண்டசோளேச்சரத்தானே.

ப-ரை. மோது-எறிகின்ற, அலைபட்ட - அலைகளோடுகூடின, கடல் வயிறு - பாற்கடலின் நடுவில், உதித்த - தோன்றின, முழுமணித்திரள் - முழுமணித்திரள்போன்ற, அமுது - அமிர்தமானது, அங்கே - அவ்விடத்தே, தாய் தலைப்பட்டு - தாயின் றன்மையடைந்து, அங்கு உருகி - அவ்விடத்தே உருகி, ஒன்று ஆய தன்மையில்-ஒருருவாகிய தன்மையைப்போல, என்னை முன் ஈன்ற - என்னை முன்னே யீன்றெடுத்த, நீ தலைப்பட்டால் - நீ வந்து பொருந்தினால், யானும் அவ்வகையே - நானும் அவ்விதமே, நிசிசரர் இருவரோடு ஒருவர் - அவுணராகிய மூவரது, காதலின்பட்ட கருணையாய்-விருப்பம் போலவே அவர்களிடத்துச் செய்த கருணையை யுடையவனே, கங்கைகொண்ட சோளேச்சரத்தானே—, எ-று.

வி-ரை. தலைப்படல் - ஒருசொல். (எ)

தத்தையங்கனையார்தங்கண்மேல்வைத்த
　　தயாவைநூறுயிரங்கூறிட்
டத்திலங்கொருகூறுன்கண்வைத்தவருக்
　　கமருலகளிக்குநின்பெருமை
பித்தனென்றொருகாற்பேசுவரேனும்
　　பிழைத்தவைபொறுத்தருள்செய்யுங்
கைத்தலமடியேன்சென்னிவைத்தகங்கை
　　கொண்டசோளேச்சரத்தானே.

ப-ரை. தத்தை - கிளி மொழியையுடைய, அங்கனையார் தங்கள்மேல் வைத்த - மாதர்மீதுவைத்த, தயாவை-அன்பை, நூறுயிரம் கூறிட்டு - நூறுயிரம் பங்காக்கி, அத்தில் - அதில், அங்கு ஒருகூறு- அவ்விடத் தொருபங்கை, உன்கண் வைத்தவருக்கு - உன்னிடத்து வைத்த அன்பர்களுக்கு, அமர் உலகு அளிக்கும் - தெய்வலோகத்தைக் கொடுக்கின்ற, நின்பெருமை - உன் பெருமையானது, பித்தனென்று ஒருகால் பேசுவரேனும் - சிலர் உன்னைப் பித்தனென்று ஒருதரம் சொன்னாராயினும், பிழைத்தவை - அப்படிப் பிழைசெய்தவற்றை, பொறுத்து அருள் செய்யும் - பொறுத்து அருள் செய்யாநிற்கும், கைத்தலம் - கைத்தலத்தை, அடியேன்சென்னிவைத்த - அடியேன் சிரசின்மீது வைத்த, கங்கைகொண்ட சோளேச்சரத்தானே—, எ-று.

வி-ரை. தத்தை - கிளி, அது இங்கு அதன் மொழிக்காயிற்று. அமராருலகு அமருலகு என விகாரமாயிற்று. எனினும் என்பது ஏனும் என விகாரமாயிற்று. கைத்தலம் சென்னி வைத்தலை ஹஸ்தமஸ்தக ஸம்யோகம் என்பர் வடநூலார். இது உபதேசகாலத்தில் நிகழ்வது. (அ)

பண்ணியதழல்காய்பாலளாநீர்போற்
　　பாவமுன்பறைந்துபாலனைய
புண்ணியம்பின்சென்றறிவினுக்கறியப்
　　புகுந்ததோர்யோகினிற்பொலிந்து
நுண்ணியையெனினுநம்பநின்பெருமை
　　நுன்னிடையொடுங்கநீவந்தென்
கண்ணினுண்மணியிற்கலந்தனைகங்கை
　　கொண்டசோளேச்சரத்தானே.

ப-ரை. பண்ணிய - மூட்டப்பட்ட, தழல் காய் - நெருப்பிற் காய்ச்சின, பால் அளாம் நீர்போல் - பாலோடு சேர்ந்த நீர்போல, பாவம்-பாவமானது, முன்பறைந்து - முன்னேயோட, பால் அனைய புண்ணியம் - பால்போன்ற புண்ணியமானது, பின்சென்று - பின் போய், அறிவினுக்கு அறிய - அறிவுக் கறியும்படி, புகுந்தது-புகுந்தாகிய, ஓர் யோகினில் பொலிந்து - ஒரு யோகம்போல விளங்கி, நுண்ணியை எனினும் - நுண்ணியை யாயினும், நம்ப - நம்பனே, நின்பெருமை-உன்பெருமையானது, நுன்னிடை ஒடுங்க - உன்னிடத்திலே யொடுங்கும்படி, நீ வந்து - நீ யெழுந்தருளி, என் கண்ணினுள் மணியின் - என் கண்ணுள்ளிருக்கிற மணியைப்போல, கலந்தனை-கலந்திருந்தாய், கங்கைகொண்டசோளேச்சரத்தானே—, எ-று.

வி-ரை. அளாம் என்றது அளாவும் என்பதன் விகாரம். பறைந்து-செயவெனெச்சத்திரிபு. நம்பன்-சுகுணபூர்த்தி யுள்ளவன். (க)

அங்கைகொண்டமரர்மலர்மழைபொழிய
வடிச்சிலம்பலம்பவந்தொருநா
ளுங்கைகொண்டடியேன்சென்னிவைத்தென்னை
யுய்யக்கொண்டருளினைமருங்கிற்
கொங்கைகொண்டனுங்குங்கொடியிடைகாணிற்
கொடியளென்றவிர்சடைமுடிமேற்
கங்கைகொண்டிருந்தகடவுளேகங்கை
கொண்டசோளேச்சரத்தானே.

ப-ரை. அமரர் - தேவர், அங்கைகொண்டு - அகங்கையைக் கொண்டு, மலர்மழை பொழிய புஷ்பமாரி சொரிய, அடிசிலம்பு அலம்ப-திருவடிச்சிலம்பு ஒலிக்க, ஒருநாள் வந்து-ஒருநாள் எழுந்தருளி, உம் கைகொண்டு அடியேன் சென்னி வைத்து - உம் கையால் அடியேன் சிரசிற்றொட்டு, என்னை உய்யக்கொண்டு அருளினை-என்னை உய்யக்கொண்டு ஆண்டாய்; மருங்கின் - தன்னிடத்து, கொங்கை கொண்டு-கொங்கையைத் தாங்கி, அனுங்கும் - அசைகின்ற, கொடியிடை-கொடிபோலுமிடையையுடையவளாகிய உமாதேவி, காணில்-கண்டால், கொடியள் என்று-கொடியவளென்று, அவிர் - பிரகாசிக்கிற, சடைமுடிமேல் - சடைமுடியின்மீது, கங்கைகொண்டிருந்த கடவுளே - கங்காதேவியைத் தாங்கியிருந்த கடவுளே, கங்கைகொண்ட சோளேச்சரத்தானே—, எ-று.

வி-ரை. அங்கை - அழகியகை யெனினுமாம். மருங்கில் - பக்கத்திலுள்ள என்றலுமாம். அனுங்குதல் - வருந்துதலுமாம். கொடியிடை-உவமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். (கo)

மங்கையோடிருந்தேயோகுசெய்வானை
வளரிளந்திங்களைமுடிமேற்
கங்கையோடணியுங்கடவுளைக்கங்கை
கொண்டசோளேச்சரத்தானை
யங்கையோடேந்திப்பலிதிரிகருவூ
ரறைந்தசொன்மாலையாலாழிச்
செங்கையோடுலகிலரசுவீற்றிருந்து
திளைப்பதுஞ்சிவனருட்கடலே.

ப-ரை. மங்கையோடு இருந்து-உமாதேவியோடிருந்து, யோகு செய்வானை - யோகாப்பியாசஞ் செய்பவனை, வளர் இளந்திங்களை - வளராநின்ற இளஞ்சந்திரனை, முடிமேல் - சடைமுடியின்மீது, கங்கையோடு அணியும் கடவுளை-கங்கையுடனே தரிக்கும் கடவுளை, கங்கைகொண்ட சோளேச்சரத்தானை—, அங்கை - அகங்கையில், ஓடு ஏந்தி - ஓட்டைத் தாங்கி, பலி திரி - பலிக்குழலாநின்ற, கருவூர் - கருவூரன், அறைந்த - சொல்லிய, சொல்மாலையால் - சொல்மாலையினால், ஆழி - சக்கரந்தாங்கிய, செங்கையோடு - செங்கையுடனே, உலகில் - உலகத்தில், அரசு வீற்றிருந்து - அரசனாய் வீற்றிருந்து, திளைப்பதும் - மூழ்குவதும், சிவன் - சிவபெருமானது, அருட்கடலே - அருட்கடலிலேயே, எ-று.

வி-ரை. ஆழிச்செங்கையோடுலகி லரசுவீற்றிருத்தலாவது-சக்கரவர்த்தியா யுலகையாள்வது. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## எ—திருப்பூவணம்.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

திருவருள்புரிந்தாளாண்டுகொண்டிங்ஙன்
சிறியனுக்கினியதுகாட்டிப்
பெரிதருள்புரிந்தானந்தமேதருநின்
பெருமையிற்பெரியதொன்றுளதே

மருதரசிருங்கோங்ககின்மரஞ்சாடி
வரைவளங்கவர்ந்திழிவைகைப்
பொருதிரைமருங்கோங்காவணவீதிப்
பூவணங்கோயில்கொண்டாயே.

ப-ரை. திருவருள் புரிந்து - திருவருள் செய்து, ஆள் ஆண்டு கொண்டு - ஆளாக ஆண்டுகொண்டு, இங்ஙன் - இவ்வாறு, சிறியனுக்கு - சிறியேனுக்கு, இனியது காட்டி - இனிதாகிய பொருளைக்காட்டி, பெரிது அருள் புரிந்து - மிகுதியாக அருள்செய்து, ஆனந்தமே தரும்-இன்பத்தையே தருகின்ற, நின் பெருமையின்-உன்பெருமையைப் பார்க்கிலும், பெரியது ஒன்று - பெரிதாகிய ஒருபொருள், உளதே - உண்டோ; மருது - மருதமரம், அரசு - அரசமரம், இருகோங்கு-பெரியகோங்கமரம், அகில்மரம்-அகில்மரம், சாடி-இவற்றையெறிந்துகொண்டும், வரை வளம் கவர்ந்து-மலைவளங்களைக் கவர்ந்துகொண்டும், இழி-இறங்குகின்ற, வைகை-வையையாற்றின், பொருதிரை-கரைமேல் மோதுகின்ற அலைகள், மருங்கு ஓங்கு - இருபுறத்திலும் உயர்ந்து தோன்றுகின்ற, ஆவண வீதி-கடைவீதிகளையுடைய, பூவணம் கோயில் கொண்டாயே - திருப்பூவணத்தைக் கோயிலாகக் கொண்டவனே, எ-று.

வி-ரை. உளதே யென்பதில் ஏகாரம் வினாவோடெதிர்மறை. மலைவளம் - மலையிலுண்டாகிய வளமான மணிகள் மரங்கள் முதலாயின. (க)

பாம்பணைத்துயின்றோனயன்முதற்றேவர்
பன்னெடுங்காலநிற்காண்பா
னேம்பலித்திருக்கவென்னுளம்புகுந்த
வெளிமையையென்றுநான்மறக்கேன்
றேம்புனற்பொய்கைவாளைவாய்மடுப்பத்
தெளிதருதேறல்பாய்ந்தொழுகும்
பூம்பணைச்சோலையாவணவீதிப்
பூவணங்கோயில்கொண்டாயே.

ப-ரை. பாம்பு அணை துயின்றோன் - சர்ப்பசயனத்தில் உறங்குவோனாகிய திருமால், அயன் - பிரமன், முதல்-முதலாகிய, தேவர்-தேவர்கள், பல்நெடுகாலம்-பலவாகிய நெடுங்காலம், நின் காண்பான்-நின்னைக் காணும்பொருட்டு, ஏம்பலித்து இருக்க - அங்கலாய்த்துக்

கொண்டு இருக்க, என் உள்ளம் புகுந்த-என்மனத்திற் பிரவேசித்த, எளிமையை - எளிதானதன்மையை, என்றும் - எக்காலத்தும், நான் மறக்கேன்-நான் மறக்கமாட்டேன்; தேம்-தேனுனது, புனல் பொய்கை - நீரையுடைய பொய்கைகளிலுள்ள, வாளை வாய்மடுப்ப - வாளை மீன்களின் வாயில்விழ, தெளிதரு தேறல் - தெளிந்த தேனுனது, பாய்ந்து ஒழுகும்-பாய்ந்து ஒழுகாநின்ற, பூ பணை - அழகிய வயல்களோடு, சோலை - சோலைகள் சூழ்ந்த, ஆவண வீதி - கடைவீதிகளையுடைய, பூவணம் கோயில் கொண்டாயே—, எ-று.

வி-ரை. பாம்பு இங்கு ஆதிசேடனைக் குறித்தது. (உ)

கரைகடலொலியிற்றமருகத்தரையிற்
கையினிற்கட்டியகயிற்று
லிருதலையொருநாவியங்கவந்தொருநா
ளிருந்திடாயெங்கள்கண்முகப்பே
விரிதிகழ்விழவின்பின்செல்வோர்பாடல்
வேட்கையின்வீழ்ந்தபோதவிழ்ந்த
புரிசடைதுகுக்குமாவணவீதிப்
பூவணங்கோயில்கொண்டாயே.

ப-ரை. கரை கடல் ஒலியின் - கரையையுடைய கடலொலி போன்ற ஒலியினையுடைய, தமருகத்து அரையில் - தமருகத்தினிடையிலும், கையினில் - கையிலும், கட்டிய கயிற்றால் - கட்டின கயிற்றினல், இருதலை ஒருநா இயங்க-இருபக்கத்திலும் ஒருநாவே சென்றுபடும்படி, ஒருநாள் வந்து - ஒருநாள்வந்து, எங்கள் கண்முகப்பே - எங்கள் கண்ணுக்கெதிரே, இருந்திடாய்-இருந்தருள்வாயாக; விரிதிகழ் - பரந்துவிளங்குகின்ற, விழவின் பின் செல்வோர் - திருவிழாவின் பின்போவார், பாடல் வேட்கையின் வீழ்ந்தபோது - பாடல் விருப்பத்தால் விரைந்து சென்றபோது, அவிழ்ந்த-அவிழ்ந்து தொங்கின, புரிசடை - கட்டப்பட்ட சடையினை, துகுக்கும் - கட்டுகின்ற, ஆவணவீதி - கடைவீதிகளையுடைய, பூவணம் கோயில்கொண்டாயே—, எ-று.

வி-ரை. கரைகடல் ஒலியின் - ஒலிக்கின்ற கடலொலிபோல எனினுமாம். கரைதல் - ஒலித்தல். (ந)

கண்ணியன்மணியின்சூழல்புக்கங்கே
கலந்துபுக்கொடுங்கினேற்கங்கு

ணுண்ணியையெனினுநம்பநின்பெருமை
நுண்ணிமையிறந்தமையறிவன்
மண்ணியன்மரபிற்றங்கிருண்மொழுப்பின்
வண்டினம்பாடநின்றாடும்
புண்ணியமகளிராவணவீதிப்
பூவணங்கோயில்கொண்டாயே.

ப-ரை. கண் இயல் - கண்ணிற் பொருந்திய, மணியின் சூழல் புக்கு - மணியினுள்ளிடத்துப் புகுந்து, அங்கே கலந்து புக்கு-அங்கே கலந்து புகுந்து, ஒடுங்கினேற்கு - ஒடுங்கின எனக்கு, அங்ஙன் - அவ்வாறு, நுண்ணியை எனினும் - நுண்ணியையாயினும், நம்ப - நம்பனே, நின்பெருமை நுண்ணிமை-நின்பெருமையும் நுண்ணிமையும், இறந்தமை - அளவுகடந்தமையை, அறிவன் - அறிவேன்; மண் இயல் மரபின்-மண்ணுலகத்தின் முறைமையோடு, தங்கு - தங்கிய, இருள் மொழுப்பின் - இருண்ட சோலைகளில், வண்டு இனம் பாட- வண்டின் கூட்டங்கள் பாட, நின்று ஆடும்-நின்று நடனஞ்செய்கிற, புண்ணிய மகளிர் - தேவமாதர்களுள்ள, ஆவணவீதி - கடைவீதிகளையுடைய, பூவணம் கோயில்கொண்டாயே—, எ-று.

வி-ரை. இயலல் - பொருந்துதல். இறத்தல் - கடத்தல். (ச)

கடுவினைப்பாசக்கடல்கடந்தைவர்
கள்ளரைமெள்ளவேதுரந்து
னடியிணையிரண்டுமடையுமாறடைந்தே
னருள்செய்வாயருள்செயாதொழிவாய்
நெடுநிலைமாடத்திரவிருள்கிழிக்க
நிலைவிளக்கலகில்சாலேகம்
புடைகிடந்திலங்குமாவணவீதிப்
பூவணங்கோயில்கொண்டாயே.

ப-ரை. கடுவினை பாசம் - கடியவினைகளாகிய பாசத்தையுடைய, கடல் கடந்து - கடலைத்தாண்டி, ஐவர் கள்ளரை - கள்ளராகிய ஐவரை, மெள்ளவே துரந்து-மெல்லவே துரத்தி, உன் - உனது, இணை - ஒன்றுக்கொன்று சமானமான, அடி இரண்டும் - திருவடியிரண்டையும், அடையுமாறு - அடையவேண்டிய முறைமைப்படி, அடைந்தேன் - அடைந்தேன், அருள்செய்வாய்-அருள்செய்வாயாக, அருள்செய்யாது ஒழிவாய் - அருள்செய்யாது ஒழிவாயாக, நெடுநிலை

மாடத்து - நெடியநிலைகளையுடைய மாடங்களில், இரவு இருள் கிழிக்க - இராவிருளை யழிக்கும்படி, நிலைவிளக்கு - நிலைத்தீபங்கள், அலகில் - அளவில்லனவாகிய, சாலேகம் புடைகிடந்து இலங்கும் - பல்கணியின் புறத்தேகிடந்து விளங்குகின்ற, ஆவணவீதி - கடைவீதிகளையுடைய, பூவணம் கோயில்கொண்டாயே—, எ-று.

வி-ரை. கடல் - பிறவிக்கடல். ஐவர் கள்ளர் - ஐந்துதிருடர் (ஐம்பொறிகள்). நெடுநிலையென்பதில் நிலைஅடுக்கு. பல்கணி-சாளரம் (சன்னல்). (௫)

செம்மனக்கிழவோரன்புதாவென்றுன்
சேவடிபார்த்திருந்தலச
வெம்மனங்குடிகொண்டிருப்பதற்கியாஞ
ரென்னுடையடிமைதானியாதே
யம்மனங்குளிர்நாட்பலிக்கெழுந்தருள
வரிவையரவிழ்குழற்சுரும்பு
பொம்மெனமுரலுமாவணவீதிப்
பூவணங்கோயில்கொண்டாயே.

ப-ரை. செம்மனக் கிழவோர்-செவ்விய மனத்தையுடைய பெரியோர், அன்பு தா என்று-எம்மீது அன்பு செய்வாயென்று, உன் சேவடி பார்த்திருந்து - உன் திருவடியை நோக்கியிருந்து, அலச - வருந்தாநிற்க, எம் மனம் - எம்முடைய மனத்தில், குடிகொண் டிருப்பதற்கு - குடிகொண் டிருத்தலுக்கு, யான் ஆர்-நானார், என்னுடைய அடிமைதான் யாது - என்னுடைய அடிமைத் திறந்தான் யாது, அம் மனம் குளிர்நாள்-அழகிய மனம் குளிரும்படியான நாளில், பலிக்கு எழுந்தருள-நீ பலிக்கு எழுந்தருளாநிற்க, அரிவையர்-(கண்ட) மாதரது, அவிழ் - அவிழ்ந்த, குழல் - கூந்தலில் மொய்த்த, சுரும்பு-வண்டுகள், பொம்மென முரலும் - பொம்மென்று ஒலிக்கும், ஆவண வீதி-கடைவீதிகளையுடைய,பூவணம்கோயில்கொண்டாயே—,எ-று.

வி-ரை. செம்மனக் கிழவோர் - விடயாதிகளிற் செல்லாது இறைவனிடத்தே பதிந்திருக்கிற மனத்தை யுடையவர். அலசல்-வருந்தல். பொம்மெனல் - அநுகரணவோசை. (௬)

சொன்னவின்முறைநான்காரணமுணராச்
சூழல்புக்கொளித்தநீயின்று

கன்னவின் மனத்தென் கண்வலைப்படுமிக்
கருணையிற்பெரியதொன் றுளதே
மின்னவில்கனகமாளிகைவாய்தல்
விளங்கிளம்பிறைதவழ்மாடம்
பொன்னவில்புரிசையாவணவீதிப்
பூவணங்கோயில்கொண்டாயே.

ப-ரை. சொல் நவில் முறை - சொற்கள் உச்சரித்தற் குரிய முறையோடு கூடிய, நான்கு ஆரணம் உணரா - நான்கு வேதங்களாலும் அறியப்படாத, சூழல் புக்கு ஒளித்த நீ - இடத்தில் புகுந்து மறைந்த நீ, இன்று - இன்றைக்கு, கல் நவில் மனத்து - கல்லை நிகர்த்த மனத்தினையுடைய, என் கண் வலைப்படும் - என் கண்வலையில் அகப்பட்ட, கருணையின் - இந்தக் கருணையைப் பார்க்கிலும், பெரியது ஒன்று உளதே - பெரிதாகிய பொருள் ஒன்று உளதோ, மின் நவில் - மின்னுதலைச் செய்கின்ற, கனகம் - பொன்னினாற் செய்யப்பட்ட, மாளிகை வாய்தல்-மாளிகையின் முற்றத்தில், விளங்கு - பிரகாசிக்கின்ற, இளம்பிறை தவழ்-இளம்பிறை தவழ்கின்ற, மாடம்-மாடங்களும், பொன் நவில் புரிசை - பொன்னினாற் செய்யப்பட்ட மதில்களுமுள்ள, ஆவண வீதி - கடைவீதிகளையுடைய, பூவணம் கோயில் கொண்டாயே—, எ-று.

வி-ரை. சொன்னவின்முறை - எடுத்தல், படுத்தல், நலிதல், உழப்பு என்னும் ஓசையின் கிரமம். இவற்றை உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம், ப்ரசயம் என்பர் வடநூலார். (எ, அ, கூ)

பூவணங்கோயில்கொண்டெனையாண்ட
புனிதனைவனிதைபாகனைவெண்
கோவணங்கொண்டுவெண்டலையேந்துங்
குழகனையழகெலாநிறைந்த
தீவணன்றன்னைச்செழுமறைதெரியுந்
திகழ்கருவூரனேனுரைத்த
பாவணத்தமிழ்கள்பத்தும்வல்லார்கள்
பரமனதுருவமாகுவரே.

ப-ரை. பூவணம் கோயில் கொண்டு - திருப்பூவணத்தைக் கோயிலாகக் கொண்டு, என்னை ஆண்ட - என்னை ஆண்டருளின, புனிதனை-பரிசுத்தனை, வனிதை பாகனை - மங்கைபாகனை, வெண்

கோவணம் கொண்டு - வெண்கோவண முடுத்து, வெள் தலை எந்தும் - வெள்ளிய தலையோட்டை யேந்துகின்ற, குழகனை - கட்டிளமையோனை, அழகு எல்லாம் நிறைந்த - அழகு முழுதும் நிறைந்த, தீ வண்ணன் தன்னை - தீ நிறத்தை யுடையவனை, செழுமறை தெரியும் - செழுமையாகிய வேதங்களை யுணர்ந்த, திகழ் - விளங்குகின்ற, கருவூரனேன் - கருவூரனாகிய நான், உரைத்த - சொல்லிய, வண்ணம் - அழகாகிய, தமிழ்ப்பாக்கள் பத்தும் - தமிழ்ப்பாடல் பத்தினையும், வல்லார்கள் - கற்றுவல்லவர்கள், பரமனது உருவம் ஆகுவர் - சிவபெருமானது வடிவம் உடையவராவர், எ-று.

வி - ரை. வனிதை - உமாதேவி. பரமனதுருவமாதல் - சிவசாரூபம் பெறுதல். (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## அ - திருச்சாட்டியக்குடி.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பெரியவாகருணையிளநிலாவெறிக்கும்
　　பிறைதவழ்சடைமொழுப்பவிழ்ந்து
சரியுமாசுழியங்குழைமிளிர்ந்திருபாற்
　　றாழ்ந்தவாகாதுகள்கண்டங்
கரியவாதாமுஞ்செய்யவாய்முறுவல்
　　காட்டுமாசாட்டியக்குடியா
ரிருகைகூம்பினகண்டலர்ந்தவாமுகமே
　　ழிருக்கையிலிருந்தவீசனுக்கே.

ப-ரை. எழிருக்கையில் இருந்த ஈசனுக்கு - எழிருக்கையில் எழுந்தருளியிருக்கிற, சிவபெருமானுக்கு, கருணை - கருணையானது, பெரியவா - பெரிதாகி யிருந்தவாறும், இளநிலா எறிக்கும் - இளநிலா வீசுகின்ற, பிறை தவழ்-பிறை தவழாநின்ற, சடைமொழுப்பு-சடைமுடியானது, அவிழ்ந்து சரியுமா - அவிழ்ந்து சரியுமாறும், சுழியம் - வட்டமாகிய, குழை-குண்டலங்கள், மிளிர்ந்து - பிரகாசித்து, இருபால் காதுகள் தாழ்ந்தவா-இருபக்கத்திலும் காதுகளில் தொங்குமாறும், கண்டம் கரியவா - கண்டம் கருமையா யிருந்தவாறும்,

செய்ய வாய் முறுவல் தாமும் காட்டுமோ - சிவந்த திருவாயானது புன்சிரிப்புக்களைக் காட்டுமோறும், சாட்டியக் குடியார்-திருச்சாட்டியக்குடியையுடையவர், இருகை கூம்பின கண்டு - என் இரண்டு கைகள் குவிந்தவற்றை நோக்கி, முகம் அலர்ந்தவா-முகமலர்ந்தவாறும் (என்னவியப்பு), எ-று.

வி-ரை. பெரியவாறு என்பது பெரியவா என ஈறு தொகுத்தலாயிற்று. சரியுமா முதலியவையு மிவ்வாறே. (க)

பாந்தள்பூணாரம்பரிகலங்கபாலம்
பட்டவர்த்தனமெருதன்பர்
வார்ந்தகண்ணருவிமஞ்சனசாலை
மலைமகண்மகிழ்பெருந்தேவி
சாந்தமுந்திருநீறருமறைகீதஞ்
சடைமுடிசாட்டியக்குடியா
ரேந்தெழிலிதயங்கோயின்மாளிகையே
ழிருக்கையுளிருந்தவீசனுக்கே.

ப-ரை. எழிருக்கையில் இருந்த ஈசனுக்கு - எழிருக்கையிலெழுந்தருளியிருக்கிற சிவபெருமானுக்கு, பாந்தள் - பாம்பு, பூணாரம் - ஆபரணமாகும்; பரிகலம் - பாத்திரம், கபாலம் - தலையோடாகும்; பட்டவர்த்தனம் - பட்டவர்த்தனம், எருது-இடபமாகும்; அன்பர் - அன்பரது, வார்ந்த கண் அருவி-ஒழுகின கண்ணருவி,மஞ்சனசாலை-திருமஞ்சனசாலையாகும்; மலைமகள் - மலையரையன் மகளாகிய உமாதேவி, பெருந்தேவி-பெருமைபொருந்திய தேவியாகும்; சாந்தமும் - பூச்சும், திருநீறு - திருநீறாகும்; அருமறை-அருமையாகிய வேதம், கீதம் - கீதமாகும்; சடை - சடை, முடி - மகுடமாகும்; சாட்டியக்குடியார் - சாட்டியக்குடியாரது, ஏந்து எழில் இதயம் - அழகுபொருந்திய இருதயம், கோயில் மாளிகை - கோயிலும் திருமாளிகையுமாகும், எ-று.

வி-ரை. பாந்தள்-பாம்புகள். இவை தாருகவனத்திருடியர் செய்த அபிசாரயாகத்தில் தோன்றினவை. பரிகலம் - பிக்ஷாபாத்ரம். பட்டவர்த்தநம் - பட்டவர்த்தந யானை. இதயம் - அன்பரது இருதயம். (உ)

தொழுதுபின்செல்வதயன்முதற்கூட்டந்
தொடர்வனமறைகணான்கெனினுங்

கழுதுறுகரிகாடுறைவிடம்போர்வை
கவந்திகைகரியுரிதிரிந்தூண்
டழலுமிழரவங்கோவணம்பளிங்கு
சபவடஞ்சாட்டியக்குடியா
ரிழுதுநெய்சொரிந்தோம்பழலொளி
விளக்கேழிருக்கையிலிருந்தவீசனுக்கே.

ப-ரை. ஏழிருக்கையில் இருந்த ஈசனுக்கு—, தொழுது பின் செல்வது - வணங்கிப் பின்செல்வது, அயன்முதல் கூட்டம் - பிரமன்முதலிய தேவர் கூட்டமாகும்; தொடர்வன - தொடர்ந்து போவன, மறைகள் நான்கு - நான்கு வேதங்களாகும்; எனினும் - ஆயினும், கழுது உறு கரிகாடு - பேய்கள் சஞ்சரிக்கிற சுடுகாடு, உறைவிடம் - தங்குமிடமாகும்; போர்வை கவந்திகை-போர்வையும் உணவும், கரியுரி திரிந்தூண் - (முறையே) யானைத்தோலும் திரிந்தேற்கும் பிட்சைச்சோறுமாகும்; தழல் உமிழ் அரவம் - விஷாக்கினியைக் கக்குகின்ற பாம்பு, கோவணம்-கோவணமாகும்; பளிங்கு - படிகம், சபவடம் - ஜெபமாலையாகும்; சாட்டியக்குடியார் - சாட்டியக்குடியிலிருப்பவர், இழுது நெய் சொரிந்து ஓம்பு அழல்-நெகிழ்வாகிய நெய்யைச் சொரிந்து வளர்க்கின்ற யாகாக்கினி, ஒளிவிளக்கு - ஒளியையுடைய தீபமாகும், எ-று.

வி-ரை. கரிகாடு - சுடுகாடு; மயானம் என்பது இடுகாடு சுடுகாடு என்னும் இரண்டுக்கும் பொது. (ரு)

பதிகநான்மறைதும்புருவுநாரதரும்
பரிவொடுபாடுகாந்தர்ப்பர்
கதியெலாமரங்கம்பிணையன்மூவுலகிற்
கடியிருட்டிருநடம்புரியுஞ்
சதியிலார்கதியிலொலிசெயுங்கையிற்
றமருகஞ்சாட்டியக்குடியா
ரிதயமாங்கமலங்கமலவர்த்தனையே
ழிருக்கையிலிருந்தவீசனுக்கே.

ப-ரை. ஏழிருக்கையில் இருந்த ஈசனுக்கு—, பதிகம்-பதிகம், நான்மறை - நான்கு வேதங்களாகும்; தும்புருவும் நாரதரும் - தும்புருவும் நாரதரும், பரிவொடு பாடு காந்தர்ப்பர் - அன்போடு பாடு

கின்ற கந்தருவராகும்; கதி எலாம் - சென்றடையு மிடமெல்லாம், அரங்கம் - உறைவிடமாகும்; பிணையல் - மாலையாகிய, மூவுலகில் - மூன்றுலகத்திலும், இருள் கடி - இருளை நீக்குகின்ற, திருநடம் புரியும் சதியில் - திருநடனஞ்செய்கிற சதியிலும், ஆர் கதியில் - அதனோடு பொருந்தின கதியிலும், ஒலிசெயும்-ஒலிக்கின்ற, கையில் தமருகம் - கையிலுள்ள தமருகமாகும்; சாட்டியக் குடியார் - சாட்டியக்குடியிலுள்ளாரது, இதயமாம் கமலம் - இருதயமாகிய தாமரைமலர், கமலவர்த்தனை - கமலவர்த்தனையாகும், எ - று.

வி-ரை. மாலை - வரிசை. மூவுலகு - ஸ்வர்க்கம், மத்யம், பாதாளம். தமருகம் - உடுக்கை (துடி). (ச)

திருமகன்முருகன்றேவியே லுமையா
டிருமகண்மருமகன்றாயா
மருமகன்மதனன்மாமனேலிமவான்
மலையுடையரையர்தம்பாவை
தருமலிவளனுஞ்சிவபுரன்றோழன்
றனபதிசாட்டியக்குடியா
ரிருமுழங்கழன்மூன்றேழுகைத்தலமே
ழிருக்கையிலிருந்தவீசனுக்கே.

ப-ரை. எழிருக்கையில் இருந்த ஈசனுக்கு—, திருமகன்-திருமகனானவன், முருகன் - முருகனவன்; தேவியேல் - தேவியோவென்றால், உமையாள் - உமையவளாவள்; திருமகள்-திருமகளானவள், தாயாம் - தாயாகப்பெற்ற, மருமகன் - பொருந்திய புதல்வனாகிய, மதனன் - மன்மதன், மருமகன் - மருமகனவன்; மாமனேல் - மாமனோவென்றால், இமவான் - மலையரையன்; மலையுடையரையர் தம்பாவை - உமாதேவியானவள், தரும்-தந்த, மலி - மிகுந்த, வளம் ஆம் - வளங்கள் பொருந்திய, சிவபுரன் தோழன் - சிவபுரனுக்குத் தோழன், தனபதி-குபேரனவன்; சாட்டியக்குடியார்-சாட்டியக்குடியிலுள்ளார், இருமுழங்கு அழல் மூன்று - பெரிய ஒலிக்கின்ற த்ரேதாக்கினியானது, எழுகைத்தலம் - எழுகைத்தலங்களாகும், எ-று.

வி-ரை. சிவபுரன் - சிவபுரத்தையுடையவன் (சிவபெருமான்).

அனலமேபுனலேயனிலமேபுவனி
யம்பராவம்பரத்தளிக்குந்

கனகமேவெள்ளிக்குன்றமேயென்றன்
களைகணேகளைகண்மற்றில்லாத்
தனியனேனுள்ளங்கோயில்கொண்டருளுஞ்
சைவனேசாட்டியக்குடியார்க்
கினியதீங்கனியாயொழிவறநிறைந்தே
ழிருக்கையிலிருந்தவாறியம்பே.

ப-ரை. அனலமே - நெருப்பே, புனலே - நீரே, அனிலமே - காற்றே, புவனி அம்பரா - மண்ணும் விண்ணுமா யிருப்பவனே, அம்பரத்து - ஆகாயத்தினின்று, அளிக்கும் - காக்கின்ற, கனகமே - சுவர்னமே, வெள்ளிக்குன்றமே - வெள்ளிமலையே, என்றன் களைகணே-எனது ஆதரவே, களைகண் மற்று இல்லா - ஆதரவு வேறில்லாத, தனியனேன் உள்ளம்-தனியேனது மனத்தை, கோயில்கொண்டருளும்-கோயிலாகக்கொண்டருளுகின்ற, சைவனே - சிவபிரானே, சாட்டியக்குடியார்க்கு - சாட்டியக்குடியிலுள்ளார்க்கு, இனிய தீங்கனியாய் - மிகவு மினிதாகிய கனியாகி, ஒழிவு அற நிறைந்து - நீக்கமில்லாமல் நிறைந்து, ஏழிருக்கையில் - ஏழிருக்கையிலே, இருந்தவாறு - நீயிருந்த விதத்தை, இயம்பு - சொல்வாயாக, எ-று.

வி-ரை. அம்பரம் - சிதாகாயம். அளித்தல் - ஆன்மாக்களைக் காத்தல். இறைவன் திருமேனி பொன்னிறமாதலால் 'கனகமே' என்றும், அத்திருமேனி முழுநீறு பூசப்பட்டு வெளிதாய்த் தோன்றலால் 'வெள்ளிக்குன்றமே' என்றும் கூறினர். (கு)

செம்பொனேபவளக்குன்றமேநின்ற
திசைமுகன்மால்முதற்கூட்டத்
தன்பரானவர்கள்பருகுமாரமுதே
யத்தனேபித்தனேனுடைய
சம்புவேயணுவேதாணுவேசிவனே
சங்கராசாட்டியக்குடியார்க்
கின்பனேயெங்குமொழிவறநிறைந்தே
ழிருக்கையிலிருந்தவாறியம்பே.

ப-ரை. செம்பொன்னே - செம்பொன்னே, பவளக்குன்றமே - பவளமலையே, நின்ற - நிலைபெற்றிருந்த, திசைமுகன் - பிரமன், மால் - திருமால், முதல் - முதலான, கூட்டத்து - கூட்டமாகிய,

அன்பர் ஆனவர்கள் - அன்பரானவர், பருகும் - சுவைக்கின்ற, ஆர் அமுதே - அரிதாகிய அமிர்தமே, அத்தனே - ஐயனே, பித்தனே னுடைய - பித்தனுகிய என்னுடைய, சம்புவே - சம்புவே, அணு வே - அணுருபமாயிருப்பவனே, தாணுவே - தாணுவாயிருப்பவனே, சிவனே - சிவபிரானே, சங்கரா - சங்கரனே, சாட்டியக்குடியார்க்கு- சாட்டியக்குடியினுள்ளார்க்கு, இன்பனே - சுகருபமாயிருப்பவனே, எங்கும்-எவ்விடத்தும், ஒழிவு அற நிறைந்து-நீக்கமில்லாமல் நிறை ந்து, எழிருக்கையில் - எழிருக்கையிலே, இருந்தவாறு - இருந்த விதத்தை, இயம்பு - சொல்வாயாக, எ-று.

வி-ரை. செம்பொன்னும் பவளக்குன்றமும் இறைவனது திரு மேனியை நிகர்ப்பனவாதலால், 'செம்பொனே பவளக் குன்றமே' என்றூர். குன்றம் என்பதைச் செம்பொன்னேடு கூட்டிச் செம்பொற் குன்றமே யென்றலுமொன்று. (எ)

செங்கணுபோற்றிதிசைமுகாபோற்றி
சிவபுரநகருள்வீற்றிருந்த
வங்கணுபோற்றியமரனேபோற்றி
யமரர்கடலைவனேபோற்றி
தங்கணுன்மறைநூல்சகலமுங்கற்றேரர்
சாட்டியக்குடியிருந்தருளு
மெங்கணுயகனேபோற்றியேழிருக்கை
யிறைவனேபோற்றியேபோற்றி.

ப-ரை. செங்கணு = செங்கண்ணனே, போற்றி - நமஸ்காரம்; திசைமுகா=திசைமுகனே, போற்றி - நமஸ்காரம்; சிவபுர நகருள் வீற்றிருந்த - சிவபுரமாகிய நகரத்தில் வீற்றிருந்த, அங்கணு - அங் கணனே, போற்றி - நமஸ்காரம்; அமரனே - தேவனே, போற்றி - நமஸ்காரம்; அமரர்கள் தலைவனே - தேவர்களுக்குத் தலைவனே, போற்றி - நமஸ்காரம்; தங்கள் - தமக்குரிய, நான்மறை - நான்கு வேதங்கள், நூல் - சாத்திரங்கள் (ஆகிய), சகலமும் கற்றேரர் - எல் லாவற்றையும் கற்றவர் வாழ்கின்ற, சாட்டியக்குடி - சாட்டியக்குடி யிலே, இருந்தருளும் - இருந்தருளின, எங்கள் நாயகனே - எமது தலைவனே, போற்றி - நமஸ்காரம்; எழிருக்கை இறைவனே - எழி ருக்கைக்குத் தலைவனே, போற்றி போற்றி-நமஸ்காரம் நமஸ்காரம், எ-று.

வி-ரை. செங்கண் என்றது நெருப்புக் கண்ணனே யென்றபடி. திசைமுகன் - திக்கினிடங்க ளெல்லாம் நிறைந்திருப்பவன். அங்கணன் - கிருபைக்கண்ணன். (அ)

சித்தனேயருளாய்செங்கணவருளாய்
சிவபுரநகருள்வீற்றிருந்த
வத்தனேயருளாயமரனேயருளா
யமரர்களதிபனேயருளாய்
தத்துநீர்ப்படுகர்த்தண்டலைச்சூழற்
சாட்டியக்குடியுளேழிருக்கை
முத்தனேயருளாய்முதல்வனேயருளாய்
முன்னவாதுயர்கெடுத்தெனக்கே.

ப-ரை. முன்னவா - முன்னவனே, எனக்கு துயர் கெடுத்து - எனது துன்பத்தை யொழித்து, சித்தனே - சித்தனே, அருளாய் - அருளுவாயாக; செங்கண - செங்கணனே, அருளாய் - அருளுவாயாக; சிவபுர நகருள் வீற்றிருந்த - சிவபுரமாகிய நகரத்தில் வீற்றிருந்த, அத்தனே - அப்பனே, அருளாய் - அருளுவாயாக; அமரனே - தேவனே, அருளாய் - அருளுவாயாக, அமரர்கள் அதிபனே-தேவர்களுக்குத் தலைவனே, அருளாய் - அருளுவாயாக; தத்து - தாவுகின்ற, நீர் படுகர்-நீரையுடைய வயல்களும், தண்டலை சூழல்-சோலைச் சூழல்களுமுள்ள, சாட்டியக்குடியுள் - சாட்டியக்குடியுள்ளே, எழிருக்கை - எழிருக்கையில் வீற்றிருக்கிற, முத்தனே - முக்தனே, அருளாய் - அருளுவாயாக; முதல்வனே - முதற்பொருளா யிருப்பவனே, அருளாய் - அருளுவாயாக, எ-று.

வி-ரை. முன்னவன் - முதல்வன். சூழல் - இடம். (கூ)

தாட்டரும்பழனப்பைம்பொழிற்படுகர்த்
தண்டலைச்சாட்டியக்குடியா
ரீட்டியபொருளாயிருக்குமேழிருக்கை
யிருந்தவன்றிருவடிமலர்மேற்
காட்டியபொருட்கலைபயில்கருவூரன்
கழறுசொன்மாலையீரைந்து
மாட்டியசிந்தைமைந்தருக்கன்றே
வளரொளிவிளங்குவானுலகே,

ப-ரை. தாள்தரும் பழனம் - உழவுத்தொழில் செய்யப்பெற்ற வயல்களையும், பைம்பொழில் படுகர் - பசிய சோலைகளோடு குளங்களையும், தண் தலை - குளிர்ந்த இடங்களையும் உடைய, சாட்டியக்குடியார் - சாட்டியக்குடியிலுள்ளார், ஈட்டிய பொருளாயிருக்கும் - சம்பாதித்த திரவியமா யிருக்கிற, எழிருக்கை இருந்தவன் - எழிருக்கையி லிருந்தவனது, திருவடி மலர்மேல் - திருவடித் தாமரை மலர்மீது, காட்டிய பொருட்கலை பயில்—, கருவூரன் கழறு - கருவூரன் சொன்ன, சொல் மாலை ஈரைந்தும்-சொல்மாலையாகிய பத்துப் பாடல்களையும், மாட்டிய சிந்தை - பதித்த மனத்தையுடைய, மைந்தருக்கு அன்றே - புருடருக்கல்லவா, வளர் ஒளி விளங்கு வானுலகு - வளராநின்ற ஒளி விளங்குகிற விண்ணுலக வின்பம் கிடைப்பது, எ-று.

வி-ரை. தாள் - முயற்சி; அது உழவுத் தொழிலைக் குறித்தது. எழிருக்கையிருந்தவன் - சிவபிரான். (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## கூ. தஞ்சையிராசராசேச்சரம்.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

உலகெலாந்தொழவந்தெழுகதிர்ப்பரிதி
 யொன்றுநூறாயிரகோடி
யலகெலாம்பொதிந்ததிருவுடம்பச்சோ
 வங்ஙனேயழகிதோவரணம்
பலகுலாம்படைசெய்நெடுநிலைமாடம்
 பருவரைஞாங்கர்வெண்டிங்க
ளிலைகுலாம்பதணத்திஞ்சிசூழ்தஞ்சை
 யிராசராசேச்சரத்திவர்க்கே.

ப-ரை. உலகு எல்லாம் - உலகமுழுதும், தொழ - வணங்க, வந்து எழு-வந்து உதிக்கிற, கதிர் - கிரணங்களையுடைய, பரிதி - சூரியர், ஒன்று - பொருந்திய, அலகு எல்லாம் - அளவு முழுதும், பொதிந்த - அமைந்த, திருவுடம்பு - திருமேனியானது, அச்சோ - அதிசயம், அங்ஙனே அழகிது - அவ்வாறே அழகுள்ளதா யிருக்கின்

றது; ஓவர்-சித்திரக்காரர், அண் அம்-பொருந்திய அழகையுடைய, பலகுலாம் படைசெய் - பலவாய் விளங்குகிற படைகளை அமைக்கப் பெற்ற, நெடு நிலை - நெடிய நிலைகளையுடைய, மாடம் - மாடங்களாகிய, பருவரை ஞாங்கர் - பெரிய மலைகளின்மேல், வெள் திங்கள் - வெள்ளிய சந்திரன் தவழ்கின்ற, இலைகுலாம்பதணத்து-தழைவிளங்குகிற மதிலுண் மேடையமைந்த, இஞ்சி சூழ் - மதில் சூழ்ந்த, தஞ்சை - தஞ்சையிலுள்ள, இராசராசேச்சரத்து இவர்க்கு - இராசராசேச்சரத்தி லெழுந்தருளிய இவருக்கு, எ-று.

வி-ரை. படை - ஆயுதம். ஞாங்கர் - பக்கம் எனினுமாம். (க)

நெற்றியிற்கண்ணென் கண்ணினின்றகலா
நெஞ்சினிலஞ்சிலம்பலைக்கும்
பொற்றிருவடியென்குடிமுழுதாளப்
புகுந்தனபோந்தனவில்லை
மற்றெனக்குறவேன்மறிதிரைவடபால்
வண்புனன்மதகில்வாழ்முதலை
யெற்றுநீர்க்கிடங்கிலிஞ்சிசூழ்தஞ்சை
யிராசராசேச்சரத்திவர்க்கே.

ப-ரை. நெற்றியில் கண் - நெற்றியிலுள்ள கண்ணனது, என் கண்ணில்நின்று அகலா - என் கண்ணினின்று நீங்காது; அம் சிலம்பு அலைக்கும் - அழகிய சிலம்பு வருத்துகிற, பொன் - பொன்மயமாகிய, திருவடி - திருவடியானது, என் குடி முழுது ஆள - என் குடிமுழுதும் ஆளும்பொருட்டு, நெஞ்சினில் - மனத்தில், புகுந்தன - பிரவேசித்தன; போந்தன இல்லை - வெளிப்பட்டனவில்லை; (இவ்வாறான பின்பு) மற்று உறவு - வேறாகிய வுறவு, எனக்கு என் - எனக்கு யாதுக்கு; மறி திரை-மறிகின்ற அலைகளையுடைய, வடபால் வண்புனல்—, மதகில் வாழ் முதலை - மதகில் வாழ்கின்ற முதலைகளை, எற்றும்-எறிகின்ற, நீர் கிடங்கின்-நீரையுடைய அகழியோடு, இஞ்சி சூழ் - மதில்கள் சூழப்பெற்ற, தஞ்சை இராசராசேச்சரத்து இவர்க்கு—, எ-று.

வி-ரை. நெற்றியிற்கண் - நுதற்கண். மதகு-நீர் வெளிப்படும் வழியாகிய தூம்பு. இறைவரது கண் என் கண்ணிலும், அவரது திருவடி என் மனத்திலும் இருத்தலால் எனக்கு வேறுறவினரும் வேண்டுமோ என்பது இச்செய்யுட் கருத்து. (உ)

சடைகெழுமகுடந்தண்ணிலாவிரிய
வெண்ணிலாவிரிதருதரளக்
குடைநிழல்விடைமேற்கொண்டுலாப்போதுங்
குறிப்பெனோகோங்கிணரனைய
குடைகெழுநிருபர்முடியொடுமுடிதேய்ந்
துக்கசெஞ்சுடர்ப்படுகுவையோங்
கிடைகெழுமாடத்திஞ்சிசூழ்தஞ்சை
யிராசராசேச்சரத்திவர்க்கே.

ப-ரை. சடைகெழு மகுடம் - சடையாணியன்ற மகுடத்தில், தண் நிலா விரிய - குளிர்ச்சியாகிய நிலா விரியாநிற்க, வெள் நிலா விரிதரு - வெண்மையாகிய நிலா விரிகின்ற, தரளக்குடை நிழல் - முத்துக்குடையின் நிழலில், விடை மேற்கொண்டு - இடபத்தின் மேலேறி, உலா போதும் - உலாவருகிற,குறிப்பு என்னோ - குறிப்பு யாதோ, கோங்கு இணர் அனைய - கோங்கமலர்க்கொத்தினை நிகர்த்த, குடைகெழு நிருபர் - குடையையுடைய அரசரது, முடியொடு முடி தேய்ந்து - முடியோடு முடி உராய்ந்து, உக்க - சிந்தின, செஞ்சுடர் படுகுவை ஓங்கு - செஞ்சோதியையுடைய மணிக்குவியல்கள் ஓங்குகிற, இடைகெழு மாடத்து - இடம்பொருந்திய மாடங்களோடு, இஞ்சி சூழ் - மதில்சூழ்ந்த, தஞ்சை இராசராசேச்சரத்து இவர்க்கு—, எ-று.

வி-ரை. மகுடம் - முடி. நிருபர் முடியொடு முடிதேய்ந்துக்க செஞ்சுடர்படு என்கிற குறிப்பால் குவை மணிக்குவையை யுணர்த்திற்று. (ந)

வாழியம்போதத்தருகுபாய்விடையம்
வரிசையின்விளக்கலினடுத்த
சூழலம்பளிங்கின்பாசலராதிச்
சுடர்விடுமண்டலம்பொலியக்
காழகில்கமழுமாளிகைமகளிர்
கங்குல்வாயங்குலிகெழும
யாழொலிசிலம்புமிஞ்சிசூழ்தஞ்சை
யிராசராசேச்சரத்திவர்க்கே.

கருகல். (ச)

எவருமாமறைகளெவையும்வானவர்க
ளீட்டமுந்தாட்டிருக்கமலத்
தவருமாலவனுமறிவரும்பெருமை
யடலழலுமிழ்தழற்பிழம்ப
ருவரிமாகடலினொலிசெய்மாமறுகி
லுறுகளிற்றரசினதீட்ட
மிவருமால்வரைசெயிஞ்சிசூழ்தஞ்சை
யிராசராசேச்சரத்திவர்க்கே.

ப-ரை. எவரும் - யாவரும், மா மறைகள் எவையும் - பெரிய வேதங்கள் யாவும், வானவர்கள் ஈட்டமும்-தேவர்களுடைய கூட்டமும், தாள் - நாளத்தையுடைய, திரு - அழகிய, கமலத்தவரும் - தாமரைமலரை யாசநமாகவுடையபிரமரும், மாலவனும்-திருமாலும், அறிவு அரு பெருமை - அறிதற்கரிய பெருமையுண்டு,அடல்-வலிய, அழல் - சுடுகின்ற, தழல் உமிழ் - அக்கினியையுடைய, பிழம்பர்—, உவரி மா கடலின்-உப்புச் சுவையுள்ள பெரியகடல்போல, ஒலிசெய்-முழங்குகிற, மா மறுகில் - பெருந்தெருவில், உறு - மிகுதியாகிய, களிற்றரசினது ஈட்டம் - அரசயானைகளின் கூட்டம், இவரும் மால் வரை செய் - ஓங்கிய பெரிய மலைபோலச் சஞ்சரிக்கிற, இஞ்சி சூழ்-மதில்சூழ்ந்த, தஞ்சை இராசராசேச்சரத்து இவர்க்கு—, எ-று.

வி-ரை. மறுகு - தெரு. களிறு-யானை. அடல்-கொல்லல் எனினுமமையும். உவர் - உப்புச்சுவை, அதனையுடையது உவரி. மால்வரைசெய் இஞ்சி யென்பதற்கு பெரிய மலைபோலச் செய்யப்பட்ட மதில் என்றுரைத்தலுமாம். (௫)

அருளுமாறருளியாளுமாறுள
வடிகடமழகியவிழியுங்
குருளும்வார்காதுங்காட்டியான்பெற்ற
குயிலினைமயல்செய்வதழகோ
தரளவான்குன்றிற்றண்ணிலாவொளியுந்
தருகுவால்பெருகுவான்றெருவி
லிருளெலாங்கிழியுமிஞ்சிசூழ்தஞ்சை
யிராசராசேச்சரத்திவர்க்கே.

ப-ரை. அருளுமாறு அருளி - அருளும்வழியாலருளி, ஆளுமாறு ஆள - ஆளும்வழியாலாள, அடிகள் - சுவாமிகளுடைய, அழகிய விழி

யும் - அழகாகிய கண்களும், குருளும் - குருளினையும், வார் காதும் - நெடிய செவியினையும், காட்டி - காட்டி, யான் பெற்ற குயிலினை - நான்பெற்ற குயில்போலும் பெண்ணை, மயல் செய்வது அழகோ - மையலேற்றுவது அழகாமோ; தரளவான் குன்றில் - பெரிய முத்து மலைபோல, தண் நிலா ஒளியும்-குளிர்ந்த நிலவினொளியும், தரு-தருகிற, குவால் பெருகு - குவியல்கள் பெருகுகின்ற, வான் தெருவில் - பெருந்தெருவில், இருள் எல்லாம் கிழியும் - இருள்முழுதும் கெடுகின்ற, இஞ்சி சூழ் - மதில் சூழ்ந்த, தஞ்சை இராசராசேச்சரத்து இவர்க்கு—, எ-று.

வி-ரை. அடிகள்தம் என்பதில் தம்சாரியை. குருள்-புன்சடை. குயில்-உவமையாகுபெயர். மதில் பேரொளியுள்ள மணிகளாற் செய்யப்பட்டிருத்தலால் அதனை 'இருளெலாங் கிழியு மிஞ்சி' என்றார்.

தனிப்பெருந்தாமேமுழுதுறப்பிறப்பின்
 றளிரிறப்பிலையுதிர்வென்று
னினைப்பருந்தம்பாற்சேறலின்றேனு
 நெஞ்சிடிந்துருகுவதென்னோ
சுனைப்பெருங்கலங்கற்பொய்கையங்கழுநீர்ச்
 சூழன்மாளிகைசுடர்வீசு
மெனைப்பெருமணஞ்செயிஞ்சிசூழ்தஞ்சை
 யிராசராசேச்சரத்திவர்க்கே.

ப-ரை. தனி பெரு தாமே-தனிமையாகிய பெரியதாமே, முழுது உற - முழுதும் பொருந்த, பிறப்பின் - பிறப்பினது, தளிர் - தளிரானது, இறப்பு இல்லை - இறத்தலில்லை, உதிர்வு என்றால்-உதிர்தலென்றால், நினைப்பு அரு-நினைத்தற்கரிய, தம்பால்-தம்மிடத்து, சேறல் இன்று எனும் - செல்லுதலில்லையாயினும், நெஞ்சு இடிந்து - மனமிடிந்து, உருகுவது என்னோ - உருகுவதற்குக் காரணம் யாதோ, சுனை - சுனைகளின், பெரு - பெரிய, கலங்கல் - கலங்கலையுடைய, பொய்கை - பொய்கைகள் சூழ்ந்த, கழுநீர் சூழல் - கழுநீர்ச் சூழல்களையுடைய, மாளிகை - மாளிகைகள், சுடர் வீசும் - ஒளியை வீசுகிற, எனை - மற்றையெல்லாப் பொருள்களையும், பெரு மணம் செய் - பெரியமணத்தை யுண்டாக்குகிற, இஞ்சி சூழ்-மதில் சூழ்ந்த, தஞ்சை இராசராசேச்சரத்து இவர்க்கு—, எ - று.

வி-ரை. தனி - ஒப்பின்மை. செல்தல் - சேறலென்றாயிற்று. நெஞ்சிடிதல் - மனங்கலங்கல். (எ)

பன்னெடுங்காலம்பணிசெய்துபழையோர்
 தாம்பலரேம்பலித்திருக்க
வென்னெடுங்கோயினெஞ்சுவீற்றிருந்த
 வெளிமையையென்றுநான்மறக்கேன்
மின்னெடும்புருவத்திளமயிலனையார்
 விலங்கல்செய்நாடகசாலை
யின்னடம்பயிலுமிஞ்சிசூழ்தஞ்சை
 யிராசராசேச்சரத்திவர்க்கே.

ப-ரை. பல் நெடுங்காலம் - பலவாகிய நெடுங்காலமாக, பணி செய்து - தொண்டுசெய்து, பழையோர் - முன்னோர், பலர் - பல பேர், எம்பலித்திருக்க - ஏக்கற்றிருக்க, என் - எனது, நெஞ்சு - மனத்தை, நெடுங்கோயில் வீற்றிருந்த - பெருங்கோயிலாகக் கொண்டு வீற்றிருந்த, எளிமையை - எளிதாந் தன்மையை, என்றும் - எக்காலத்தும், நான்மறக்கேன்-நான்மறக்கமாட்டேன்; மின்-மின்னுகிற, நெடு - நெடிய, புருவத்து - புருவத்தையுடைய, இள மயில் அனையார் - இளமயிலை நிகர்த்தமாதர், விலங்கல் செய் - மலைபோலச் செய்யப்பட்ட, நாடகசாலையில் - நடநசாலையில், நடம் பயிலும் - நடநஞ்செய்கிற, இஞ்சி சூழ் - மதில் சூழ்ந்த, தஞ்சை இராசராசேச்சரத்து இவர்க்கு—, எ-று.

வி-ரை. எளிமை - ஸௌலப்யம். (அ)

மங்குல்சூழ்போதினொழிவறநிறைந்து
 வஞ்சகர்நெஞ்சகத்தொளிப்பா
ரங்கழற்சுடராமவர்க்கிளவேன
 லலர்கதிரனையவாழியரோ
பொங்கெழிற்றிருநீறழிபொசிவனப்பிற்
 புனறுளும்பவிர்சடைமொழுப்ப
ரெங்களுக்கினியரிஞ்சிசூழ்தஞ்சை
 யிராசராசேச்சரத்திவர்க்கே.

ப-ரை. மங்குல்சூழ்போதின்-மேகமறைத்தகாலம்போல,ஒழிவு அற நிறைந்து - நீக்கமற நிறைந்து, வஞ்சகர் நெஞ்சகத்து ஒளிப்பார்- வஞ்சகருடைய மனத்தினிடத்தில் மறைவார், அங்கு-அவ்விடத்து, அழல் சுடர் ஆம் அவர்க்கு - வெப்பத்தையுடைய நெருப்புருவாகிய

அவருக்கு, இளவேனல் - இளவேனலாவது, அலர் கதிர் அனைய - பரந்த கிரணங்களையுடைய சூரியனை நிகர்த்த, வாழியரோ - வாழியரோ, பொங்கு-மிகுந்த, எழில் - அழகையுடைய, திருநீறு - திருநீறானது, அழி பொசி வனப்பின்-அழிந்து பொசிகின்ற அழகோடுகூடிய, புனல் துளும்பு-நீர் துளும்புகின்ற, அவிர்சடை மொழுப்பர்-விளங்குகின்ற சடைமுடியையுடையவர், எங்களுக்கு இனியர் - எமக்கினியாயிருப்பவர், இஞ்சி சூழ் - மதில் சூழ்ந்த, தஞ்சை இராசராசேச்சரத்து இவர்க்கு—, எ-று.

வி-ரை. போது - காலம். அழற்சுடராமவர்-நெருப்புருவாகிய அவர் (சோணசைலமானவர்). பொசிதல் - கசிதல். வனப்பு - அழகு. மொழுப்பர் - மொழுப்பு என்பதன்போலி. (கூ)

தனியரெத்தனையொராயிரவருமாந்
தன்மையரென்வயத்தினராங்
கனியரத்தருதீங்கரும்பர்வெண்புரிநூற்
கட்டியரட்டவாரமிர்தர்
புனிதர்பொற்கழலர்புரிசடாமகுடர்
புண்ணியர்பொய்யிலாமெய்யர்க்
கினியரெத்தனையுமிஞ்சிசூழ்தஞ்சை
யிராசராசேச்சரத்திவர்க்கே.

ப-ரை. தனியர் - தனியராயிருப்பவர், எத்தனையொர் ஆயிரவரும் ஆம் தன்மையர் - எத்தனையாயிரம்பேராகிய தன்மையையுடையவர், என் வயத்தினர் ஆம் கனியர் - என்வசப்பட்டவராய்க் கனியை நிகர்த்திருப்பவர், அ தரு தீ கரும்பர் - அந்த இனிப்பைத் தருகிற கரும்புபோல்பவர், வெண்புரிநூல்கட்டியர் - வெண்புரிநூலைக் கட்டினவர், அட்ட ஆர் அமிர்தர்-காய்ச்சின அரியபானகநிகர்த்தவர், புனிதர் - பரிசுத்தர், பொன் கழலர் - பொற்கழலையணிந்தவர், புரிசடாமகுடர் - கட்டப்பட்ட சடைமுடியை யுடையவர், புண்ணியர்-தருமரூபியாயிருப்பவர், பொய்யிலா மெய்யர்க்கு எத்தனையும் இனியர் - பொய்யிலாமெய்யருக்கு எவ்வளவும் இனியராயிருப்பவர், இஞ்சிசூழ்-மதில் சூழ்ந்த, தஞ்சை இராசராசேச்சரத்து இவர்க்கு—, எ-று.

வி-ரை. தனியர் - ஒப்பற்றவர் எனினுமாம். அட்ட என்பதற்குப் பகுதி அடு. (க0)

சரளமந்தாரசண்பகவகுள
சந்தனநந்தனவனத்தி
னிருள்விரிமொழுப்பினிஞ்சிசூழ்தஞ்சை
யிராசராசேச்சரத்திவரை
யருமருந்தருந்தியல்லறீர்கருவூ
ரறைந்தசொன்மாலையீரைந்தின்
பொருண்மருந்துடையோர்சிவபதமென்னும்
பொன்னெடுங்குன்றுடையோரே.

ப-ரை. சரள மந்தார சண்பக வகுள சந்தன நந்தனவனத்தின்-சிவதை மந்தாரம் சண்பகம் மகிழ் சந்தனம்ஆகிய இவைகளையுடைய நந்தனவனத்தின், இருள்விரி மொழுப்பின் - இருள்பரந்தமொழுப்பின், இஞ்சி சூழ் தஞ்சை இராசராசேச்சரத்துஇவரை—, அருமருந்து அருந்தி - அரிய தேவாமிர்தம்போலவுண்டு, அல்லல் தீர் - துன்பம் நீங்கின, கருவூரர் - கருவூரன், அறைந்த - சொல்லிய, சொல்மாலை-சொல்மாலையாகிய, ஈரைந்தின் - பத்துப்பாடல்களின், பொருள் மருந்து உடையோர் - பொருளாகிய மருந்தையுடையவர், சிவபதம் என்னும் - சிவபதமென்கிற, நெடு - நெடிய, பொன்குன்று உடையோர்-பொன்மலையை யுடையராவர், எ-று.

வி-ரை. இராசராசேச்சரத்திறைவனை, கருவூரர் அருமருந்து போலவுண்டபொடிய இப்பத்துப்பாட்டையும் பொருளுணர்ச்சியோடு கற்றுவல்லவர் சிவபதம் என்கிற பொற்குன்றை யுடையவராவர் என்பதிச் செய்யுட்கருத்து. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## கo. திருவிடைமருதூர்.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வெய்யசெஞ்சோதிமண்டலம்பொலிய
வீங்கிருணடுநல்யாமத்தோர்
பையசெம்பாந்தள்பருமணியுமிழ்ந்து
பாவியேன்காதல்செய்காதி

ஐயசெம்பொற்றோட்டவிர்சடைமொழுப்பி
னழிவழகியதிருநீற்று
மையசெங்கண்டத்தண்டவானவர்கோன்
மருவிடந்திருவிடைமருதே.

ப-ரை. வெய்ய - வெப்பமாகிய, செஞ்சோதிமண்டலம் பொலிய - சூரியமண்டலம்போல விளங்க, வீங்கு இருள் - மிக்க இருளையுடைய, நல் - நல்ல, நடுயாமத்துள் - நடுச்சாமத்தில், பைய - படத்தையுடைய, செம்பாந்தள் - செம்பாம்பு, பருமணி உமிழ்ந்து - பெரிய மாணிக்கத்தைக் கக்கி, பாவியேன் காதல்செய் காதில் - பாவியாகிய நான் விரும்புகிற காதினிடத்து; ஐய - அழகையுடைய, செம்பொன்தோடு-செம்பொன்னாலியன்ற குழையையணிந்த, அவிர்சடைமொழுப்பின் - விளங்குகின்ற சடைமுடியினோடு, அழிவு அழகிய - அழிவாலழகிய—, திருநீற்று - திருநீற்றையணிந்த, மைய - கருநிறத்தையுடைய, செம் கண்டத்து-செவந்தகண்டத்தையுடைய, அண்ட வானவர்கோன்-தேவர்களுக்கரசனாகிய சிவபெருமான், மருவு இடம்-எழுந்தருளி யிருக்குமிடம், திருவிடைமருதே - திருவிடைமருதூரேயாம், எ-று.

வி-ரை. வெய்யசெஞ்சோதி - சூரியன். வீங்குதல் - மிகுதல். பை - படம். ஐ - அழகு. மை - கருமை. (௧)

இந்திரலோகமுழுவதும்பணிகேட்
டிணையடிதொழுதெழத்தாம்போ
யைந்தலைநாகமேகலையரையா
வகந்தொறும்பலிதிரியடிக
டந்திரிவீணைகீதமும்பாடச்
சாதிகின்னரங்கலந்தொலிப்ப
மந்திரகீதந்தீங்குழலெங்கு
மருவிடந்திருவிடைமருதே.

ப-ரை. இந்திரலோகம் முழுவதும் - இந்திரலோக முழுதும், பணி கேட்டு-ஏவல்கேட்டு, இணை அடி - இரண்டு திருவடிகளையும், தொழுது எழ - தொழுதெழாநிற்க, தாம் போய் - தாம்சென்று, ஐந் தலைநாகம்-ஐந்தலைப்பாம்பாகிய, மேகலை-மேகலையானது, அரையா - அரையிற்கட்டப்பட் டசையாநிற்க, அகம்தொறும் - வீடுகள்தோறும், பலி திரி - பலிக்குழலாநின்ற, அடிகள் - சுவாமிகள், தந்திரி

வீணை கீதமும்பாட - தந்திரிகளோடு கூடிய வீணை கீதத்தையும் பாட, சாதி கின்னரம் கலந்து ஒலிப்ப - சாதிகின்னரமானது கலந்தொலிக்க, மந்திர கீதம் - மந்திரரூபமாகிய கீதங்களும், தீங்குழல் - இனிய குழலோசையும், எங்கும் - எவ்விடத்திலும், மருவு இடம் - பொருந்தியிருக்கு மிடமாவது, திருவிடைமருதே - திருவிடைமருதூரேயாகும், எ-று.

வி-ரை. இந்திரலோகம் - தேவலோகம். (உ)

பனிபடுமதியம்பயில்கொழுந்தன்ன
பல்லவம்வல்லியென்றிங்ஙன்
வினைபடுகனகம்போலயாவையுமாய்
வீங்குலகொழிவறநிறைந்து
துனிபடுகலவிமலைமகளுடனாய்த்
தூங்கிருணடுநல்யாமத்தென்
மனனிடையணுகிநுணுகியுள்கலந்தோன்
மருவிடந்திருவிடைமருதே.

ப-ரை. பனிபடு மதியம் - குளிர்ச்சி பொருந்திய பிறை, பயில் கொழுந்து - செறிந்த கொழுந்து, அன்ன பல்லவம் - அப்படிப்பட்ட தளிர், வல்லி - கொடி, என்று இங்ஙன் வினைபடு - என்றிவ்வாறு தொழிற்படுகிற, கனகம்போல - பொன்போல, யாவையும் ஆய் - எல்லாப் பொருள்களுமாகி, வீங்கு - பெருத்த, உலகு - உலக முழுதிலும், ஒழிவு அற நிறைந்து - நீக்கமில்லாமல் நிறைந்து, துனிபடு கலவி - துனியையுடைய கலவித் தொழிற்குரிய, மலைமகளுடனாய் - மலைமகளோடு கூடினவனாய், தூங்கு இருள் - பேரிருளின், நடு நல் யாமத்து - நடுவாகிய நல்ல யாமத்தில், என் மனனிடை அணுகி - என் மனத்திற் பிரவேசித்து, நுணுகி-நுட்பமாகி, உள் கலந்தோன்- உள்ளே கலந்தவனாகிய சிவபிரான், மருவிடம் - பொருந்துமிடமாவது, திருவிடைமருதே - திருவிடைமருதூரேயாகும், எ-று.

வி-ரை. துனி - சிறுபிணக்கு. கலவி - புணர்ச்சி. மனம் மனன் எனப் போலியாயிற்று. (௩)

அணியுமிழ்சோதிமணியினுள்கலந்தாங்
கடியனேனுள்கலந்தடியேன்
பணிமகிழ்ந்தருளுமரிவைபாகத்தான்
படர்சடைவிடமிடற்றடிகள்

டுணியுமிழாடையரையிலோராடை
சுடருமிழ்தரவதனருகே
மணியுமிழ்நாகமணியுமிழ்ந்திமைப்ப
மருவிடந்திருவிடைமருதே.

ப-ரை. அணி உமிழ் சோதி-அழகொழுகுகின்ற ஒளியானது, மணியினுள் கலந்தாங்கு - மணியினிடத்திற் கலந்தாற்போல, அடியனேன் உள் கலந்து - அடியேனது மனத்திற் கலந்து, அடியேன் பணி - அடியேனது தொண்டினை, மகிழ்ந்தருளும் - மகிழ்ந்தருளுகின்ற, அரிவை பாகத்தன் - பெண்பாகத்தை யுடையவன், படர் சடை - விரிந்த சடையையும், விடம் மிடறு - விஷகண்டத்தையுமுடைய, அடிகள்-சுவாமிகள், துணி உமிழ் ஆடை அரையில் - துணிக்கப்பட்ட ஆடையையணிந்த அரையில், ஓர் ஆடை - ஓராடையானது, சுடர் உமிழ்தர - ஒளியைக் கக்க, அதன் அருகே - அதற்கருகே, மணி உமிழ் நாகம் - மணியை உமிழ்கின்ற பாம்பானது, அணி உமிழ்ந்து இமைப்ப-அழகைத்தந்து பிரகாசிக்க, மருவு இடம்-பொருந்துமிடமானது, திருவிடைமருதே, எ-று.

வி-ரை. அரிவை - பருவங்குறியாது பெண்ணென்றுந் துணையாய் நின்றது. உமிழ்தர என்பதற்குப் பகுதி உமிழ்தா. மணி-மாணிக்கம். (ச)

பந்தமும்பிரிவுந்தெரிபொருட்பனுவற்
படிவழிசென்றுசென்றேறிச்
சிந்தையுந்தானுங்கலந்ததோர்கலவி
தெரியினுந்தெளிவுருவண்ண
மெந்தையுந்தாயும்யானுமென்றிங்ங
னெண்ணில்பல்லூழிகளுடனாய்
வந்தணுகாது நுணுகியுள்கலந்தோன்
மருவிடந்திருவிடைமருதே.

ப-ரை. பந்தமும் - கட்டும், பிரிவும்-நீக்கமும், தெரிபொருள் - தெரிதற்குரிய பொருளமைந்த, பனுவற்படி வழி - நூல்வழியே, சென்று சென்று ஏறி - சென்றுசென்றுயர்ந்து, சிந்தையும் தானும் கலந்தது - மனமும் தானும் கலந்ததாகிய, ஓர் கலவி-ஓர் கலவியானது, தெரியினும் - தெரிந்தாலும், தெளிவுருவண்ணம் - தெரியாதவகை, எந்தையும் தாயும் - என்தந்தையும் தாயும், யானும் - நானும்,என்று-

என்று சொல்லப்பட்டு, இங்ஙன் - இவ்வாறு, எண் இல்-கணக்கற்ற, பல் ஊழிகள் உடனாய் - பலவூழிக் காலங்களாக, வந்து அணுகாது நுணுகி - வந்து பொருந்தாமல் நுட்பமாகி, உள் கலந்தோன் - என் மனத்திற் கலந்தவன், மருவு இடம் - பொருந்துமிடமாவது, திருவிடைமருதே—, எ-று.

வி-ரை. பந்தம் - பிறவிக்கட்டு. பிரிவு - வீடு. கலவி - கலப்பு (ஒற்றுமை). பனுவல் - வீட்டுநூல். (ரு)

எரிதருகரிகாட்டிடுபிணநிணமுண்
டேப்பமிட்டிலங்கெயிற்றழல்வாய்த்
துருகழனெடும்பேய்க்கணமெழுந்தாடுந்
தூங்கிருணடுநல்யாமத்தே
யருள்புரிமுறுவன்முகிழ்நிலாவெறிப்ப
வந்திபோன்றொளிர்திருமேனி
வரியரவாடவாடுமெம்பெருமான்
மருவிடந்திருவிடைமருதே.

ப-ரை. எரிதரு - எரிகின்ற, கரிகாட்டு - சுடுகாட்டில், இடு - இட்ட, பிணம்-பிணத்தின், நிணம் உண்டு-நிணத்தையுண்டு, ஏப்பமிட்டு - ஏப்பமிட்டு, இலங்கு எயிறு - விளங்குகிற பல்லையும், அழல் வாய் - நெருப்பைக் கக்குகிற வாயையும், துரு கழல்-நெருங்கிய கழலையுமுடைய, நெடு பேய்க்கணம் - பெரும்பேய்க் கூட்டம், எழுந்து ஆடும் - குதித்தாடுகிற, தூங்கு இருள் - மிகுந்த இருளையுடைய, நடு நல் யாமத்து-நல்ல நடுச்சாமத்தில், அருள்புரி முறுவல் - அருள்செய்கின்ற புன்சிரிப்பானது, முகிழ்நிலா எறிப்ப - இளநில வெறிக்கவும், அந்திபோன்று - அந்திமானம்போன்று, ஒளிர் - விளங்குகிற, திருமேனி - திருமேனியிலணிந்த, வரி அரவு ஆட - நெடிய பாம்புகளாடவும், ஆடும் - ஆடுகின்ற, எம்பெருமான் - எம்பெருமானானவன், மருவு இடம் - பொருந்துமிடமாவது, திருவிடைமருதே—, எ-று.

வி-ரை. எரிதரு - ஒருசொல், இதற்குப் பகுதி எரிதா. துரு - களிம்பு எனினுமாம். வரி - கீற்றுக்கள் என்றலுமாம். (சு)

எழிலையாழ்செய்கைப்பசுங்கலன்விசும்பி
னின்றுளிபடநனைந்துருகி
யழலையாழ்புருவம்புனலொடுங்கிடந்தாங்
காதனேன்மாதரார்கலவித்

தொழிலையாழ்நெஞ்சமிடர்படாவண்ணந்
 தூங்கிருணடுநல்யாமத்தோர்
மழலையாழ்சிலம்பவந்தகம்புகுந்தோன்
 மருவிடந்திருவிடைமருதே.

ப-ரை. எழிலை யாழ்செய்கை—, பசுகலன்—, விசும்பின்—, இன் துளிபட நனைந்து உருகி - இனிய துளிகள் படுதலால் நனைந்துருகி, அழலை ஆழ் புருவம்—, புனல் ஒடுங்கு இடம் தாங்கு—, ஆதனேன் - அறிவிலியாகிய நான், மாதரார் - மாதரது, கலவித் தொழிலை-புணர்ச்சித் தொழிலில், ஆழ்-அழுந்தின, நெஞ்சம்-மனம், இடர்படாவண்ணம் - துன்பப்படாதபடி, தூங்கு இருள் - மிக்க இருளையுடைய, நடு நல்யாமத்து-நல்ல நடுச்சாமத்தில், ஓர்-ஒப்பற்ற, மழலை யாழ் சிலம்ப வந்து - மெல்லிய யாழோசையொலிக்க வந்து, அகம் புகுந்தோன் - என் மனத்திற் புகுந்தவன், மருவு இடம் - பொருந்துமிடமாவது, திருவிடைமருதே—, எ-று. (எ)

வையவாம்பெற்றம்பெற்றமேறுடையார்
 மாதவர்காதல்வைத்தென்னை
வெய்யவாஞ்செந்தீப்பட்டவிட்டிகைபோல்
 விழுமியோன்முன்புபின்பென்கோ
நொய்யவாறென்னவந்துள்வீற்றிருந்த
 நூறுநூறுயிரகோடி
மையவாங்கண்டத்தண்டவானவர்கோன்
 மருவிடந்திருவிடைமருதே.

ப-ரை. வையவாம் பெற்றம் பெற்ற மேறுடையார் மாதவர் காதல் வைத்தென்னை—, வெய்யவாம் செந்தீ பட்ட - வெப்பம் பொருந்திய செந்தீயிற்பட்ட, விட்டிகைபோல்-விட்டில்போல, விழுமியோன்—, முன்பு பின்பு என்கோ—, நொய்யவாறு என்ன-நுட்பமென்னலாம்படி, வந்து - வந்து, உள் வீற்றிருந்த - என் மனத்தில் வீற்றிருந்த, நூறு நூறுயிரகோடி—, மை அவாம் கண்டத்து-மேகங்கள் விரும்புகிற கண்டத்தையுடைய, அண்டவானவர்கோன் - விண்ணுலகத்தை யாள்கின்ற தேவர்களுக் கரசனாகிய சிவபிரான், மருவு இடம் - பொருந்துமிடமாவது, திருவிடைமருதே—, எ-று. (அ)

கலங்கலம்பொய்கைப்புனற்றெளிவிடத்துக்
 கலந்தமண்ணிடைக்கிடந்தாங்கு
நலங்கலந்தடியேன்சிந்தையுட்புகுந்த
 நம்பனேவம்பனேனுடைய

புலங்கலந்தவனேயென்றுநின்றுருகிப்
புலம்புவாரவம்புகாரருவி
மலங்கலங்கண்ணிற்கண்மணியனையான்
மருவிடந்திருவிடைமருதே.

ப-ரை. கலங்கல் அம் பொய்கை புனல் - கலங்கலையுடைய அழகிய பொய்கை நீரானது, தெளிவிடத்து - தெளிந்தவிடத்தில், கலந்த மண்ணிடை - பொருந்திய மண்ணில், கிடந்தாங்கு - கிடந்தாற்போல, நலம் கலந்து - நன்மையோடு கூடி, அடியேன் சிந்தையுள் புகுந்த - அடியேனது மனத்திற் புகுந்த, நம்பனே - நம்பனே, வம்பனேனுடைய - வம்பனேனது, புலம் கலந்தவனே - அறிவிற் கலந்தவனே, என்று - என்று, நின்று உருகி - நின்று மனமுருகி புலம்புவார் - புலம்புவோர், அவம் புகார் - வீண்காரியத்திற் பிரவேசியாரது, அரு விமலம் கலம் - அருமையாகிய பரிசுத்தமுள்ள ஆபரணத்தையும், கண்ணில் கண்மணி-கண்ணிலுள்ள கண்மணியையும், அனையான் - நிகர்த்தவனாகிய சிவபிரான், மருவு இடம் - பொருந்துமிடமாவது, திருவிடைமருதே—; எ-று.

வி-ரை. புலம்புவார் - கதறுவோர். வம்பன் - தீச்செயலோன். அவம்புகார் என்றது ஞானியரை. (கூ)

ஒருங்கிருங்கண்ணினெண்ணில்புன்மாக்க
ளுறங்கிருணடுநல்யாமத்தோர்
கருங்கணின்றிமைக்குஞ்செழுஞ்சுடர்விளக்கங்
கலந்தெனக்கலந்துணர்கருவூர்
தருங்கரும்பனையதீந்தமிழ்மாலை
தடம்பொழின்மருதயாழுதிப்ப
வருங்கருங்கண்டத்தண்டவானவர்கோன்
மருவிடந்திருவிடைமருதே.

ப-ரை. ஒருங்கு - ஒருங்கே, இருகண்ணின் - இருகண்களாலும், எண் இல் புன்மாக்கள்-அளவில்லாத அற்பமனிதர், உறங்கு - உறங்குகிற, இருள் - இருளையுடைய, நடு நல்யாமத்து - நல்லநடுச்சாமத்தில், ஓர் - ஒப்பற்ற, கரும்கண்-கருங்கண்கள், நின்று இமைக்கும் - நின்று விளங்குகிற, செழுஞ்சுடர் விளக்கம் கலந்தென-செழுமையாகிய ஒளியையுடைய தீபம் சேர்ந்தாற்போல, கலந்து-சேர்ந்து, உணர் - அறிந்த, கருவூர் - கருவூரன், தரும்-தந்த, கரும்பு அனைய - கரும்பைநிகர்த்த, தீ - இனிப்பாகிய, தமிழ் மாலை-தமிழ்மாலை, தடம் பொழில் - பெரியசோலை, மருதயாழ் உதிப்ப - மருதயாழ் தோன்ற, வரும்-வருகிற, கரு கண்டத்து - கரிய கண்டத்தையுடைய, அண்ட வானவர்கோன்—, மருவிடம்—, திருவிடைமருதே—, எ-று. (க0)

திருச்சிற்றம்பலம்.

# பூந்துருத்தி நம்பிகாடநம்பி திருவிசைப்பா.

## க - திருவாரூர்.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கைக்குவான்முத்தின்சரிவளைபெய்து
கழுத்திலோர்தனிவடங்கட்டி
முக்கணுயகராய்ப்பவனிபோந்திங்ஙன்
முரிவதோர்முரிவுமையளவுந்
தக்கசீர்க்கங்கையளவுமன்றென்னே
தம்மொருப்பாடுலகதன்மேன்
மிக்கசீராரூராதியாய்வீதி
விடங்கராய்நடங்குலாவினரே.

ப-ரை. கைக்கு - கையில், வால்முத்தின் - வெள்ளிய முத்துக்களின், சரிவளை பெய்து - கூட்டமாகிய வளையலை யணிந்து, கழுத்தில் ஓர் தனிவடம் கட்டி - கண்டத்தில் ஒரு ஒப்பற்ற ஆரத்தைக் கட்டி, முக்கண் நாயகராய் - மூன்று கண்களையுடைய இறைவராகி, பவனி போந்து - பவனி வந்து, இங்ஙன் - இவ்வாறு, முரிவது ஓர் முரிவு - தோன்றுவதாகிய ஒருதோற்றம், உமை அளவும் - உமாதேவியினளவும், தக்க சீர் கங்கை அளவும் - தகுதியான சிறப்பமைந்த கங்கையினளவும், அன்று - அன்று, என்னே-யாதுகாரணமோ, தம் ஒருப்பாடு - தமது சம்மதம், உலகதன்மேல் - உலகின்மீது மிகுந்த சிறப்பையுடைய, ஆரூர் ஆதியாய் - ஆரூர் முதல்வராய், வீதி விடங்கர் ஆய் - வீதிவிடங்கராகி, நடம் குலாவினர் - நடநமாடுகின்றனர், எ-று.

வி-ரை. கைக்கு - உருபுமயக்கம். வால் - வெண்மை. (க)

பத்தியாயுணர்வோரருளைவாய்மடுத்துப்
பருகுதோறமுதமொத்தவர்க்கே

தித்தியாவிருக்குந்தேவர்காளிவர்தந்
திருவுருவிருந்தவாபாரீர்
சத்தியாய்ச்சிவமாயுலகெலாம்படைத்த
தனிமுழுமுதலுமாயதற்கோர்
வித்துமாயாரூராதியாய்வீதி
விடங்கராய்நடங்குலாவினரே.

ப-ரை. பத்தியாய் - பத்தியுடையோராய், உணர்வோர் - தம்மையறிவோர், அருளை - திருவருளை, வாய்மடுத்து பருகுதோறு - வாய்வைத்துப் பருகுந்தோறும், அமுதம் ஒத்து - அமிர்தத்தை நிகர்த்து, அவர்க்கே - அவர்களுக்கே, தித்தியா இருக்கும் - இனித்திருக்கிற, தேவர்காள் - தேவர்களே, இவர்தம் - இவரது, திருவுரு-திருவுருவமானது, இருந்தவாறு பாரீர் - இருந்தவிதத்தைப் பாருங்கள். சத்தியாய் சிவமாய்-சத்தியாகியும் சிவமாகியும்,உலகு எல்லாம் படைத்த - உலகமுழுதும் படைத்த, தனி முழுமுதலுமாய் - ஒப்பற்ற முழுமுதற் பொருளாகியும், அதற்கு - அவ்வுலகத்துக்கு, ஓர் வித்துமாய் - ஒருவித்தாகியும், ஆரூர் ஆதியாய் - ஆரூர் முதல்வராகியும், வீதிவிடங்கர் ஆய் - வீதிவிடங்கராகியும், நடம் குலாவினர் - நடநமாடுகின்றனர், எ-று.

வி-ரை. பத்தி - அன்பு. உணர்வோர் என்றது ஞானியரை. பருகல் - உண்டல். வித்து - காரணம். (௨)

திருச்சிற்றம்பலம்.

---

## உ - கோயில்.

### பண் - சாளரபாணி.

### திருச்சிற்றம்பலம்.

முத்துவயிரமணிமாணிக்கமாலைகண்மேற்
றொத்துமிளிர்வனபோற்றாண்டுவிளக்கேய்ப்ப
வெத்திசையும்வானவர்களேத்துமெழிற்றில்லை
யத்தனுக்கும்பலமேயாடரங்கமாயிற்றே.

ப-ரை. முத்து வயிரம் அணி மாணிக்கமாலைகள்மேல் - முத்திலும் வயிரத்திலும் அழகிய மாணிக்கத்திலும் செய்யப்பட்ட

மாலைகளின்மீது, தொத்து மிளிர்வனபோல்-பூங்கொத்துக்கள் விள ங்குவனபோல, தூண்டு விளக்கு எய்ப்ப-தூண்டு விளக்குகள் அமைந் திருக்க, எத்திசையும் - எந்தத்திக்கிலும், வானவர்கள் - தேவர்கள், எத்தும் - துதிக்கின்ற, எழில் - அழகையுடைய, தில்லை அத்தனுக் கும் - தில்லையிறைவனுக்கும், அம்பலமே - பொன்னம்பலமே, ஆட ரங்கம் ஆயிற்று - நடநசபையாயிற்று, எ-று.

வி-ரை. நவமணிகளில் முத்துச் சிறந்தமையின் அதனை முன் வைத்தார். தொத்து - பூங்கொத்து. மிளிர்தல்-பிரகாசித்தல். எய்த் தல் - நிகர்த்தல். (௪)

கடியார்கணம்புல்லர்கண்ணப்பரென்று
னடியாரமருலகமாளநீயாளாதே
முடியாமுத்தீவேள்விமூவாயிரவரொடுங்
குடிவாழ்க்கைகொண்டுநீகுலாவிக்கூத்தாடினையே.

க-ரை. கடி ஆர் கணம்புல்லர் - விளக்கம்பொருந்திய கணம் புல்லர், கண்ணப்பர் - கண்ணப்பர், என்று - என்று சொல்லப்பட்ட, உன் அடியார் - உன்தொண்டர், அமர் உலகம் ஆள - தேவலோக த்தை யாளாநிற்க, நீ ஆளாதே - நீ யாளாமலே, முடியா - அழியாத, முத்தீவேள்வி - முத்தீ யையுடைய வேள்விகளைச் செய்கிற, மூவாயி ரவரொடும் - மூவாயிரவரோடும், குடிவாழ்க்கைகொண்டு-குடிவாழ்வு கொண்டு,நீ குலாவி கூத்தாடினையே-நீகுலாவி நடித்தனையே, எ-று.

வி-ரை. கடி-விளக்கம். கண்ணப்பர் - திண்ணனார். என்றவுன் என்பது என்றுன் என விகாரமாயிற்று. அமருலகம் என்றது சிவபுர த்தை. முத்தீ - த்ரேதாக்நி; அது காருகபத்தியம், ஆகவநீயம், தக்ஷி ணாக்நி என மூன்றுவகைப்படும். மூவாயிரவர் - தில்லை மூவாயிரவர்.

அல்லியம்பூம்பழனத்தாமூர்நாவுக்கரசைச்
செல்லநெறிவகுத்தசேவகனேதென்றில்லைக்
கொல்லைவிடையேறிக்கூத்தாடரங்காகக்
செல்வநிறைந்தசிற்றம்பலமேசேர்ந்தனையே.

ப-ரை. அல்லி - அகவிதழ்களையுடைய, அம் - அழகிய, பூ - மலர்கள் பொருந்திய, பழனத்து - வயல்களையுடைய, ஆமூர் - திரு வாமூரையுடைய, நாவுக்கரசை - திருநாவுக்கரசரை, செல்ல - போம் படி, நெறி வகுத்த - நெறியையுண்டாக்கின, சேவகனே - வீரனே, தென் தில்லை - தென்றில்லைப்பதியில், கொல் - கொல்லுந்தொழிலை யுடைய, ஐ - அழகாகிய, விடை ஏறி-இடபமேறினவனே, கூத்தாடு

அரங்கு ஆக-நடநசபையாக, செல்வம் நிறைந்த-வளங்கள் நிரம்பின, சிற்றம்பலமே சேர்ந்தனையே - சிற்றம்பலத்தையே அடைந்தனையே, எ - று.

வி-ரை. நாவுக்கரசு - வாகீசர். எறி - வினையாலணையும் பெயர்.

எம்பந்தவல்வினைநோய்தீர்த்திட்டெமையாளுஞ்
சம்பந்தன்காழியர்கோன்றன்னையுமாட்கொண்டருளி
யம்புந்துகண்ணாளுந்தானுமணிதில்லைச்
செம்பொன்செயம்பலமேசேர்ந்திருக்கையாயிற்றே.

ப-ரை. எம் - எம்முடைய, பந்தம் - பிறவிக்கட்டுக் கேதுவாகிய, வல்வினை நோய் - வலியவினைகளாகிய நோயை, தீர்த்திட்டு - நீக்கி, எம்மை ஆளும்-எங்களையாளுகின்ற, சம்பந்தன் காழியர்கோன் தன்னையும்-சம்பந்தனாகிய காழியர் வேந்தனையும், ஆட்கொண்டருளி- அடிமை கொண்டருளி, அம்பு உந்து கண்ணாளும் - அம்புபோன்ற கண்களையுடையவளாகிய உமாதேவியும், தானும்-தானுமாக, அணி- அழகிய, தில்லை - தில்லையில், செம்பொன் செய் அம்பலமே - செம்பொன்னாற் செய்யப்பட்ட அம்பலத்தையே, சேர்ந்திருக்கை ஆயிற்றே - சேர்ந்திருத்தலாயிற்றே, எ - று.

வி-ரை. நீக்கிக்கோடலருமைதோன்ற 'வல்வினை நோய்' என்றும், அறவொழித்தென்னும் பொருள் பயப்ப 'தீர்த்திட்டு' என்றும் கூறினர். காழியர்கோன் - சீகாழியிலுள்ளார்க்குத் தலைவன். உந்து உவமப்பொருளில் வந்தது. (௪)

களையாவுடலோடுசேரமானாரூரன்
விளையாமதமாறுவெள்ளானைமேல்கொள்ள
முளையாமதிசூடிமூவாயிரவரொடு
மளையாவிளையாடுமம்பலநின்னாடரங்கே.

ப-ரை. களையா உடலோடு-நீங்காத வுடம்புடனே, சேரமான்- சேரமானும், ஆரூரன் - ஆரூரனும், விளையா மதம் மாறு வெள்ளானை மேல் கொள்ள - ஊடாகி மாறாத மதத்தையுடைய வெள்ளானையின் மேற்கொள்ள, முளை ஆம் மதி சூடி - பிறைச்சந்திரனைத் தரித்தவனே, மூவாயிரவரோடும் - மூவாயிரவருடனே, அளையா - கலந்து, விளையாடும் - விளையாடுகின்ற, அம்பலம் - பொன்னம்பலமானது, நின் ஆடரங்கே - உன் நடநசபையோ, எ-று.

வி-ரை. களையாவுடலோடு என்றது உடம்போடுகூட்டி யென்றபடி. ஆரூரன் - சுந்தரர். அளையா - செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். அளைதல் - கலத்தல். (௫)

அகலோகமெல்லாமடியவர்கடற்சூழப்
புகலோகமுண்டென்றுபுகுமிடநீதேடாதே
புவலோகநெறிபடைத்தபுண்ணியங்கணண்ணியசீர்ச்
சிவலோகமாவதுவுந்தில்லைச்சிற்றம்பலமே.

ப-ரை. அகலோகம் எல்லாம் - அகலோகமுழுதும், அடியவர்கள் தற்சூழ - அடியார்கள்தன்னைச் சூழும்படி, புக - பிரவேசிக்கும்படி, லோகம் உண்டு என்று - உலகமுளதென்று, புகும் இடம் நீ தேடாதே-புகுமிடத்தை நீ தேடாமல், புவலோக நெறி படைத்த-புவிலோகவழியையடைந்த, புண்ணியங்கள் - தருமங்கள், நண்ணிய - பொருந்திய, சீர் - சிறப்பையுடைய, சிவலோகம் ஆவதுவும் - சிவலோகமாவதும், தில்லைச் சிற்றம்பலமே - தில்லைச்சிற்றம்பலமேயாகும், எ-று. (சு)

களகமணிமாடஞ்சூளிகைசூழ்மாளிகைமே
லளகமதிநுதலாராயிழையார்போற்றிசைப்ப
வொளிகொண்டமாமணிகளோங்கிருளையாங்ககற்றுந்
தெளிகொண்டதில்லைச்சிற்றம்பலமேசேர்ந்தனையே.

ப-ரை. களகம் - கழகங்களும், அணி மாடம் - அழகிய மாடங்களும், சூளிகை - சூளிகைகளும், சூழ்-சூழ்ந்த, மாளிகைமேல்-மாளிகைகளின்மீது, அளகம் மதி நுதலார் - கூந்தலையுடைய பிறைபோன்ற நெற்றியையுடையவராகிய, ஆயிழையார்-மாதர், போற்றிசைப்ப-வணங்க, ஒளி கொண்ட மாமணிகள் - ஒளியையுடைய மாணிக்கங்கள், ஓங்கு இருளை - மிகுந்த இருளை, ஆங்கு அகற்றும் - அவ்விடத்துநின்றும் நீக்குகிற, தெளிகொண்ட - தெளிவைக்கொண்ட, தில்லைச்சிற்றம்பலமே-தில்லைச்சிற்றம்பலத்தையே, சேர்ந்தனையே - அடைந்தாயே, எ-று.

வி-ரை. கழகம்-கல்வி பயிலிடம். அது எதுகையின்பநோக்கிக் களகமென்றாயிற்று. மதி - இவ்விடத்து பூர்வபக்ஷத்து அஷ்டமீ சந்திரனைக் குறித்தது. போற்றிசைத்தல் - ஒருசொல். (எ)

பாடகமுநூபுரமும்பல்சிலம்பும்பேர்ந்தொலிப்பச்
சூடகக்கைநல்லார்தொழுதேத்தத்தொல்லுலகி
னாடகத்தின்கூத்தைநவிற்றுமவர்நாடோறு
மாடகத்தான்மேய்ந்தமைந்தவம்பலநின்னாடரங்கே.

ப-ரை. பாடகமும் - பாடகமும், நூபுரமும்-பாதசாலமும், பல்சிலம்பும்-பலவகையாகிய சிலம்புகளும், பேர்ந்து ஒலிப்ப-நிலைபெயர்ந்தொலிக்கவும், சூடகம் கை நல்லார் - சூடகத்தை யணிந்த கையை

யுடைய மாதர், தொழுது எத்த - வணங்கித்துதிக்கவும், தொல் உலகில் - பழமையாகிய வுலகத்தில், நாடகத்தின் கூத்தை-நாடகக்கூத்தினை, நவிற்றுமவர்-செய்வோர், நாள்தோறும் - தினந்தோறும், ஆடகத்தால் - பொன்னினால், வேய்ந்து அமைந்த - மூடப்பட்டிருக்கிற, அம்பலம் - அம்பலமானது, நின் ஆடரங்கு - உனது நடநசபையாயிருக்கின்றது, எ - று.

வி-ரை. சூடகம் - கைவளை. ஆடகம் - பொன். ஆடகத்தால் வேய்ந்தமைந்தவம்பலம் என்றது பொன்னம்பலம் என்றபடி. வேய்தல் - மூடுதல். (அ)

உருவத்தெரியுருவாயூழிதோறெத்தனையும்
பரவிக்கிடந்தயனுமாலும்பணிந்தேத்த
விரவிக்குநேராகியெய்ந்திலங்குமாளிகைசூழ்ந்
தரவிக்குமம்பலமேயாடரங்கமாயிற்றே.

ப-ரை. உருவத்து - வடிவங்களில், எரியுருவாய் - நெருப்புவடிவாகி, ஊழிதோறு - கற்பகாலங்கள்தோறும், எத்தனையும் - எவ்வளவும், பரவிக்கிடந்து-துதித்துக்கிடந்து, அயனும்-பிரமனும், மாலும் - திருமாலும், பணிந்து எத்த - வணங்கித்துதிக்க, இரவிக்கு நேராகி - சூரியனுக்குச் சமமாகி, எய்ந்து இலங்கும் - பொருந்தி விளங்குகிற, மாளிகை சூழ்ந்து - மாளிகைகள் சூழ்ந்து, அரவிக்கும்-ஆரவாரித்தற்கிடமாகிய, அம்பலமே - பொன்னம்பலமே, ஆடரங்கம் ஆயிற்றே - உனக்கு நடநசபையாயிற்றே, எ - று.

வி-ரை. உருவத்து என்பதற்கு அழகையுடைய என்றுரைத்தலுமொன்று. (கூ)

சேடருறைதில்லைச்சிற்றம்பலத்தான்ற
னாடலதிசயத்தையாங்கறிந்துபூந்துருத்திக்
காடன்றமிழ்மாலைபத்துங்கருத்தறிந்து
பாடுமிவைவல்லார்பற்றுநிலைபற்றுவரே.

ப-ரை. சேடர் உறை-அடியார் வசிக்கிற, தில்லைச்சிற்றம்பலத்தான் தன் - தில்லைச்சிற்றம்பலத்தையுடையவனது, ஆடல் அதிசயத்தை - நடநாதிசயத்தை, ஆங்கு அறிந்து-அவ்வாறே யுணர்ந்து, பூந்துருத்திக்காடன் - பூந்துருத்திக்காடன் செய்த, தமிழ்மாலை பத்தும் - தமிழ்மாலையாகிய பத்துப்பாடலையும், கருத்து அறிந்து - கருத்தையுணர்ந்து, பாடும் இவை வல்லார் - பாடும்படியான இத்தொழிலில் வல்லவர், பற்றும் நிலைபற்றுவர்-பற்றுதற்குரிய நிலையைப் பற்றுவார், எ - று.

வி-ரை. சேடர் என்பது அடியாரையும் சேடியென்பது இறைவனையும் உணர்த்தும். சேஷசேஷி யென்பர் வடநூலார். பற்றுநிலை பற்றுவார் என்றது மேலான இறைநிலையைப் பற்றுவார் என்றபடி.

திருச்சிற்றம்பலம்.

# கண்டராதித்தர் திருவிசைப்பா.

## கோயில்.

### பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னாருருவமேல்விளங்கவெண்கொடிமாளிகைசூழப்
பொன்னார்குன்றமொன்றுவந்துநின்றதுபோலுமென்னாத்
தென்னாவென்றுவண்டுபாடுந்தென்றில்லையம்பலத்து
ளென்னாரமுதையெங்கள்கோவையென்றுகொலெய்துவதே,

ப-ரை. மின்னார் உருவம்-மாதர் வடிவம், மேல்விளங்க-மேலே விளங்காநிற்க, வெண்கொடி-வெள்ளைக்கொடிகள் கட்டின, மாளிகை சூழ-மாளிகைகள் சூழநிற்க, பொன் ஆர் குன்றம் ஒன்று-பொன்னாலியன்ற மலையொன்று, வந்து நின்றதுபோலும் என்னா - வந்து நின்றதுபோலுமென்று, தென்னா என்று - தென்னாவென்று, வண்டு பாடும்-வண்டுகள் பாடுகிற, தென் தில்லையம்பலத்துள்-தென்றில்லையம்பலத்தில், என் ஆர் அமுதை - என் அரிய அமிர்தத்தை, எங்கள் கோவை - எங்களிறைவனை, எய்துவது-அடைவது, என்றுகொல் - எந்நாளோ, எ - று.

வி-ரை. மின்னாருருவம் - மின்னினது அரிய வடிவம் எனினுமாம். தென்னா-ஒலிக்குறிப்பு. தென் அழகாதலால் தென்னா என்பதற்கு அழகனே யென்றலுமொன்று. (க)

ஓவாமுத்தீயஞ்சுவேள்வியாறங்கநான்மறையோ
ராவேபடுப்பாரந்தணாளராகுதிவேட்டுயர்வார்
மூவாயிரவர்தங்களோடுமுன்னரங்கேறிநின்ற
கோவேயுன்றன்கூத்துக்காணக்கூடுவதென்றுகொலோ.

ப-ரை. ஓவா-இடையறாத, முத்தீ-மூன்று அக்கினிகள், அஞ்சு வேள்வி - பஞ்சயாகங்கள், ஆறு அங்கம் - ஆறங்கங்கள், நான் மறையோர் - நான்கு வேதங்களையுடையோர், ஆவே படுப்பார்-கோமேதஞ் செய்வோர், அந்தணாளர் - அந்தணர் குலத்திலுதித்தோர், ஆகுதி வேட்டு உயர்வார் - ஆகுதியை விரும்பி உயர்வோர், மூவாயிரவர் -

தில்லை மூவாயிரவர், தங்களோடு-(என்னும்) இவர்களுடனே, முன்-முற்காலத்தில், அரங்கு ஏறிநின்ற-அரங்கேறிநின்ற, கோவே-இறைவனே, உன்றன் கூத்து - உன் திருநடநத்தை, காண கூடுவது - காணக்கிடைப்பது, என்றுகொலோ - எந்நாளோ, எ - று.

வி-ரை. படுத்தல் - கொல்லுதல். கோமேதகம் - பசுக்கொலை (ஓர் யாகம்). அஞ்சு வேள்வியென்றது-பிரமயாகம், தேவயாகம், மாநுடயாகம், பிதிர்யாகம், பூதயாகம் என்பன. இவற்றுள்; வேதமோதல் பிரமயாகமென்றும், ஓமம் வளர்த்தல் தேவயாகமென்றும், விருந்தோம்பல் மாநுடயாகமென்றும், நீர்க்கடனுற்றல் பிதிர்யாகமென்றும், பலியிடல் பூதயாகமென்றும் சொல்லப்படும். (உ)

முத்தீயாளர்நான் மறையர்மூவாயிரவர்நின்னே
டொத்தேவாழுந்தன்மையாளரோதியநான்மறையைத்
தெத்தேயென்றுவண்டுபாடுந்தென்றில்லையம்பலத்து
ளத்தாவுன்றனுடல்காணவணைவதுமென்றுகொலோ.

ப-ரை. முத்தீயாளர் - முத்தீயை வளர்ப்பவர், நான்மறையர் - நால்வேதத்தையுடையவர், மூவாயிரவர் - மூவாயிரவர், நின்னோடு ஒத்தே வாழும் தன்மையாளர் - உன்னோடு ஒத்தே வாழும்படியான தன்மையையுடையவர், ஓதிய - ஓதின, நான்மறையை - நான்குவேதங்களையும், தெத்தேயென்று வண்டுபாடும்-தெத்தேயென்று வண்டுகள் பாடுகின்ற, தென் தில்லை அம்பலத்துள் - தென்றில்லையம்பலத்து ளெழுந்தருளியிருக்கிற, அத்தா-இறைவனே, உன்றன் ஆடல் காண அணைவதும் - உன் திருநடநத்தைக் காணக் கிடைப்பதும், என்றுகொலோ - எந்நாளோ, எ - று.

வி-ரை. நான்மறையை வண்டுபாடும் என்றமையால் இடையறாத வேதமுழக்கத்தின் மிகுதி தோன்றுகின்றது. "ஆகமநூல் மித்திரவன்னியும் பூவையுங் கேட்டு வியந்துரைக்கும்" என்றார் பிறரும்.

மானைப்புரையுமடமென்னோக்கிமாமலையாளோடு
மானஞ்சாடுஞ்சென்னிமேலோரம்புலிசூடுமரன்
றேனைப்பாலைத்தில்லைமல்குசெம்பொனினம்பலத்துக்
கோனைஞானக்கொழுந்துதன்னைக்கூடுவதென்றுகொலோ.

ப-ரை. மானை புரையும்-மானைநிகர்த்த, மடம் மேல் நோக்கி - இளமையும் மேன்மையுமுள்ள நோக்கத்தையுடைய, மாமலையாளோடும் - பெரிய மலைமகளோடும், ஆன்-பசுவினது, ஐஞ்சு ஆடும்-பஞ்சதிரவியங்களும் அபிஷேகம் செய்யப்பெற்ற, சென்னி மேல்-சிரசின்

மீது, ஓர் - ஒற்றைக்கலையாகிய, அம்புலி - சந்திரனை, சூடும்-தரித்த, அரன் - சிவபிரான், தேனை - தேன்போல்பவனை, பாலை-பால்போல்பவனை, தில்லை மல்கு - தில்லையிற் பொருந்திய, செம்பொனின் அம்பலத்து கோனை - செம்பொனம்பலத்திறைவனை, ஞானக்கொழுந்துதன்னை - ஞானக்கொழுந்தை, கூடுவது-நான்சேர்வது, என்றுகொலோ - என்நாளோ, எ - று.

வி-ரை. மானை என்றது மானினது நோக்கத்தை. ஆனஞ்சு - பஞ்சகவ்யங்கள்; அவை: பால், தயிர், நெய், கோமயம், கோமூத்ரம் என்பன. (சு)

களிவானுலகிற்கங்கைநங்கைகாதலனேயருளென்
றொளிமான்முன்னேவரங்கிடக்கவுன்னடியார்க்கருளுந்
தெளிவாரமுதேதில்லைமல்குசெம்பொனினம்பலத்து
ளொளிவான்சுடரேயுன்னைநாயேனுறுவதுமென்றுகொலோ.

ப-ரை. களி - களித்தற்குரிய, வான் உலகில் - விண்ணுலகத்திலுண்டாகிய, கங்கை - கங்கையாகிய, நங்கை - மாதுக்கு, காதலனே - நாயகனே, அருள் என்று - அருள்வாயென்று, ஒளி - ஒளியையுடைய, மால் - திருமால், முன்னே - முற்காலத்திலே, வரம் கிடக்க - வரம்வேண்டிக்கிடக்க, உன் அடியார்க்கு அருளும் - உன் தொண்டருக்கருள்செய்கிற, தெளிவு ஆர் அமுதே - தெளிவுபொருந்திய அமிர்தமே, தில்லை மல்கு-தில்லையிற் பொருந்திய, செம்பொனின் அம்பலத்துள் - செம்பொனம்பலத்திலுள்ள, ஒளி - ஒளியையுடைய, வான்சுடரே-மேலாகியவிளக்கே, உன்னை-நின்னை, நாயேன்-நாயினேன், உறுவதும்- அடைவதும், என்றுகொலோ - என்நாளோ, எ-று.

வி-ரை. வானுலகிற்கங்கை - ஆகாயகங்கை. காதலன் - அன்புள்ளவன். (எ)

பாரார்முழுதும்வந்திறைஞ்சப்பதஞ்சலிக்காட்டுகந்தான்
வாரார்முலையாண்மங்கைபங்கன்மாமறையோர்வணங்கச்
சீரான்மல்குதில்லைச்செம்பொனம்பலத்தாடுகின்ற
காரார்மிடற்றெங்கண்டனைக்காண்பதுமென்றுகொலோ.

ப-ரை. பாரார் முழுதும் - உலகத்தாரெல்லாரும், வந்து இறைஞ்ச-வந்துவணங்க, பதஞ்சலிக்கு - பதஞ்சலியின்பொருட்டு, ஆட்டு உகந்தான்-நடனஞ்செய்தலை விரும்பினான், வார் ஆர் முலையாள் - கச்சணிந்த தனங்களையுடையாளாகிய, மங்கை-உமாதேவியை, பங்கன்-ஒருபாகத்திலுடையவன், மாமறையோர் வணங்க-பெருமை பொருந்

திய வேதியர் வணங்க, சீரால் மல்கு-சிறப்புடனே விளங்குகிற, தில்லை - தில்லையிலுள்ள, செம்பொன் அம்பலத்து ஆடுகின்ற—, கார் ஆர் மிடற்று எம் கண்டனாரை-கருநிறம்பொருந்திய எமதுகண்டரை, காண்பதும்-காணப்பெறுவதும், என்றுகொலோ-எந்நாளோ, எ-று.

வி-ரை. ஆட்டு - தொழிற்பெயர் (நடனம்). கண்டனார் - தலைவர்; கண்டு அனார் எனப் பிரித்து கற்கண்டுபோன்றவர் என்றுரைத்தலுமாம். (சு)

இலையார்கதிர்வேலிலங்கைவேந்தனிருபதுதோளுமிற
மலைதானெடுத்தமற்றவற்குவாளொடுநாள்கொடுத்தான்
சிலையாற்புரமூன்றெய்தவில்லிசெம்பொனினம்பலத்துக்
கலையார்மறிபொற்கையினானைக்காண்பதுமென்றுகொலோ.

ப-ரை. இலை ஆர் - இலைவடிவமைந்த, கதிர் வேல் - ஒளியையுடைய வேற்படையையுடைய, இலங்கை வேந்தன்-இலங்கைக்கரசனாகிய ராவணனது, இருபது தோளும் இற - இருபது புயங்களும் நெரியும்படி, மலை எடுத்த - மலையைத்தூக்கின, அவற்கு-அவனுக்கு, வாளொடு - வாளாயுதத்தோடு, நாள் கொடுத்தான் - ஆயுளும்கொடுத்தான், சிலையால்-மேருமலையால், புரம் மூன்று-முப்புரங்களை, எய்த வில்லி - எய்தவில்லி, செம்பொனின் அம்பலத்து-செம்பொன்னம்பலத்திலுள்ள, கலை ஆர் மறி - மான்கன்றை, பொன் கையினானை - பொன்போலுந் திருக்கரத்திலுடையவனை, காண்பதும்-காணப்பெறுவதும், என்றுகொலோ - எந்நாளோ, எ - று.

வி-ரை. வில்லி - வில்லையுடையவன். பொற்கை - அழகிய கைஎனினுமாம். (எ)

வெங்கோல்வேந்தன்றென்னாடுமீழமுங்கொண்டதிறற்
செங்கோற்சோழன்கோழிவேந்தன்செம்பியன்பொன்னணிந்த
வங்கோல்வளையார்பாடியாடுமணிதில்லையம்பலத்து
ளெங்கோனீசனெம்மிறையையென்றுகொலெய்துவதே.

ப-ரை. வெங்கோல் வேந்தன் - கொடுங்கோலரசனாகிய, தென்னன் நாடும் - பாண்டியனது நாட்டையும், ஈழமும்-ஈழநாட்டையும், கொண்ட - கைகொண்ட, திறல் - வெற்றியையுடைய, செங்கோல் சோழன் - செங்கோலேந்திய சோழன், கோழிவேந்தன்—, செம்பியன்—, பொன் அணிந்த - பொன்னினால் அலங்கரித்துச் செய்யப்பட்ட, அம் கோல் வளையார்-அழகும் வளைவுமுள்ள வளையலையணிந்த வர்களாகிய மாதர், பாடி ஆடும் - பாடியாடுகின்ற, அணி தில்லையம்பலத்துள் - அழகிய தில்லையம்பலத்திலெழுந்தருளிய, எம் கோன் - எம்பிறைவன், ஈசன் —, எம் இறையை—, எய்துவது - அடையப்பெறுவது, என்றுகொல் - எந்நாளோ, எ - று.

வி-ரை. கோல்வளை யென்பதற்கு வளைவாகச் செய்யப்பட்ட வளையல், புள்ளிகளையுடைய வளையல், அழகாகிய வளையல் என மூவகையாகப் பொருளுரைக்கலாம். அழகெனப்பொருள் கொள்ளுங்கால் கோலம் அம்முக்குறைந்து கோல் என வந்ததாகக் கொள்க. கோழி - உறையூர். (அ)

நெடியானோடுநான்முகனும்வானவருநெருங்கி
முடியான்முடிகண்மோதியுக்கமுழுமணியின்றிரளை
யடியாரலகினாற்றிரட்டுமணிதில்லையம்பலத்துக்
கடியார்கொன்றைமாலையானைக்காண்பதுமென்றுகொலோ.

ப-ரை. நெடியானோடு நான்முகனும்-திருமாலோடு பிரமனும், வானவரும் - மற்றைத் தேவர்களும், நெருங்கி-நெருக்கமாய் நின்று, முடியால் முடிகள் மோதி - முடிகளோடு முடிகள் தாக்கி, உக்க - உதிர்ந்த, முழுமணியின் திரளை-முழுமணிகளின் கூட்டத்தை, அடியார் - தொண்டர், அலகினால் திரட்டும்-அலகைக்கொண்டு திரட்டுகிற, அணி தில்லையம்பலத்து—, கடிஆர்-மணம்பொருந்திய, கொன்றை மாலையானை - கொன்றைமலர்மாலையை யுடையவனை, காண்பதும் - காணப்பெறுவதும், என்றுகொலோ—, எ - று.

வி-ரை. அலகு - துடைப்பம். கடி - விளக்கம் எனினுமாம். கொன்றை-ஆகுபெயர். உக்க என்பதற்குப் பகுதி உகு. நெடியான் - திரிவிக்கிரமன். (கூ)

சீரான்மல்குதில்லைச்செம்பொனம்பலத்தாடிதன்னைக்
காரார்சோலைக்கோழிவேந்தன்றஞ்சையர்கோன்கலந்த
வாராவின்சொற்கண்டராதித்தனருந்தமிழ்மாலைவல்லார்
பேராவுலகிற்பெருமையோடும்பேரின்பமெய்துவரே.

ப-ரை. சீரால் மல்கு - சிறப்பினால் நிறைந்த, தில்லைச் செம்பொன் அம்பலத்து—, ஆடிதன்னை - திருநடனஞ் செய்பவனை, கார் ஆர் சோலை-மேகங்கள் தவழ்கின்ற சோலைகள் சூழ்ந்த, கோழிவேந்தன் - கோழிக்கரசன், தஞ்சையர்கோன் - தஞ்சைநகரத்தார்க் கிறைவன், கலந்த - கூடின, ஆரா - தெவிட்டாத, இன்சொல் - இனியசொற்களால், கண்டராதித்தன் - கண்டராதித்தன் செய்த, அரு - அருமையாகிய, தமிழ்மாலை வல்லார் - தமிழ்ச்சொன்மாலையைக் கற்று வல்லவர், பேரா உலகில் - நிலைபெயராத முத்தியுலகத்தில், பெருமையோடும் - பெருமையுடனே, பேரின்பம் எய்துவர் - பேரின்பத்தையும் அடைவர், எ - று.

வி-ரை. எக்காலத்தும் அழியாமையால் முத்தியுலகை 'பேராவுலகு' என்றார். (கய)

திருச்சிற்றம்பலம்.

# வேணாட்டடிகள் திருவிசைப்பா.

## கோயில்.

### பண்-புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

துச்சானசெய்திடினும்பொறுப்பரன்றேயாளுகப்பார்
கைச்சாலுஞ்சிறுகதலியிலைவேம்புங்கறிகொள்வா
ரெச்சார்வுமில்லாமைநீயறிந்துமெனதுபணி
நச்சாய்காண்டிருத்தில்லைநடம்பயிலுநம்பானே.

ப-ரை. திருத்தில்லை நடம் பயிலும் நம்பானே - திருத்தில்லையில் திருநிருத்தஞ் செய்கின்ற இறைவனே, துச்சான - இழிவான காரியங்களை, செய்திடினும் - செய்தாலும், ஆள் உகப்பார் - அடிமை கொள்பவர், பொறுப்பர் அன்றே - பொறுப்பரல்லவா; கைச்சாலும் - கசந்தாலும், சிறு கதலியிலை வேம்பும் - சிறிய கதலியிலையையும் வேப்பிலையையும், கறி கொள்வார் - கறியாகக் கொள்வார்கள்; எச்சார்வும் இல்லாமை - எந்தச் சார்புமில்லாதிருப்பதை, நீ அறிந்தும் - நீயறிந்திருந்தும், எனது பணி - எனது தொண்டினை, நச்சாய் - விரும்பாதிருக்கிறாய் (இதென்ன காரணத்தாலேயோ), எ-று.

வி-ரை. நம்பன் நம்பான் என நீண்டது. துச்சமான என்பது துச்சான என ஈறு குறைந்து வந்தது. துச்சம்-இழிவு. கைத்தாலும் என்பது கைச்சாலும் எனத் தகரத்துக்குச் சகரம் போலியாயிற்று. கைத்தல்-கசத்தல். (க)

தம்பானைசாய்ப்பற்றாரென்னுமுதுசொல்லு
மெம்போல்வார்க்கில்லாமையென்னளவேயறிந்தொழிந்தே
வம்பானார்பணியுகத்திவழியடியேன்றொழிலிறையு [ன்
நம்பாய்காண்டிருத்தில்லைநடம்பயிலுநம்பானே.

ப-ரை. திருத்தில்லை நடம் பயிலும் நம்பானே—, தம்பானை சாய்ப்பு அற்றார் என்னும் - தம்பானை சாய்ப்பு அற்றாரென்கிற, முது சொல்லும் - பழமொழியும், எம்போல்வார்க்கு இல்லாமை - எம்போலியர்க் கில்லாதிருப்பதை, என்னளவே - என்மட்டிலே, அறிந்தொழிந்தேன் - அறிந்துகொண்டேன்; வம்பு ஆனார் - புதியராயினாது, பணி உகத்தி - தொண்டினை விரும்புகின்றனை, வழி அடியேன் தொழில் - வழியடியேனது தொண்டினை, இறையும் - அற்பமும், நம்பாய் - நம்பமாட்டாய், எ - று. (உ)

பொசியாதோகீழ்க்கொம்புநிறைகுளமென்றதுபோலத்
திசைநோக்கிப்பேழ்கணித்துச்சிவபெருமானேயெனினு
மிசையானாலென்றிறத்துமென்னையுடையாளுரையாடா
ணசையானேன்றிருத்தில்லைநடம்பயிலுநம்பானே.

ப-ரை. திருத்தில்லை நடம் பயிலும் நம்பானே—, கீழ்க்கொம்பு நிறை குளம்—, பொசியாதோ என்றதுபோல—, திசை நோக்கி - திக்கு நோக்கி, பேழ்கணித்து - வாயைத்திறந்து, சிவபெருமான் - சிவபெருமானே, ஓ எனினும் - ஓவென்றரற்றினாலும், இசையான் - (என் முறைப்பாட்டிச்கு) இசையமாட்டான்; என் திறத்தும் - என்னிடத்தும், என்னை உடையாள்-என்னை யுடையவளாகிய பிராட்டியும், உரை யாடாள் - வார்த்தை சொல்லாள், நசையானேன்-(வார்த்தையைக் கேட்க) ஆசைப்பட்டேன், எ - று. (ரு)

ஆயாதசமயங்களவரவர்கண்முன்பென்னை
நோயோடுபிணிநலியவிருக்கின்றவதனாலே
பேயாவித்தொழும்பனைத்தம்பிரானிகழுமென்பித்தாய்
நாயேனைத்திருத்தில்லைநடம்பயிலுநம்பானே.

ப-ரை. திருத்தில்லை நடம் பயிலும் நம்பானே—, ஆயாத - ஆராயாத, சமயங்கள் - சமயங்களையுடைய, அவரவர்கள் முன்பு - அவரவர்களுக்கெதிரில், என்னை-அடியேனை, நோயோடு பிணிநலிய- நோயுடனே பிணிகளும் வருத்த, இருக்கின்ற அதனாலே - இருப்பதனாலே, பேயாவித்தொழும்பனை—, நாயேனை—, தம்பிரான் இகழும் என் பித்தாய்—, எ - று. (சு)

நின்றுநினைந்திருந்துகிடந்தெழுந்துதொழுந்தொழும்பனே
னொன்றியொருகானினையாதிருந்தாலுமிருக்கவொட்டாய்
கன்றுபிரிகற்றுப்போற்கதறுவித்திவரவுநில்லாய்
நன்றிதுவோதிருத்தில்லைநடம்பயிலுநம்பானே.

ப-ரை. திருத்தில்லை நடம் பயிலும் நம்பானே—,நின்று—,நினைந்து—, இருந்து—, கிடந்து—, எழுந்து—, தொழும்-வணங்குகிற, தொழும்பனேன் - தொண்டனேன், ஒன்றி ஒருகால்-ஒரோவொருகாலத்தில், நினையாதிருந்தாலும் - நினையாதிருக்கலாமென்றாலும், இருக்கவொட்டாய்—, கன்றுபிரி - கன்றைப்பிரிந்த, கற்றுபோல்- கற்றுவைப்போல, கதறுவித்தி - கதறுவிக்கிறாய், வரவு நில்லாய் - வந்து எதிர் நிற்கவுமாட்டாய், நன்று இதுவோ - (உனக்கு) நன்மை இதுதானோ, எ-று.

வி-ரை. கற்று - கன்றையுடைய பசு. (எ)

படுமதமுமிடவயிறுமுடையகளிறுடையபிரா
னடியறியவுணர்த்துவதுமகத்தியனுக்கோத்தன்றே
யிடுவதுபுல்லோரெருதுக்கொன்றினுக்குவையிடுத
னடுவிதுவோ திருத்தில்லைநடம்பயிலுநம்பானே.

ப-ரை. திருத்தில்லை நடம் பயிலும் நம்பானே—, படுமதமும் - உண்டாகியமதத்தையும், மிடவயிறும்-மிடாப்போலும் வயிற்றையும், உடைய - உடைத்தாயிருக்கிற, களிறு உடைய - யானை முகவனை யுடைய,பிரான்-பெருமான்,அகத்தியனுக்கு-அகத்தியமுனிவனுக்கு, அடி அறிய உணர்த்துவதும் - மூலத்தை யறியும்படி அறிவித்ததும், ஒத்து அன்றே - வேதமன்றோ, ஓர் எருதுக்கு இடுவது புல் - ஒரு எருதுக்கு இடுவது புல்லாகும்; ஒன்றினுக்கு இடுதல் வை-ஒரு எருதுக்கு இடுவது வைக்கோலாகும்; நடு இதுவோ-(உன்னிடத்துள்ள) நடுவுநிலைமை யிதுதானோ, எ-று.

வி-ரை. மிடா மிட எனக் குறுகிற்று. இட வயிறு எனப் பிரித்து இடத்தையுடைய வயிறு என்றுரைப்பினுமாம். (௬)

மண்ணோடுவிண்ணளவுமனிதரொடுவானவர்க்குங்
கண்ணாவாய்கண்ணாகாதொழிதலுநான்மிகக்கலங்கி
யண்ணாவோவென்றண்ணாந்தலமந்துவிளித்தாலு
நண்ணாயாற்றிருத்தில்லைநடம்பயிலுநம்பானே.

ப-ரை. திருத்தில்லை நடம் பயிலும் நம்பானே—, மண்ணோடு - மண்ணுடனே, விண் அளவும் - விண்மட்டும் உள்ள, மனிதரொடு வானவர்க்கும்-மனிதரோடு தேவர்களுக்கும், கண் ஆவாய்-கண்ணாகி னாய்; கண் ஆகாது ஒழிதலும்-(எனக்குமாத்திரம்) கண்ணாகாதொழிதலும், நான் மிக கலங்கி - நான் மிகவுங் கலக்கமடைந்து, அண்ணாவோ என்று—, அண்ணாந்து—, அலமந்து விளித்தாலும் - அலமந்து அழைத்தாலும், நண்ணாய் - எழுந்தருளாய், எ-று.

வி-ரை. மண்ணோடு விண்ணளவும் என்பதற்கு மண்ணிலும் விண்ணிலும் சஞ்சரிக்கிற எனினுமாம். அளவுதல் - சஞ்சரித்தல். கண் - ஆதரவு. அலமந்து - சுழன்று; அலமா பகுதி. விளித்தல் - அழைத்தல். (௭)

வாடாவாய்நாப்பிதற்றியுனைநினைந்துநெஞ்சுருகி
விடாஞ்செய்குற்றேவலெற்றேமற்றிதுபொய்யிற்
கூடாமேகைவந்துகுறுகுமாறியானுன்னை
நாடாயாற்றிருத்தில்லைநடம்பயிலுநம்பானே.

ப-ரை. திருத்தில்லை நடம் பயிலும் நம்பானே—, வாய் வாடா-வாய்புலர்ந்து, நா பிதற்றி - நாக்குழறி, உன்னை நினைந்து—, நெஞ்சு உருகி - மனமுருகி, வீடு ஆம் செய் குற்றேவல் எற்றே - வீடுபேற்றுக்குரியதாய்ச் செய்தற்குரிய குற்றேவல் எத்தன்மைத்தோ; இது பொய்யில் கூடாமே-இதுபொய்யோடு கலவாமல், கைவந்து-கைகூடி, யான் உன்னை குறுகுமாறு - நானுன்னைக் கிட்டும்வண்ணம், நாடாய்-நீ திருவுளம்பற்றுதிருக்கிறாய், எ-று.

வி-ரை. வாடா-செய்தென்வாய்பாட் டிறந்தகாலவினையெச்சம். வீடு - முத்தி. கைவந்து என்பதற்குப் பகுதி கைவா. (அ)

வாளாமாலயன்வீழ்ந்துகாண்பரியமாண்பிதனைத்
தோளாரக்கையாரத்துணையாரத்தொழுதாலு
மாளோநீயுடையதுவுமடியேனுன்றாள்சேரு
நாளேதோதிருத்தில்லைநடம்பயிலுநம்பானே.

ப-ரை. திருத்தில்லை நடம் பயிலும் நம்பானே—, வாளா - சும்மா, மால் அயன் வீழ்ந்து - திருமாலும் பிரமனும் விரும்பி, காண்பு அரிய-காண்டலருமையாகிய, மாண்பு இதனை - பெருமையுள்ள இதனை, தோளார—, கையார—, துணையார—, தொழுதாலும்-வணங்கினாலும், நீ உடையதுவும் ஆளோ - நீயுடையதுவும் அடிமையோ, அடியேன்—, உன் தாள் சேரும் நாள் - உன் திருவடியையடைகின்ற நாள், ஏதோ - எதுவோ, எ - று.

வி-ரை. வீழ்தல் - விரும்புதல். காண்பு - காண்டல், தொழிற்பெயர். (க)

பாவார்ந்ததமிழ்மாலைபத்தரடித்தொண்டனெடுத்
தோவாதேயழைக்கின்றானென்றருளிநன்றுமிகத்
தேவேதென்திருத்தில்லைக்கூத்தாடீநாயடியேன்
சாவாயுநினைக்காண்டலினியுனக்குத்தடுப்பரிதே.

ப-ரை. பா ஆர்ந்த - பாவுருவாகப் பொருந்திய, தமிழ் மாலை - தமிழ் மாலை, பத்தர் அடித்தொண்டன் - பத்தரடித் தொண்டுசெய்வோன், எடுத்து - எடுத்து, ஓவாதே அழைக்கின்றான் என்று - இடையறாமல் அழைக்கிறானென்று, அருளின் - அருள்செய்தால், மிக நன்று - மிகவும் நன்மையாகும்; தேவே - தேவனே, தென் திருத்தில்லை கூத்தாடீ—, நாயடியேன்—, சாவாயும் - செத்தாலும், நினைகாண்டல் - உன்னைக் காண்பதை, இனி - இனி, உனக்கு தடுப்பு அரிது - உனக்குத் தடுத்தல் அரிதாகும், எ - று.

வி-ரை. பா-பாடல். ஓவாதே யென்பதற்குப் பகுதி ஓ. தேவு-பண்பாகுபெயர். கூத்தாடி - வினையாலணையும்பெயர். (க0)

திருச்சிற்றம்பலம்.

# திருவாலியமுதனார் திருவிசைப்பா.

## க. கோயில் - பாதாதிகேசம்.

### பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மையன்மாதொருகூறன்மால்விடை
யேறிமான்மறியேந்தியதடங்
கையன்கார்புரையுங்கறைக்
கண்டன்கனன்மழுவா
னையனாரழலாடுவானணி
நீர்வயற்றில்லையம்பலத்தான்
செய்யபாதம்வந்தென்
சிந்தையுள்ளிடங்கொண்டனவே.

ப-ரை. மையல் - தன்னிடத்தில் விருப்பமுள்ள, மாது - உமாதேவியை, ஒரு கூறன் - ஒரு பாகத்திலுடையவன், மால்விடை ஏறி - பெரிய இடபமேறுவோன், மான் மறி ஏந்திய தடம் கையன்- மான்கன்றை யேந்திய பெரிய கையையுடையவன், கார்புரையும் - கரிய மேகத்தை நிகர்த்த, கறை கண்டன் - விஷ கண்டத்தை யுடையவன், கனல் மழுவான் - நெருப்புருவாகிய மழுவை யுடையவன், ஐயன் - எல்லார்க்கும் இறைவன், ஆர் அழலாடுவோன் - நிறைந்த நெருப்புடனாடுவோன், அணி - அழகாகிய, நீர் - நீர் நிறைந்த, வயல் - வயல்கள் சூழ்ந்த, தில்லையம்பலத்தான் - தில்லையம்பலத்தை யுடையவன், (அவனுடைய) செய்ய - செவந்த, பாதம் - திருவடிகள், வந்து—, என் - எனது, சிந்தை உள் - என் மனத்தினுள்ளே, இடம் கொண்டன - இடங்கொண்டிருந்தன, எ - று.

வி-ரை. மையல் - மோகம் எனினுமாம். ஒருகூறு என்றது இடப்பாகத்தை. விடையேறி - வினையாலணையும்பெயர். கனல் - சுடுகின்ற எனினுமாம். ஐ - அழகாதலால், ஐயன் என்பதற்கு அழகன் என்றலும் பொருந்தும். (க)

சலம்பொற்றாமரை தாழ்ந்தெழுந்த
தடமுந்தடம்புனல்வாய்மலர்தழீஇ
யலம்பிவண்டறையுமணி
யார்தில்லையம்பலவன்
புலம்பிவானவர்தானவர்புகழ்ந்
தேத்தவாடுபொற்கூத்தனார்கழற்
சிலம்புகிங்கிணியென்
சிந்தையுள்ளிடங்கொண்டனவே.

ப-ரை. சலம் - நீரும், பொன் தாமரை - அழகிய தாமரையும், தாழ்ந்து எழுந்த - தங்கி விளங்குகிற, தடமும் - தடாகங்களும், தடம் புனல்வாய் - மிக்க நீரிலுள்ள, மலர் தழீஇ அலம்பி - மலர்களிற் பொருந்திக் கிண்டி, வண்டு அறையும் - வண்டுகள் சத்திக்கிற, அணி ஆர் - அழகு நிறைந்த, தில்லை - தில்லைநகரிலுள்ள, அம்பலவன் - பொற்சபையை யுடையவன், வானவர் தானவர் - தேவரும் அசுரரும், புலம்பி புகழ்ந்து எத்த - புலம்பிப் புகழ்ந்து துதிக்க, ஆடு - ஆடுகின்ற, பொற்கூத்தனார் - அழகிய கூத்தையுடையவர், (அவரது) கழல்-திருவடியிலணிந்த, சிலம்பு கிங்கிணி - ஒலிக்கின்ற கிங்கிணிகள், என் சிந்தை உள் இடம் கொண்டன—, எ - று.

வி-ரை. தாழ்தல் - ஆழ்தல் எனினுமாம். பொற்கூத்தனார் என்பதில் பொன் அழகு; பொற்கூத்தனார் என்பதற்குப் பொன்போலுங் கூத்தையுடையவர் என்றலுமமையும்; "தில்லைச் சிற்றம்பலத்து மாணிக்கக்கூத்தன்" என்றார் மணிவாசகரும். (உ)

குருண்டவார்குழற்கோதைமார்குயில்
போன்மிழற்றியகோலமாளிகை
திரண்டதில்லைதன்னுட்
டிருமல்குசிற்றம்பலவன்
மருண்டுமாமலையான்மகளொடு
வாடுங்கூத்தன்மணிபுரைதரு
திரண்டவான்குறங்கென்
சிந்தையுள்ளிடங்கொண்டனவே.

ப-ரை. குருண்ட - சுருண்ட, வார் - நீண்ட, குழல் - கூந்தலையுடைய, கோதைமார் - மாதர், குயில்போல் மிழற்றிய - குயிற்குரல்போலக் கொஞ்சிப்பேசுகிற, கோலமாளிகை திரண்ட-அழகிய மாளிகைகள் கூடியிருக்கிற, தில்லை தன்னுள் - தில்லை நகரத்தில், திரு மல்கு-அழகுநிறைந்த, சிற்றம்பலவன் - சிற்றம்பலத்தையுடையவன், மருண்டு - மயங்கி, மா - பெருமை பொருந்திய, மலையான்

மகள் தொழ - பார்வதீ தேவியானவள் வணங்க, ஆடும் - ஆடுகிற, கூத்தன்-கூத்தையுடையவன், (அவனது) மணிபுரைதரு - மாணிக்கம்போன்ற, திரண்ட - திரண்டிருக்கிற, வான் குறங்கு - மேன்மையாகிய தொடைகள், என் சிந்தை உள்ளிடம் கொண்டன—, எ-று.

வி-ரை. குருண்ட என்பதற்குப் பகுதி குருள். மிழற்றல் - கொஞ்சிப்பேசுதல். திரு - செல்வம் எனினுமாம். மருண்டு என்பதற்கு இறைவனது திருக்கூத்தைக்கண்டு பிரமித்து என்றுரைத்தலுமாம், மலையரன் - மலையரையன். புரைதல் - நிகர்த்தல். (௩)

போழ்ந்தியானை தன்னைப்பொருப்பன்
மகளுமையச்சங்கண்டவன்
றாழ்ந்ததண்புனல்சூழ்
தடமல்குசிற்றம்பலவன்
சூழ்ந்தபாய்புலித்தோன்மிசைத்தொடுத்து
வீக்கும்பொன்னூறன்னினொடு
தாழ்ந்தகச்சதன்றே
தமியேனைத்தளர்வித்ததே.

ப-ரை. யானைதன்னை-யானையை, போழ்ந்து-பிளந்து, பொருப்பன் - மலையரையனது, மகள் - மகளாகிய, உமை-உமாதேவியின், அச்சம் கண்டவன்-அச்சத்தைப்பார்த்தவன், தாழ்ந்த—, தண்-குளிர்ச்சி பொருந்திய, புனல் சூழ் - நீர்சூழ்ந்த, தடம் மல்கு - தடாகங்கள் நிறைந்த, சிற்றம்பலவன்-தில்லைச்சிற்றம்பலத்தையுடையவன், சூழ்ந்த - வளைந்த, பாய்-பாய்கின்ற, புலித்தோல்-புலித்தோலை, மிசை - மேலே, தொடுத்து வீக்கும்-தொடுத்துக்கட்டுகிற, பொன் நூல்தன்னொடு - பொன்னூலுடனே, தாழ்ந்த - தங்கிய, கச்சது அன்றே - கச்சையல்லவா, தமியேனை - தனியேனாகிய என்னை, தளர்வித்தது- தளரச்செய்தது, எ - று.

வி-ரை. கொலைத்தொழிலைக் கண்டால் மாதர்க்கு அச்சமுண்டாதல் இயற்கையாதலால், 'போழ்ந்தியானை தன்னைப்பொருப்பன் மகளுமையச்சங் கண்டவன்' என்றார். வீக்குதல் - கட்டுதல். பொன்னூல் - உபவீதம். (௪)

பந்தபாசமெலாமறப்பசு
பாசநீக்கியமுனிவரோ
டந்தணர்வணங்கு
மணியார்தில்லையம்பலவன்

செந்தழல்புரைமேனியுந்திக
ழுந்திருவயிறும்வயிற்றினு
ளுந்திவான்சுழியென்னுள்ளத்
துள்ளிடங்கொண்டனவே.

ப-ரை. பந்தபாசம் எல்லாம் அற - பந்தபாசங்கள் முழுதும் அற்றொழிய, பசுபாசம் நீக்கி - பசுபாசங்களை யொழித்து, அயன் முனிவரோடு - பிரமன் முனிவர்களோடு, அந்தணர் வணங்கும் - வேதியர் வணங்குகின்ற, அணி ஆர் - அழகுநிறைந்த, தில்லையம்பலவன் - தில்லையம்பலத்தையுடையவன், செந்தழல்புரை மேனியும் - செவந்த நெருப்புப்போலுந் திருமேனியும், திகழும் திருவயிறும் - விளங்குகின்ற திருவயிறும், வயிற்றினுள்-வயிற்றினுள்ளே, உந்தி-திருவுந்தியிலுள்ள, வான்சுழி-மேலாகிய சுழியும், என்-எனது, உள்ளத்துள் - மனத்தினுள்ளே, இடங்கொண்டன-இடங்கொண்டிருந்தன, எ-று.

வி-ரை. பந்தபாசம் - பிறவிக்கட்டு. அந்தணர் - தில்லை மூவாயிரவர். பசுபாச நீக்கிய பன்முனிவரோடு எனக் கொண்டு பசுநேசத்தை யொழித்த பல முனிவரோடு என்றுரைத்தலும் பொருந்தும். பன் முனிவராவார் பதஞ்சலி வியாக்கிரபாதர் முதலாயினோர். சுழியென்பதனீற்றில் எண்ணும்மை தொக்கது. (௫)

குதிரைமாவொடுதேர்பலகுவிந்
தீண்டுதில்லையுட்கொம்பனாரொடு
மதுரவாய்மொழியார்
மகிழ்ந்தேத்துசிற்றம்பலவ
னதிரவார்கழல்வீசிநின்றழ
காநடம்பயில்கூத்தன்மேற்
றிகழுதரபந்தனமென்
னுள்ளத்துள்ளிடங்கொண்டனவே.

ப-ரை. குதிரை மாவொடு - குதிரையானைகளோடு, தேர் பல - பலதேர்களும், குவிந்து ஈண்டு-கூடிநெருங்கின, தில்லையுள்-தில்லை நகரில், கொம்பனாரொடு-பூங்கொம்புபோல்வாராகிய மாதருடனே, மதுரம் - இனிமையுள்ள, வாய்மொழியார் - வாய்ச்சொல்லையுடையவர், மகிழ்ந்து ஏத்து - மகிழ்ந்து வணங்குகிற, சிற்றம்பலவன் - சிற்றம்பலத்தையுடையவன், அதிர - முழங்க, வார் - நீண்ட, கழல் - திருவடியை, வீசி நின்று - வீசிநின்று, அழகு ஆர் - அழகாகிய, நடம் பயில் - நடனம்செய்கிற, கூத்தன் - கூத்தன், (அவனது) மேல் - திருமேனியின்மேல், திகழ் - விளங்குகிற, உதரபந்தனம் - உதரபந்தனமானது, என்-எனது, உள்ளத்துள் இடங்கொண்டன—, எ-று.

வி-ரை. மதுரவாய்மொழியார் - இன் சொற்களால் கவிமாலை சூட்டுவோராகிய அன்பர். அழகா நடம்பயில் என்பதற்கு அழகாக நடனஞ்செய்கிற என்றுரைத்தலுமாம். உதரபந்தனம்-ஆடவர் அரைப் பட்டிகை. (௬)

படங்கொள்பாம்பணையானொடுபிர
மன்பரம்பரமாவருளென்று
தடங்கையாற்றொழவுந்
தழலாடுசிற்றம்பலவன்
றடங்கைநான்குமத்தோள்களுந்தட
மார்பினிற்பூண்கண்மேற்றிசை
விடங்கொள்கண்டமன்றே
வினையேனைமெலிவித்ததே.

ப-ரை. படம்கொள்-படத்தையுடைய, பாம்பு-பாம்பை, அணையானொடு - அணையாகக்கொண்டவனாகிய திருமாலுடனே, பிரமன் - பிரமனும், பரம்பரமா - மிகவுமுயர்ந்தவனே, அருள் என்று - அருள் செய்யக்கடவையென்று, தடம் கையால் தொழவும்-பெரியகைகளால் வணங்கவும், தழல் ஆடி - அழலோடாடுகின்ற, சிற்றம்பலவன்---, தடம் கை நான்கும்-பெரியதிருக்கரங்கள் நான்கும், அ தோள்களும்-அந்தத்தோள்களும், தடம் மார்பினில் - விசாலமாகிய திருமார்பில், பூண்கள்மேல்திசை - ஆபாரணங்களின் மேற்பக்கத்திலுள்ள. விடம் கொள்-விஷத்தையுடைய, கண்டம் அன்றே-கண்டமல்லவா, வினையேனை - தீவினையையுடைய என்னை, மெலிவித்தது - மெலியச்செய்தது, எ - று.

அத்தோள்களும்-அந்தத் தொகையைக்கொண்ட தோள்களும் (நான்குதோள்களும்). கண்டம் - திருமிடறு. மெலிவித்தது என மேல்வருதலால் வினை தீவினையை யுணர்த்திற்று. (எ)

செய்யகோடுடன்கமலமலர்சூழ்தரு
தில்லைமாமறையோர்கடாந்தொழ
வையமுய்யநின்று
மகிழ்ந்தாடுசிற்றம்பலவன்
செய்யவாயின்முறுவலுந்திகழுந்
திருக்காதுங்காதினின்மாத்திரைகளோ
டையதோடுமன்றே
யடியேனையாட்கொண்டனவே.

ப-ரை. செய்ய கோடுடன்-செவ்விய சங்குகளோடு, கமலமலர்-தாமரைமலர்கள், சூழ்தரு - சூழ்ந்திருக்கிற, தில்லை - தில்லைநகரத்தில், மா - பெருமைபொருந்திய, மறையோர்கள் - வேதியர்கள், தொழ - வணங்கவும், வையம் உய்ய - உலகம் பிழைக்கவும், நின்று-நிலைபெற்று, மகிழ்ந்து ஆடு-மகிழ்ந்தாடுகிற, சிற்றம்பலவன் - சிற்றம்பலத்தையுடையவனது, செய்ய வாயில் முறுவலும்-செவ்வாயினிடத்துண்டாகிய புன்னகையும், திகழும் திருக்காதும் - விளங்குகின்ற திருச்செவிகளும், காதினில் - செவிகளிலணியப்பட்டிருக்கிற, மாத்திரைகளோடு - மாத்திரைகளுடன், ஐய-அழகிய, தோடும் அன்றே-குழைகளுமல்லவா, அடியேனை ஆட்கொண்டன - அடியேனைத் தொண்டுகொண்டன, எ-று.

வி-ரை. மாத்திரை - காதணிகளிலொன்று. கோடு - சங்கு. செய்யவாயின் முறுவலும் என்பதற்குச் செவ்வாயினிடத் துண்டான இனிதாகிய புன்னகை யெனினுமமையும். (அ)

செற்றுவன்புரந்தீயெழச்சிலை
கோலியாரழலூட்டினனவ
னெற்றிமாமணிக
ளெறிநீர்த்தில்லையம்பலவன்
மற்றைநாட்டமிரண்டொடு
மலருந்திருமுகமுமுகத்தினு
ணெற்றிநாட்டமன்றே
நெஞ்சுளே திளேக்கின்றனவே.

ப-ரை. வன்புரம்-வலியமுப்புரங்களும், தீ எழ செற்று-தீயெழ அழிக்கும்பொருட்டு, சிலை கோலி - (மேருவாகிய) வில்லை வளைத்து, ஆர் - தணித்தற்கரிய, அழல் ஊட்டினன் - நெருப்புக்கிரையாக்கினவன், அவன்—, மாமணிகள்-பெருமைபொருந்திய மணிகளை, எற்றி எறி - எடுத்தெறிகிற, நீர் - நீர்சூழ்ந்த, தில்லையம்பலவன்—, மற்றை நாட்டம் இரண்டொடு - மற்றைக்கண்களிரண்டுடனே, மலரும் திருமுகமும் - மலர்ந்த திருமுகமும், முகத்தினுள்-அந்தமுகத்தில், நெற்றி நாட்டம் அன்றே - நெற்றிக்கண்ணுமல்லவா, நெஞ்சுளே-என்மனத்திலுள்ளே, திளைக்கின்றன-அழுந்தாநின்றன, எ-று.

வி-ரை. சிலை மலை யெனினுமாம். செற்று அழித்தெனக்கொண்டு பொருள்கொள்ளலுமாம். கோலுதல்-வளைத்தல். நெற்றிநாட்டம் என்பதன் முன் தில் என்னுமுருபு விரித்துரைத்தலுமொன்று.மணிகள் எற்றி எறி எனப்பிரிக்கலுமாம். கோலுதல்-வளைத்தல். நெற்றி நாட்டம் அன்றே நெஞ்சுளே திளைக்கின்றன என்பதில் அன்றே யென்பது அசைநிலையெனினும் பொருந்தும். (கூ)

தொறுக்கள்வான்கமலமலருழக்கக்
கரும்புநற்சாறுபாய்தர
மறுக்கமாய்க்கயல்கண்
மடைபாய்தில்லையம்பலவன்
முறுக்குவாசிகைதன்னொடுமுகிழ்த்தவவ்
வகத்திமொட்டொடுமத்தமும்
பிறைக்கொள்சென்னியன்றே
பிரியாதென்னுணின்றனவே.

ப-ரை. தொறுக்கள் - பசுக்கூட்டங்கள், வான் - மேன்மையாகிய, கமலமலர் உழக்க - தாமரைமலர்களை அலைக்க, கரும்பு நல் சாறு பாய்தர - கரும்பினது இனியசாறுபாய, கயல்கள் - சேல்மீன்கள், மறுக்கமாய் - மயக்கமடைந்து, மடை பாய் - மடைகளில் பாய்கின்ற, தில்லையம்பலவன்—, முறுக்கு-முறுக்கையுடைய, வாசிகை தன்னொடு - பூமாலையோடு, முகிழ்த்த-குவிந்த, அ - அந்த, அகத்தி மொட்டொடு - அகத்தியரும்புகளோடு, மத்தமும்-ஊமத்தமலரும், பிறை - பிறையும், (ஆகிய இவற்றை) கொள் - கொண்ட, சென்னி அன்றே - திருமுடியல்லவா, என் உள் - என்மனத்தில், பிரியாது நின்றன - நீங்காமல் நிலைபெற்றிருந்தன, எ-று.

வி-ரை. தொறு - பசுக்கூட்டம். முறுக்கு - முறுக்கப்பட்ட என்றலுமாம். வாசிகை-பூமாலை. தன்னொடு என்பதில் தன் சாரியை.

தூவிநீரொடுபூவவைதொழு
தேத்துகையினராகிமிக்கதோ
ராவியுண்ணிறுத்தி
யமர்ந்தூறியவன்பினராய்த்
தேவர்தாந்தொழவாடியதில்லைக்
கூத்தனைத்திருவாலிசொல்லிவை
மேவவல்லவர்கள்
விடையானடிமேவுவரே.

ப-ரை. நீரொடு பூ அவை - நீரோடு மலர்களாகிய அவைகளை, தூவி-சிந்தி, தொழுது எத்து கையினர் ஆகி-வணங்கித் துதிக்கின்ற கையையுடையவராய், மிக்கது - மேலானதாகிய, ஓர்-ஒப்பற்ற, ஆவியுள் நிறுத்தி - உயிர்க்குள்ளே நிறுத்தி, அமர்ந்து - விரும்பி, ஊறிய

அன்பினராய்-சுரந்த அன்பினையுடையவராகி, தேவர்தொழ - தேவர்கள் வணங்க, ஆடிய-நடனஞ்செய்த, தில்லைகூத்தனை—, திருவாலி - திருவாலியமுதன், சொல் - புகழ்ந்து சொன்ன, இவை - இந்தப் பத்துப்பாடல்களையும், மேவ வல்லவர்கள் - படனஞ்செய்ய வல்லவர்கள், விடையான் - இடபவாகனனாகிய சிவபிரானது, அடி - திருவடியை, மேவுவர் - அடைவார்கள், எ - று.

வி - ரை. ஆவி - மனம் எனினும் பொருந்தும். தேவர்தாம் என்பதில் தாம் சாரியை. படனம் - படித்தல். (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## உ - கோயில் - பவளமால்வரை.

பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பவளமால்வரையைப்பனிபடர்ந்தனையதோர்
படரொளிதருதிருநீறுங்
குவளைமாமலர்க்கண்ணியுங்கொன்றையுந்
துன்றுபொற்குழற்றிருச்சடையுந்
திவளமாளிகைசூழ்தருதில்லையுட்
டிருநடம்புரிகின்ற
தவளவண்ணனைநினைதொறுமென்மனந்
தழன்மெழுகொக்கின்றதே.

ப-ரை. மால் - பெரிய, பவளவரையை - பவளமலையை, பனி படர்ந்தனையது - பனிமூடினாற் போன்றதாகிய, ஓர்-ஒப்பற்ற, படர் ஒளி தரு - பரந்த வொளியைத்தருகிற, திருநீறும் - திருநீறும், மா-அழகாகிய, குவளை மலர் கண்ணியும் - குவளைமலர்மாலையும், கொன்றையும் - கொன்றைமலர் மாலையும், துன்று - நெருங்கிய, பொன் - பொன்போன்ற, குழல் திரு சடையும் - குழன்ற திருச்சடையுமாக, திவளமாளிகை சூழ்தரு-நுண்டொழிலமைந்த மாளிகைகள் சூழ்ந்த, தில்லையுள்-தில்லைநகரத்தில், திருநடம்புரிகின்ற-திருநடனம்செய்கிற, தவள வண்ணனை-தவளவண்ணனாகிய சிவபிரானை, நினைதொறும்-

நினைக்குந்தோறும், என் மனம் - என்மனமானது, தழல் மெழுகு ஒக்கின்றது - நெருப்பிலிட்ட மெழுகுபோல்கின்றது, எ - று.

வி-ரை. சூழ்தரு என்பதற்குப் பகுதி சூழ்தா. தவளவண்ணன் - வெண்ணிறமுடையவன், இது முழுநீறு பூசின திருக்கோலத்தைக் குறித்தது. (க)

ஒக்கவோட்டந்தவந்தியுமதியமு
மலைகடலொலியோடு
நெக்குவீழ்தருநெஞ்சினைப்பாய்தலு
நிறையழிந்திருப்பேனைச்
செக்கர்மாளிகைசூழ்தருதில்லையுட்
டிருநடம்வகையாலே
பக்கமோட்டந்தமன்மதன்மலர்க்கணை
படுந்தொறுமலந்தேனே.

ப-ரை. ஒக்கவோட்டந்த - ஒக்க வோடிவந்த, அந்தியும் மதியமும் - அந்திக்காலமும் பிறையும், அலை கடல் ஒலியோடு - அலையா நின்ற கடலோசையுடன், நெக்கு வீழ்தரு - நெகிழ்ந்து விழுகின்ற, நெஞ்சினை - என் மனத்தை, பாய்தலும்-பாய்தலோடும், நிறை அழிந்து இருப்பேனை-நிறைகெட்டிருக்கின்ற என்னை, செக்கர் மாளிகை சூழ்தரு - செவ்விய மாளிகைகள் சூழ்ந்த, தில்லையுள் - தில்லைநகரத்தில், திருநடம்வகையாலே-திருநடநத்தின் வகையினால், பக்கம் ஓட்டந்த - பக்கத்தில் ஓடிவந்த, மன்மதன் மலர்க்கணை - மன்மதனது புஷ்பபாணங்கள், படுந்தொறும் - தைக்குந்தோறும், அலந்தேன் - வருந்தினேன், எ-று.

வி-ரை. ஓட்டந்தந்த என்பது ஓட்டந்த என விகாரமாயிற்று; ஓடின என்பது இதன்பொருள். வீழ்தரு என்பதற்குப் பகுதி வீழ்தா. நிறை - கற்பின் வரம்பு. செக்கர் - செவ்வை. அலந்தேன் என்பதற்குப் பகுதி அல. (உ)

அலந்துபோயினேனம்பலக்கூத்தனே
யணிதில்லைநகராளீ
சிலந்தியையரசாள்கவென்றருள்செய்த
தேவதேவீசனே
யுலந்தமார்க்கண்டிக்காகியக்காலனை
யுயிர்செகவுதைகொண்ட

மலர்ந்தபாதங்கள்வனமுலைமேலொற்ற
வந்தருள்செய்யாயே.

ப-ரை. அலந்துபோயினேன்-வருத்தப்பட்டுப்போனேன், அம்பலக்கூத்தனே - தில்லையம்பலக்கூத்தனே, அணி-அழகிய, தில்லைநகராளீ-தில்லைநகரையாள்பவனே, சிலந்தியை - சிலந்திப்பூச்சியை, அரசாள்க என்று - அரசாளக்கடவையென்று, அருள் செய்த-அருள்செய்த, தேவதேவீசனே—, உலந்த-வருந்தின, மார்க்கண்டிக்காகி - மார்க்கண்டனுக்காக, அ காலனை - அந்த யமனை, உயிர் செக - உயிர் நீங்கும்படி, உதைகொண்ட - உதைத்த, மலர்ந்த பாதங்கள் - மலர்ந்த திருவடிகள், வனம் முலைமேல் ஒற்ற - எனது அழகிய தனங்களின்மேல் ஒற்றும்படி, வந்து அருள் செய்யாய் - வந்தருள் செய்வாயாக, எ - று.

வி-ரை. உதைகொண்ட ஒருசொல். உதைகொள் பகுதி. (ரு)

அருள்செய்தாடுநல்லம்பலக்கூத்தனே
யணிதில்லைநகராளீ
மருள்செய்தென்றனைவனமுலைபொன்பயப்
பிப்பதுவழக்காமோ
திரளுநீண்மணிக்கங்கையைத்திருச்சடைச்
சேர்த்தியச்செய்யாளுக்
குருவம்பாகமுமீந்துநல்லந்தியை
யொண்ணுதல்வைத்தோனே.

ப-ரை. திரளும் - திரண்ட, நீள் - நீண்ட, மணி - மணிகளையுடைய, கங்கையை - கங்கையென்னும் பெண்ணை, திருச்சடை சேர்த்தி - திருச்சடையிலமைத்து, அச்செய்யாளுக்கு-அந்தச் செய்யவளாகிய உமாதேவிக்கு, உருவம் பாகமும் ஈந்து - திருமேனியிற் கூறுந்தந்து, நல் அந்தியை-நல்ல நெருப்பை, ஒள் நுதல் வைத்தோனே - அழகிய நெற்றியில் வைத்தவனே; அருள்செய்து ஆடும் - உயிர்கள்மீது அருள்செய்தாடுகிற, நல் அம்பலக்கூத்தனே—, அணி தில்லைநகராளீ—, என்றனை மருள் செய்து-என்னை மருளச்செய்து, வனமுலை - என் அழகிய தனங்கள், பொன் பயப்பிப்பது - பொன்னைத்தரச் செய்விப்பது, வழக்கு ஆமோ-உனக்கு முறைமையாமோ, எ - று.

வி-ரை. அன்மகோடிகள் தம்திருநடத்தைத் தரிசித்துப் பயனடையவேண்டுமென்னும் பரமகாருண்யத்தால் அம்பலத்தில் நடிப்பவராதலால் இறைவரை 'அருள்செய்தாடு நல்லம்பலக் கூத்தனே' என்றார். பொன் - தேமல். (௪)

வைத்தபாதங்கண்மாலவன்காண்கிலன்
மலரவன்முடிதேடி
யெய்த்துவந்திழிந்தின்னமுந்துதிக்கின்ற
னெழின்மறையவற்றாலே
செய்த்தலைக்கமலம்மலர்ந்தோங்கிய
தில்லையம்பலத்தானைப்
பத்தியாற்சென்றுகண்டிடவென்மனம்
பதைபதைப்பொழியாதே.

ப-ரை. வைத்த பாதங்கள்-பாதாளத்தில் வைத்த திருவடிகளை, மாலவன் காண்கிலன்-திருமாலென்பவன் காணப்பெற்றிலன்; மலரவன் - பிரமன், முடிதேடி-திருமுடியைத்தேடி, (காணப்பெறாமையால்) எய்த்து வந்து-இளைத்துவந்து, எழில் மறை அவற்றாலே-அழகாகிய வேதங்களைக்கொண்டு, இன்னமும் துதிக்கின்றான்-இன்னமும் துதியாநின்றான்; செய்தலை - வயல்களில், கமலம் மலர்ந்து ஓங்கிய - தாமரைகள் பூத்துப்பொலிந்த, தில்லையம்பலத்தானை—, பத்தியால் சென்று கண்டிட - பத்தியோடுபோய்த் தரிசிக்க, என் மனம்-என்மனமானது, பதைபதைப்பு ஒழியாது - பதைபதைத்தலை நீங்காது, எ-று.

வி-ரை. செய்த்தலை என்பதில் தலை ஏழனுருபு. பதைபதைப்பு என்னும் அடுக்கு மிகுதியைக் குறித்தது. (௫)

தேய்ந்துமெய்வெளுத்தகம்வளைந்தரவினை
யஞ்சித்தானிருந்தேயுங்
காய்ந்துவந்துவந்தென்றனைவலிசெய்து
கதிர்நிலாவெரிதூவு
மாய்ந்தநான்மறையந்தணர்தில்லையு
ளம்பலத்தரனாடல்
வாய்ந்தமாமலர்ப்பாதங்கள்காண்பதோர்
மனத்தினையுடையேற்கே.

ப-ரை. ஆய்ந்த - ஆராயப்பட்ட, நான்மறை - நான்கு வேதங்களையுடைய, அந்தணர் - வேதியர் வாழ்கின்ற, தில்லையுள் - தில்லையில், அம்பலத்து - பொற்சபையில், அரன்-சிவபெருமானது, ஆடல் வாய்ந்த - நடனம்பொருந்திய, மா - பெருமை பொருந்திய, மலர் - தாமரைமலர்போன்ற, பாதங்கள் - திருவடிகளை, காண்பது-காண வேண்டுமென்பதாகிய, ஓர் - ஒப்பற்ற, மனத்தினை உடையேற்கு - மனத்தையுடைய என்மீது, தேய்ந்து - மெலிந்து, மெய் வெளுத்து-உடல்வெளுத்து, அகம் வளைந்து-மனம்வாடி, அரவினை அஞ்சி-பாம்புக்குப் பயந்து, தான் இருந்தேயும் - தானிருந்தும், காய்ந்து வந்து வந்து - கோவித்து வந்து வந்து, என்றனை வலிசெய்து - என்னை வலாத்காரஞ்செய்து, கதிர் நிலா - ஒளியையுடைய சந்திரனானவன், எரி தூவும் - நெருப்பை வீசுகிறான், எ - று.

வி-ரை. உடையேற்கு-உருபுமயக்கம். அரவினை என்பதுமது. தான் என்றது சந்திரனை. எரி - முதனிலைத்தொழிலாகுபெயர். (௬)

உடையும்பாய்புலித்தோலுநல்லரவமு
முண்பதும்பலிதேர்ந்து
விடையதூர்வதுமேவிடங்கொடுவரை
யாகினுமென்னெஞ்ச
மடைகொள்வாளைகள்குதிகொளும்வயற்றில்லை
யம்பலத்தனலாடு
முடையகோவினையன்றிமற்றாரையு
முள்ளுவதறியேனே.

ப-ரை. பாய்புலித்தோல் உடையும்-பாய்கின்ற புலியின் தோலாகிய ஆடையும், நல் அரவமும்-நல்ல பாம்பும், பலி தேர்ந்து உண்பதும்-பிச்சையேற்றுண்பதும், விடை ஊர்வதும் - இடபமேறுவதும், மேவு இடம்-தங்குமிடம், கொடு வரை ஆகினும் - கொடியமலையாயினும், என் நெஞ்சம்-என் மனமானது, மடை கொள் - மடைகளைக் கொண்ட, வாளைகள் குதிகொளும் வயல்-வாளைகள் குதிக்கிற வயல்கள் சூழ்ந்த, தில்லையம்பலத்து - தில்லையம்பலத்தில், அனல் ஆடும்-அழலோடாடுகின்ற, உடைய கோவினை அன்றி - எல்லாவற்றையுமுடைய தலைவனையல்லது, மற்று ஆரையும்-வேறு யாரையும், உள்ளுவது அறியேன் - நினைத்தலை யறியேன், எ - று.

வி-ரை. உடை-உடுக்கப்படுவது. நெஞ்சம் என்பதில் அம் சாரியை; நெஞ்சம் உள்ளுவதறியேன் என இயையும். (௭)

அறிவுமிக்கநன் ணாணமுநிறைமையு
மாசையுமிங்குள்ள
வுறவும்பெற்றநற் றாயொடுதந்தையு
முடன்பிறந்தவரோடும்
பிரியவிட்டுனையடைந்தனனென்றுகொள்
பெரும்பற்றப்புலியூரின்
மறைகணான்குங்கொண் டந்தணரேத்தநன்
மாநடமகிழ்வானே.

ப-ரை. பெரும்பற்றப்புலியூரில்—, மறைகள்நான்குங்கொண்டு-நான்கு வேதங்களால், அந்தணர் ஏத்த-வேதியர் துதிக்க, நல்-அழகிய, மா-பெருமைபொருந்திய, நடம்-நடனஞ்செய்தலை, மகிழ்வானே-விரும்புவோனே, அறிவும்-உணர்வும், மிக்க நல் நாணமும்-மிகுந்த நல்ல நாணமும், நிறைமையும்-நிறையும், ஆசையும்-விருப்பமும், இங்கு உள்ள உறவும்-இவ்விடத்துள்ள உறவும், பெற்ற-ஈன்ற, நல் தாயொடு தந்தையும்-நல்லதாயுடனே தந்தையும், உடன் பிறந்தவரோடும்-கூடப்பிறந்தவர்களுடன், பிரியவிட்டு-நீங்கவிடுத்து, உன்னை அடைந்தனன்-உன்னைச் சேர்ந்தேன், (ஆதலால்) என்றுகொள்-என்னை யேற்றுக்கொள்வாயாக, எ-று.

வி-ரை. கொண்டு மூன்றுவதன் சொல்லுருபு. மகடூஉக்குணம் நான்கினுள்ளுஞ் சிறந்து முதற்கண் ணிற்றலாலும், "தாயிற்சிறந் தன்று நாணுடையவருக்கு" என்றும், "என்கண்மணிபோன்றொரு நாள் பிரியாதுயிரிற் பழகியுடன் வளர்ந்தவருநாணளிய வழல்சேர் மெழுகொத்தழிகின்றதே" என்றும் மேலோர் கூறுதலாலும், 'மிக்க நன்ணாணமும்' என்றிவரும் நாணத்தைச் சிறப்பித்துக் கூறுவராயினர். ஏற்று என்பதற்குப் பகுதி ஏல். (அ)

வானநாடுடைமைந்தனேயோவென்பன்
வந்தருளாயென்பன்
பானெயைந்துடனாடியபடர்சடைப்
பால்வண்ணனேயென்பன்
றேனமாபொழில்சூழ்தருதில்லையுட்
டிருநடம்புரிகின்ற
வேனமாமணிப்பூணணிமார்பனே
யெனக்கருள்புரிவாயே.

ப-ரை. வானநாடு உடை-முத்தியுலகத்தையுடைய, மைந்தனே-உறுதிப்பொருளா யிருப்பவனே, ஓ என்பன் - ஓவென்று முறை யிடுவேன்; வந்து அருளாய் என்பன் - வந்து அருள்செய்வா யென் பேன்; பால் நெய்-பால்நெய் முதலாகிய, ஐந்துடன் ஆடிய - ஐந்தா லும் அபிஷேகஞ் செய்யப்பெற்ற, படர் சடை - விரிந்த சடையை யுடைய, பால்வண்ணனே என்பன்-பால்வண்ணனே யென்பேன்; தேன - தேனையுடைய, மா பொழில்-பெரிய சோலைகள், சூழ்தரு - வளைந்த, தில்லையுள் - தில்லையில், திருநடம் புரிகின்ற - திருநடனஞ் செய்கிற, ஏனம் ஆம் - பன்றிக்கொம்பாகிய, மணி பூண் அணி மார்பனே - அழகிய ஆபரணத்தையணிந்த திருமார்பை யுடையவனே, எனக்கு அருள் புரிவாய் - எனக்கு அருள்செய்வாயாக, எ-று.

வி-ரை. வானநாடு-விண்ணுலகு, அது இவ்விடத்து முத்தியுல குக்காயிற்று. மைந்து உறுதியாதலால் அதனையுடைய இறைவனை 'மைந்தன்' என்றார்; உறுதியாவது என்று மழியாமை. பால்வண் ணன் - வெண்ணிறமுடையவன். ஏனம் முதலாகுபெயர். (சு)

புரியும்பொன்மதில்சூழ்தருதில்லையுட்
　　பூசுரர்பலர்போற்ற
வெரியதாடுமெம்மீசனைக்காதலித்
　　தினையவண்மொழியாக
வரைசெய்மாமதின்மயிலையர்மன்னவன்
　　மறைவலதிருவாலி
பரவல்பத்திவைவல்லவர்பரமன
　　தடியிணைபணிவாரே.

ப-ரை. புரியும்-யாவரும் விரும்புகிற, பொன் மதில் சூழ்தரு - பொன்மதில்சூழ்ந்த, தில்லையுள் —, பூசுரர்-அந்தணர், பலர் போற்ற - பலரும் வணங்க, எரி ஆடும் - அழலோடாடுகின்ற, எம் ஈசனை-எமது ஈச்சுரனை, காதலித்து - விரும்பி, இனையவள் மொழியாக - வருந்தி னவள் சொல்லாக, வரை செய்-மலைபோன்ற, மா மதில்-பெரியமதில் சூழ்ந்த, மயிலையர் மன்னவன் - மயிலையர்கோன், மறை வல்ல திரு வாலி - வேதங்களில் வல்ல திருவாலி, பரவல் - தோத்திரஞ்செய்த லாகிய, இவை பத்து - இவைபத்துப்பாடலையும், வல்லவர் - கற்று வல்லவர், பரமனது - சிவபெருமானது, அடி இணை - இரண்டு திரு வடிகளை, பணிவார் - வணங்குவோராவர், எ - று.

வி-ரை. புரிதல்-விரும்புதல், செய்தல் எனினுமமையும். எரியது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. இனைதல்-வருந்துதல். காதலித்து என்பதற்குப் பகுதி காதலி. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

## ௩. கோயில்.

### பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

அல்லாய்ப்பகலாயருவாயுருவாயாராவமுதமாய்க்
கல்லானிழலாய்கயிலைமலையாய்காணவருளென்று
பல்லாயிரம்பேர்பதஞ்சலிகள்பரவவெளிப்பட்டுச்
செல்வாய்மதிற்றில்லைக்கருளித்தேவனாடுமே.

ப-ரை. அல் ஆய் - இரவாகி, பகல் ஆய் - பகலாகி, அரு ஆய் - அருவமாகி, உரு ஆய் - உருவமாகி, ஆரா அமுதம் ஆய்-தெவிட்டாத அமிர்தமாகி, கல்லால் நிழலாய்-கல்லால நீழலிலிருப்பவனே, கயிலைமலையாய் - கயிலைமலையையுடையவனே, காண அருள் என்று - யாம் காண அருள்செய்யக்கடவையென்று, பல்லாயிரம் பேர் - பல்லாயிரம் பேர், பதஞ்சலிகள்—, பரவ - வாழ்த்த, வெளிப்பட்டு - புறப்பட்டு, செல்வாய் மதில் - மேகங்கள் படிகின்ற மதில் சூழ்ந்த, தில்லைக்கு - தில்லையில், அருளி - அருள்செய்து, தேவன் ஆடும் - சிவபெருமான் நடிப்பன், எ - று.

வி-ரை. செல் - மேகம். தில்லைக்கு உருபுமயக்கம். (௧)

அன்னநடையாரமுதமொழியாரவர்கள்பயிறில்லைத்
தென்னன்றமிழுமிசையுங்கலந்தசிற்றம்பலந்தன்னுட்
பொன்னுமணியுநிரந்ததலத்துப்புலித்தோல்பியற்கிட்டு
மின்னினிடையாளுமையாள்காணவிகிர்தனாடுமே.

ப-ரை. அன்ன நடையார்-அன்னநடையையுடையவரும், அமுதமொழியார் - அமிர்தமொழியை யுடையவருமாகிய, அவர்கள்-அந்த மாதர்கள், பயில் - நெருங்கிய, தில்லைத் தென்னன்-தில்லையில் வாழ்கின்ற அழகன், தமிழும் இசையும் கலந்த - தமிழ்ப்பாடலும் இசையுங் கூடின, சிற்றம்பலம் தன்னுள் - சிற்றம்பலத்தில், பொன்னும்

மணியும் நிரந்த தலத்து - பொன்னினாலும் மணியினாலும் செய்யப்பட்டசபையில், புலித்தோல் பியற்கு இட்டு-புலித்தோலைப்பிடரின் மேலிட்டு, மின்னின் இடையாள்-மின்போலும் இடையையுடையவளாகிய, உமையாள் காண - உமாதேவியானவள் தரிசிக்க, விகிர்தன் ஆடும் - விகிர்தன் திருக்கூத்தாடுவான், எ-று.

வி-ரை. தென்-அழகு. தென்னன்றமிழ் என்பதற்கு அழகும் நன்மையுமமைந்த தமிழ் எனினுமமையும். தில்லைச்சிற்றம்பலம் எனவியையும். பியல் - பிடர், பியற்கு - உருபுமயக்கம், விகிர்தன் - மெய்யன்.

இளமென்முலைபாரெழின்மைந்தரொடுமேராரமளிமேற்
றிளையுமாடத்திருவார்தில்லைச்சிற்றம்பலந்தன்னுள்
வளர்பொன்மலையுள்வயிரமலைபோல்வலக்கைகவித்துநின்
றளவில்பெருமையமரர்போற்றவழகனாடுமே.

ப-ரை. இளமெல் முலையார்-இளமையும் மென்மையும் பொருந்திய தனங்களையுடைய மாதர், எழில் மைந்தரொடும்-அழகையுடைய வாலிபரோடும், ஏர் ஆர்-அழகு பொருந்திய, அமளிமேல்-சயனத்தின் மேல், திளையும்-(சுகபோகத்தை) அநுபவிக்கிற, மாடம்-மாளிகைகள் சூழ்ந்த, திருஆர் தில்லைச்சிற்றம்பலம் தன்னுள்—, வளர் பொன் மலையுள் வயிரமலைபோல்—, வலக்கை கவித்து நின்று - வலதுகையைக் குவித்துநின்று, அளவு இல்பெருமை-அளவற்றபெருமையையுடைய, அமரர் போற்ற-தேவர்கள் வணங்க, அழகன் ஆடும்-அழகனாகிய சிவபெருமான் நடஞ்செய்வான், எ - று.

வி-ரை. 'இளமென் முலையார்' என்றதற்கேற்ப 'எழின் மைந்தரொடு மேரா ரமளிமேற் றிளையு மாடம்' என்றார். இங்ஙன நிகழ்தற்குச் செல்வப்பெருக்குக் காரணமென்பது தோன்ற 'திருவார் தில்லை' என்றார். (ரு)

சந்துமகிலுந்தழைப்பீலிகளுஞ்சாதிபலவுங்கொண்
டுந்தியிழியுநிவவின்கரைமேலுயர்ந்தமதிற்றில்லைச்
சிந்திப்பரியதெய்வப்பதியுட்சிற்றம்பலந்தன்னு
ணந்திமுழவங்கொட்டநட்டநாதனாடுமே.

ப-ரை. சந்தும் - சந்தனமரங்களையும், அகிலும் - அகில்மரங்களையும், தழை பீலிகளும் - தழைத்தலையுடைய மயிற்றோகைகளையும்,

சாதி பலவும் - மற்றும் பலவகைப்பொருள்களையும், கொண்டு-கவர்ந்து, உந்தி-தள்ளி, இழியும் - ஒழுகுகிற, நிவவின் கரைமேல்-நிவவுதிக்கரையின்மீது, உயர்ந்த மதில்-உயர்ந்த மதில் சூழ்ந்த, தில்லை-தில்லையாகிய, சிந்திப்பு அரிய - நினைத்தற்கரிய, தெய்வப்பதியுள் - தெய்விகமாகிய திருப்பதியில், சிற்றம்பலந்தன்னுள்—, நந்தி முழவம் கொட்ட-நந்திமத்தளங்கொட்ட, நாதன்-இறைவன், நட்டம் ஆடும் - நடநமாடுவான், எ - று.

வி-ரை. சாதி இங்கு வகையைக் குறித்தது. உந்துதல்-தள்ளுதல். நட்டம் - நடநம். (ச)

ஓமப்புகையுமகிலின்புகையுமுயர்ந்துமுகிலேறயத்
தீமெய்த்தொழிலார்மறையோர்மல்குசிற்றம்பலந்தன்னுள்
வாமத்தெழிலாரெடுத்தபாதமழலைச்சிலம்பார்க்கத்
தீமெய்ச்சடைமேற்றிங்கள்சூடித்தேவனாடுமே.

ப-ரை. ஓமப்புகையும் - ஓமஞ்செய்வதிலுண்டாகிற புகையும், அகிலின் புகையும்-அகிற்கட்டைகளின் புகையும், உயர்ந்து-மேலெழுந்து, முகில் தோய - மேகங்களிற் பொருந்த, மெய் - உண்மையாகிய, தீ தொழிலார் - அக்கினி காரியத்தாராகிய, மறையோர்-வேதியர், மல்கு - நிறைந்த, சிற்றம்பலந்தன்னுள்—, வாமத்து - இடப்பாகத்தில், எடுத்த - தூக்கின, எழில் ஆர் பாதம்-அழகு மிகுந்த திருவடியில், மழலை - மென்மையாகிய, சிலம்பு ஆர்க்க - சிலம்புகள் ஆரவாரிக்க, மெய் - உண்மையாகிய, தீ சடைமேல்-நெருப்புப்போலுஞ் சடையின்மீது, திங்கள் சூடி-சந்திரகண்டத்தை யணிந்து, தேவன்-சிவபெருமான், ஆடும் - ஆடுவான், எ - று.

வி-ரை. அக்நி காரியம் - யாகாதி சற்கருமங்கள். வாமம்-இடப்பாகம். மழலை-மென்மை. சடை நெருப்புப்போலச் செவந்திருத்தலால் 'தீமெய்ச்சடை' என்றார். (ரு)

குரவங்கோங்கங் குளிர்புன்னைகைதைகுவிந்தகரைகண்மேற்
றிரைவந்துலவுந்தில்லைமல்குசிற்றம்பலந்தன்னுள் [த
வரைபோன்மலிந்தமணிமண்டபத்துமறையோர்மகிழ்ந்தேத்
வரவமாடவனல்கையேந்தியழகனாடுமே.

ப-ரை. குரவம்-குராமலரும், கோங்கம்-கோங்கமலரும், குளிர் புன்னை-குளிர்ந்த புன்னைமலரும், கைதை-தாழைமலரும், குவிந்த-குவிந்திருக்கின்ற, கரைகண்மேல்-கரைகளின்மீது, திரை வந்து உலவும்-

அலைகள் வந்து உலாவுகின்ற, தில்லைமல்கு-தில்லைப்பதியிற் பொருந்திய, சிற்றம்பலந்தன்னுள்—, வரைபோல் மலிந்த - மலைபோல மிக்குத் தோன்றுகிற, மணி மண்டபத்து - ரத்நசபையில், மறையோர் மகிழ்ந்து ஏத்த - வேதியர் மகிழ்ந்து துதிக்க, அரவம் ஆட-பாம்புகள் அசைய, அனல் கை ஏந்தி - நெருப்பைக் கையிலேந்தி, அழகன் - அழகனாகிய சிவபெருமான், ஆடும் - ஆடுவான், எ - று.

வி-ரை. குரவம் கோங்கம் என்பவற்றுள் அம் சாரியை. திரை-முதனிலைத் தொழிலாகுபெயர். (சு)

சித்தர்தேவரியக்கர்முனிவர்தேனார்பொழிற்றில்லை
யத்தாவருளாயணியம்பலவாவென்றென்றவரேத்த
முத்துமணியுநிரந்ததலத்துண்முளைவெண்மதிசூடிக்
கொத்தார்சடைகடாழநட்டங்குழகனாடுமே.

ப-ரை. சித்தர் - சித்தரும், தேவர் - தேவரும், இயக்கர்-இயக்கரும், முனிவர்-முனிவரும், தேன் ஆர் பொழில் - தேன்பொருந்திய சோலைகள் சூழ்ந்த, தில்லை-தில்லைப்பதியிலெழுந்தருளிய, அத்தா - அத்தனே, அணி அம்பலவா - அழகிய அம்பலத்தை யுடையவனே, அருளாய் என்று என்று - அருள்செய்யக்கடவையென்று பலதரஞ் சொல்லி, அவர் ஏத்த-அவர்களெல்லாரும் துதிக்க, முத்தும் மணியும் நிரந்த - முத்தும் மற்றை மணிகளும் நிரம்பின, தலத்துள் - இடத்தில், வெள் - வெண்மையாகிய, முளை மதி சூடி - இளந்திங்களைத் தரித்து, கொத்து ஆர் - திரட்சியாகிய, சடைகள் தாழ - சடைகள் தொங்க, குழகன் - அழகனாகிய சிவபிரான், நட்டம் ஆடும்-நடனமாடுவான், எ-று.

வி-ரை. முளைமதி - முளைக்கின்ற மதி (ஒற்றைக்கலையாகிய சந்திரன்). தாழ்தல் - தொங்குதல். (எ)

அதித்தவரக்கனெரியவிரலாலடர்த்தாயருளென்று
துதித்துமறையோர்வணங்குந்தில்லைச்சிற்றம்பலந்தன்னு
ளுதித்தபோழ்திலிரவிக்கதிர்போலொளிர்மாமணியெங்கும்
பதித்ததலத்துப்பவளமேனிப்பரமனாடுமே.

ப-ரை. அதித்த - அதிர்த்த, அரக்கன்-அரக்கனாகிய ராவணன், நெரிய - நெரியும்படி, விரலால் அடர்த்தாய் - விரலினால் ஊன்றினவனே, அருள் என்று - அருளக்கடவையென்று, மறையோர்-வேதியர், துதித்து வணங்கும்-தோத்திரஞ்செய்து வணங்குகிற, தில்லை -

சிற்றம்பலந்தன்னுள்—, உதித்த போழ்தில்-உதித்தகாலத்திலுள்ள, இரவிகதிர்போல்-சூரியகிரணம்போல, ஒளிர்-பிரகாசிக்கிற, மாமணி-மாணிக்கங்கள், எங்கும் - எவ்விடத்தும், பதித்த தலத்து-பதிக்கப்பட்ட இடங்களில், பவளம் மேனி - பவளம்போலுந் திருமேனியையுடைய, பரமன் - சிவபிரான், ஆடும் - ஆடுவான், எ-று.

வி-ரை. அதிர்த்தல் - ஆரவாரித்தல். உதித்தபோழ்தி லிரவி-பாலசூரியன். பரமன் - மேலானவன். (அ)

மாலோடயனுமமரர்பதியும்வந்துவணங்கிநின்
ருலகண்டாவரனேயருளாயென்றென்றவரேத்தச்
சேலாடும்வயற்றில்லைமல்குசிற்றம்பலந்தன்னுட்
பாலாடுமுடிச்சடைகடாழப்பரமனுடுமே.

ப-ரை. மாலோடு அயனும் - திருமாலோடு பிரமனும், அமரர் பதியும் - தேவர்க்கரசனுகிய இந்திரனும், வந்து வணங்கிநின்று—, ஆலகண்டா - விஷகண்டனே, அரனே—, அருளாய் என்று என்று-அருளாயென்று பலதரஞ்சொல்லி, அவர் ஏத்த - அவர்கள் துதிக்க, சேல் ஆடும் வயல் - சேல்கள் குதிக்கின்ற வயல்கள், மல்கு - நிறைந்த, தில்லைச்சிற்றம்பலந்தன்னுள்—, பால் ஆடும் - பாலினுல் அபிஷேகஞ்செய்யப்பெற்ற, முடி-திருமுடியிலுள்ள, சடைகள் தாழ-சடைகள்தொங்க, பரமன்-சிவபிரான், ஆடும்-நடனமாடுவான், எ-று.

வி-ரை. ஆலம்-விஷம். பாலாடு முடிச்சடை யென்பதற்குப் பக்கங்களி லசைந்தாடுகிற சடைமுடியென் றுரைத்தலும் பொருந்தும்.

நெடியசமணுமறைசாக்கியருநிரம்பாப்பல்கோடிச்
செடியுந்தவத்தோரடையாத்தில்லைச்சிற்றம்பலந்தன்னு
ளடிகளவரையாரூர்நம்பியவர்களிசைபாடக்
கொடியும்விடையுமுடையகோலக்குழகனுடுமே.

ப-ரை. நெடிய சமணும்-பெரியசமணரும், அறை சாக்கியரும்-சொல்லப்பட்ட சாக்கியரும், நிரம்பா - நிரம்பாத, பல் கோடி-அநேககோடியாகிய, செடியும் தவத்தோர் - குற்றம் பொருந்திய தவத்தையுடையவர், அடையா - அடையவொண்ணுத, தில்லைச்சிற்றம்பலந்தன்னுள்—, அடிகள் அவரை - அடிகளாகிய அவரை, ஆரூர் நம்பியவர்கள் - திருவாரூர்நம்பிகள், இசை பாட - இசையைப்பாடாநிற்க, கொடியும் - துவசத்தையும், விடையும் - இடபத்தையும், உடைய -

உடைய, கோலக்குழகன் - மிக்க அழகுடையவனாகிய சிவபிரான், ஆடும்-நடனமாடுவோன், எ-று.

வி-ரை. நிரம்பா-அடையா. (௧௦)

வானோர்பணியமண்ணோரேத்தமன்னிநடமாடுந்
தேனார்பொழில்சூழ்தில்லைமல்குசிற்றம்பலத்தானைத்
தூநான்மறையானமுதவாலிசொன்னதமிழ்மாலைப்
பாலேனர்பாடல்பத்தும்பாடப்பாவநாசமே.

ப-ரை. வானோர் பணிய-விண்ணுலகத்தார் வணங்கவும், மண்ணோர் ஏத்த - மண்ணுலகத்தார் துதிக்கவும், மன்னி நடம் ஆடும் - நிலைபெற்று நடனமாடுகிற, தேன் ஆர் - தேன் நிறைந்த, பொழில் சூழ் - சோலைகள் சூழ்ந்த, மல்கு-நிறைவாகிய, தில்லைச்சிற்றம்பலத்தானை—, தூ - பரிசுத்தமாகிய, நான்மறையான் - நான்கு வேதங்களையு முடையவனாகிய, அமுதவாலி-திருவாலியமுதன், சொன்ன-சொல்லிய, தமிழ் மாலை-தமிழ்மாலையிலுள்ள, பால் நேர் - பாலைநிகர்த்த, பாடல் பத்தும் - இந்தப் பத்துப்பாடலையும், பாட - பாடினால், பாவம் - (பாடுவோரது) பாவமானது, நாசமே-நசித்தேபோம், எ-று.

வி-ரை. வான் - ஆகாயம், அது அங்குள்ள வுலகுக்காயிற்று. விண்ணுலகு - சுவர்க்கலோகம். தேன் - வண்டு எனினுமாம். மறை வீட்டுநூலாதலால் 'தூநான்மறை' என்றார். பால் நேர் என்றது இன்சுவையுடைமைபற்றி யென்க. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## ௪. கோயில்.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கோலமலர்நெடுங்கட்கொவ்வைவாய்க்கொடியேரிடையீர்
பாலிணையின்னமுதைப்பரமாயபரஞ்சுடரைச்
சேலுகளும்வயல்சூழ்தில்லைமாநகர்ச்சிற்றம்பலத்
தேல்வுடையெம்மிறையையென்றுகொல்காண்பதுவே.

ப-ரை. கோலம் - அழகாகிய, மலர் - தாமரைமலர்போன்ற, நெடுகண் - நெடியகண்களையும், கொவ்வைவாய்-கோவைக்கனிபோ

லும் அதரத்தையும், கொடி ஏர் இடையீர்-பூங்கொடிபோலும் அழகிய இடையையும் உடையமாதரே, பாலினை-பாலை, இன் அமுதை - இனிய அமிர்தத்தை, பரம் ஆய - மேலாகிய, பரஞ்சுடரை - பரஞ்சோதியை, சேல் உகளும் - சேல்கள் பாய்கின்ற, வயல் சூழ் - வயல்கள்சூழ்ந்த, தில்லைமாநகர் - தில்லைமாநகரத்திலுள்ள,சிற்றம்பலத்து- சிற்றம்பலத்தில், எல்வு உடை - எழுந்தருளியிருத்தலையுடைய, எம் இறையை - எம்மிறைவனை, காண்பது - காணப்பெறுவது, என்றுகொல் - எந்நாளோ, எ-று.

வி-ரை. கோலமலர் என்றதில் மலர் நீலோத்பலமலர் எனினுமாம். கொவ்வை - முதலாகுபெயர். இனிமைதருதல்பற்றி இறைவனைப் 'பால்' என்றும் 'அமுது' என்றும் கூறினர். (க)

காண்பதியானென்றுகொல்கதிர்மாமணியைக்கனலை
யாண்பெண்ணருவுருவென்றறிதற்கரிதாயவனைச்
சேண்பணைமாளிகைசூழ்தில்லைமாநகர்ச்சிற்றம்பல
மாண்புடைமாநடஞ்செய்மறையோன்மலர்ப்பாதங்களே.

ப-ரை. கதிர் மாமணியை-ஒளியையுடைய மாணிக்கத்தை, கனலை - நெருப்பை, ஆண் பெண் என்று - ஆண்பெண்ணென்றும், அருவுரு வென்று - அருவமென்றும் உருவமென்றும், அறிதற்கு அரிது ஆயவனை_அறிதற்கருமையானவனை,சேண்-விண்ணளவுயர்ந்த,பணை- பருத்த, மாளிகை சூழ்-மாளிகைகள் சூழ்ந்த, தில்லைமாநகர்ச் சிற்றம்பலம் - தில்லைமாநகர்ச் சிற்றம்பலத்தில், மாண்பு உடை - பெருமையையுடைய, மா நடம் செய் - அழகிய நடநஞ்செய்கிற, மறையோன் மலர் பாதங்கள் - வேதியனாகிய சிவபிரானது தாமரைமலர்போலுந் திருவடிகளை, யான் காண்பது என்றுகொல் - யான் காணப்பெறுவது எந்நாளோ, எ-று.

வி-ரை. மலர்ப்பாதங்கள் யான்காண்பது என்றுகொல் என்றியையும். அரதநவகையில் மாணிக்கத்தினுஞ் சிறந்ததின்மையால் அதனை 'மாமணி' என்றார். நெருப்பையென்றது நெருப்புருவமாயிருப்பவனை யென்றபடி. மறையோன் - வேதப்பிரதிபாத்தியன். (உ)

கள்ளவிழ்தாமரைமேற்கண்டயனொடுமால்பணிய
வொள்ளொளியின்னடுவேயுருவாய்ப்பரந்தோங்கியசீர்த்
தெள்ளியதண்பொழில்சூழ்தில்லைமாநகர்ச்சிற்றம்பலத்
துள்ளொளியாடுகின்றவொருவனையுணர்வரிதே.

ப-ரை. கள் அவிழ் - தேனோடு மலர்கின்ற, தாமரை மேல் கண்ட-தாமரைமலர்மீது காணப்பட்ட, அயனொடு மால் பணிய-பிரம னொடு திருமாலும் வணங்க, ஒள் எரியின் நடுவே-ஒள்ளிய நெருப்பி னிடையே, உருவாய் - உருவாகி, பரந்து ஓங்கிய-பரவியுயர்ந்த, சீர் - சிறப்பையுடைய, தெள்ளிய-தெளிவாகிய, தண் பொழில்சூழ்-குளிர்ச் சியாகிய சோலைகள் சூழ்ந்த, தில்லைமாநகர்ச் சிற்றம்பலத்துள்—, எரி ஆடுகின்ற ஒருவனை-அழலோடாடுகின்ற ஒப்பற்றவனை, உணர்வு - அறிதல், அரிது - அரிதாயிருக்கின்றது, எ - று.

வி-ரை. கண்ட அயன் என்பது கண்டயன் என விகாரமாயி ற்று. சிற்றம்பலத்துள் என்பதில் உள் ஏழனுருபு. (௩)

அரிவையோர்கூறுகந்தானழகனெழின்மால்கரியின்
னுரிவைநல்லுத்தரியமுகந்தானும்பரார்தம்பிரான்
புரிபவர்க்கின்னருள்செய்புலியூர்த்திருச்சிற்றம்பலத்
தெரிமகிழ்ந்தாடுகின்றவெம்பிரானென்னிறையவனே.

ப-ரை. அரிவை - பெண்ணை, ஓர் கூறு உகந்தான் - ஒருபங்கி லிருக்க விரும்பினவன், அழகன்—, எழில் மால் கரியின் - அழகிய பெரிய யானையின், உரிவை-தோலாகிய, நல் உத்தரியம் உகந்தான்- நல்ல வுத்தரியத்தை விரும்பினவன், உம்பரார் தம்பிரான் - தேவர் பெருமான், புரிபவர்க்கு-விரும்புவோர்க்கு, இன் அருள்செய்-இனிய அருளைச்செய்கிற, புலியூர்த் திருச்சிற்றம்பலத்து—, மகிழ்ந்து - திரு வுளமகிழ்ந்து, எரி ஆடுகின்ற - அனலாடுகின்ற, எம்பிரான் - எம்பி ரானே, என் இறையவன் - என் தலைவனாவான், எ - று.

வி-ரை. அரிவை - பருவங்குறியாது பெண்ணென்னுந் துணை யாய் நின்றது. ஓர் கூறுகந்தான் என மேல்வருதலால் அது உமா தேவியைக்குறித்தது. மால்கரி யென்பதற்கு மதமிகுதியால் மயங்கு கிற யானை யெனினுமமையும். உம்பரார் - தேவர். இது இடவாகு பெயர். உம்பர் - மேலிடம். "உம்பராறியா மறையோன்" என்றார் மணிவாசகரும். (௪)

இறைவனையென்கதியையென்னுளேயுயிர்ப்பாகின்ற
மறைவனைமண்ணும்விண்ணுமலிவான்சுடராய்மலிந்த
சிறையணிவண்டறையுந்தில்லைமாநகர்ச்சிற்றம்பல
நிறையணியாமிறையைநினைத்தேனினிப்போக்குவனே.

ப-ரை. இறைவனை—, என் கதியை-எனது அடைக்கலஸ்தானத்தை, என் உள்ளே உயிர்ப்பு ஆகின்ற - எனக்குள்ளே மூச்சாகி நின்ற, மறைவனை - மறையோனை, மண்ணும் விண்ணும் - மண்ணிலும் விண்ணிலும், மலி - மிக்க, வான் சுடர் ஆய் மலிந்த-மேலான வெளியாய் நிறைந்த, சிறை அணி-சிறை யழகமைந்த, வண்டு அறையும் - வண்டுகளொலிக்கப்பெற்ற, தில்லைமாநகர்ச் சிற்றம்பலம்—, நிறை அணி ஆம் இறையை - நிறைந்த ஆபரணமாகிய இறைவனை, நினைத்தேன்—, இனிபோக்குவனே-இனிப் போகவிடுவேனே.எ-று.

வி-ரை. உயிர்ப்பு - உயிர் எனினுமாம். சிற்றம்பல நிறையணியாமிறை-சிற்றம்பலத்துக்குப் பேரழகா யிருக்கு மிறைவன் என்றலுமொன்று. போக்குவனே யென்பதில் ஈற்றேகாரம் வினவோடெதிர் மறை. (௫)

நினைத்தேனினிப்போக்குவனோநிமலத்திரளைநினைப்பார்
மனத்தினுளேயிருந்தமணியைமணிமாணிக்கத்தைக்
கனைத்திழியுங்கழனிக்கனகங்கதிரொண்பவளஞ்
சினத்தொடுவந்தெறியுந்தில்லைமாநகர்க்கூத்தனையே.

ப-ரை. நிமலத்திரளை - நிர்மலக்குவியலை, நினைப்பார்-நினைப்பவருடைய, மனத்தினுள்ளே இருந்த மணியை—, மணி - அழகாகிய, மாணிக்கத்தை—, கனைத்து - ஒலித்து, இழியும் - (வெள்ளம்) வந்திழிகிற, கழனி - வயல்களில், கனகம் - பொன்னையும், கதிர் ஒள் பவளம் - ஒளியையுடைய அழகிய பவளத்தையும், சினத்தொடு வந்து எறியும் - வேகத்தோடு வந்து வீசுகிற, தில்லைமாநகர்க் கூத்தனை—, நினைத்தேன்—, இனி போக்குவனோ-இனிப் போகவொட்டுவேனோ, எ - று.

வி-ரை. போக்குவனோ என்னு மோகாரம் வினவோடெதிர் மறை. கனைத்தல் - ஒலித்தல். (௬)

கூத்தனைவானவர்தங்கொழுந்தைக்கொழுந்தாயெழுந்த
மூத்தனைமூவுருவின்முதலைமுதலாகிநின்ற
வாத்தனைத்தான்படிக்குமந்தணர்தில்லையம்பலத்து
ளேத்தநின்றாடுகின்றவெம்பிரானடிசேர்வன்கொலோ.

ப-ரை. கூத்தனை-நடமாடுவோனை, வானவர்தம் கொழுந்தை - தேவர் முதல்வனை, கொழுந்தாய் எழுந்த மூத்தனை - முதல்வனாய்த்

தோன்றின மூப்பனை, மூவுருவில் முதலை - மூன்றுருவங்களின் முதற்பொருளை, முதலாகி நின்ற ஆத்தனைத்தான் - முதற்பொருளாகின்ற பெரியோனையே, படிக்கும் - சதாபடனம் பண்ணுகிற, அந்தணர் - வேதியர், தில்லையம்பலத்துள்—, ஏத்த-துதிக்க, நின்று ஆடுகின்ற - நின்றுநடிக்கிற, எம்பிரான் - எம்பெருமானது, அடி - திருவடியை, சேர்வன்கொலோ - அடைவேனோ, எ - று.

வி-ரை. மூன்றுருவங்களின் முதற்பொருள் என்றது படைத்தல் காத்தல் அழித்தல் என்னு முத்தொழிலார்க்கும் முதல்வன் என்றபடி. "மூவர்கோனுய்நின்ற முதல்வன்" என்றும், "மூவரென்றே யெம்பிரானொடு மெண்ணி" என்றும் மணிவாசகரும், "மூவண்ணறன் சந்நிதி முத்தொழில் செய்ய" என்று பரஞ்சோதி முனிவரும் கூறுதல் காண்க. (எ)

சேர்வன்கொலோவன்னைமீர்திகழும்மலர்ப்பாதங்களை
யார்வங்கொளத்தழுவியணிநீறென்முலைக்கணியச்
சீர்வங்கம்வந்தணையுந்தில்லைமாநகர்ச்சிற்றம்பலத்
தேர்வங்கைமான்மறியனெம்பிரானென்போநேசனையே.

ப-ரை. அன்னைமீர் - தாய்மார்களே, சீர் வங்கம் - சிறந்தமரக்கலங்கள், வந்து அணையும்-வந்துலாவுகிற, தில்லைமாநகர்ச் சிற்றம்பலத்து—, ஏர்வு அம் கை - எழுச்சியையுடைய அழகிய கையினிடத்து, மான் மறியன் - மான்கன்றையுடையவனும், எம்பிரான் - எம்பெருமானும், என்போநேசனை - என்புவநேசனுமாகிய சிவபிரானை, திகழும் - விளங்குகின்ற, மலர் - தாமரைமலர்போன்ற, பாதங்களை - திருவடிகளை, ஆர்வம் கொள தழுவி - ஆசைமிகும்படி தழுவி, அணி நீறு - அழகிய நீற்றை, என் முலைக்கு அணிய - என் முலைமீ தணியும்படி, சேர்வன்கொலோ - அடைவேனோ, எ - று.

வி-ரை. ஏர்வு-அழகுசெய்தல் எனினுமாம். புவநேசன் போநேசனென விகாரமாயிற்று; எல்லா வுலகங்களுக்கும் ஈசன் என்பது பொருள். (அ)

நேசமுடையவர்கணெஞ்சுளேயிடங்கொண்டிருந்த
காய்சினமால்விடையூர்கண்ணுதலைக்காமருசீர்த்
தேசமிகுபுகழோர்தில்லைமாநகர்ச்சிற்றம்பலத்
தீசனையெவ்வுயிர்க்குமெம்மிறைவனென்றேத்துவனே.

ப-ரை. நேசம் உடையவர்கள் - அன்புடையவரது, நெஞ்சுளே - மனத்தினுள்ளே, இடம் கொண்டிருந்த - குடிகொண்டிருந்த; காய் சினம் - சுடுசினத்தையுடைய, மால் விடை ஊர் - பெரிய இடபத்தைச் செலுத்துகிற, கண்ணுதலை - நெற்றிக்கண்ணனை, காமர் சீர் - அழகிய சிறப்பு வாய்ந்த, தேசம் மிகு புகழோர்-ஒளிமிகுந்த புகழையுடையவர் வாழ்கின்ற, தில்லைமாநகர் சிற்றம்பலத்து—, எவ்வுயிர்க்கும் ஈசனை - எல்லாவுயிர்களுக்கும் நியாமகனை, எம் இறைவன் என்று ஏத்துவன் - எமது தலைவனென்று துதிப்பேன், எ-று.

வி-ரை. காமரு என்பதில் உகரம் சாரியை. தேசம் தேஜஸ் என்னும் வடசொற்றிரிபு. (௯)

இறைவனையேத்துகின்றவிளையாண்மொழியின்றமிழான்
மறைவலநாவலர்கண் மகிழ்ந்தேத்துசிற்றம்பலத்தை
யறைசெந்நெல்வான்கரும்பினணியாலைகள்சூழ்மயிலை
மறைவலவாலிசொல்லைமகிழ்ந்தேத்துகவானெளிதே.

ப-ரை. இறைவனை - முதல்வனை, ஏத்துகின்ற - துதிக்கின்ற, இளையாள் மொழி - இளையவள் சொல்லை, இன் தமிழால் - இனிய தமிழால், மறை வல்ல நாவலர்கள் - வேதங்களில் வல்ல நாவலர்கள், மகிழ்ந்து ஏத்து - மகிழ்ந்து துதிக்கின்ற, சிற்றம்பலத்தை—, அறை செந்நெல் - ஒலிக்கின்ற செந்நெல், வான் கரும்பின்-பெருங்கரும்புகளுடனே, அணி ஆலைகள் சூழ் - அழகிய ஆலைகளும் சூழ்ந்த, மயிலை - திருமயிலையில் வாழ்வோனாகிய, மறைவல்ல-வேதங்களில் வல்ல, ஆலி சொல்லை - திருவாலியமுதன் சொல்லை, மகிழ்ந்து ஏத்துக - (யாவரும்) விரும்பித் துதிக்கக்கடவர், (துதித்தால்) விண் எளிது - (அவர்களுக்கு) முத்தி யுலகம் எளிதிற் கிடைக்கும்,எ-று.

வி-ரை. இளையாள்மொழி - பெண்கூற்று. (௧0)

திருச்சிற்றம்பலம்.

# புருடோத்தமநம்பி திருவிசைப்பா.

## க. கோயில்.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வாரணிநறுமலர்வண்டுகிண்டு
பஞ்சமஞ்செண்பகமாலைமாலை
வாரணிவனமுலைமெலியும்வண்ணம்
வந்துவந்திவைநம்மைமயக்குமாலோ
சீரணிமணிதிகழ்மாடமோங்கு
தில்லையம்பலத்தெங்கள்செல்வன்வாரா
னென்னையருள்புரிந்தஞ்சலென்பா
ராவியின்பரமென்றனாதரவே.

ப-ரை. வார் - நீர், அணி நறு மலர் - அழகும் மணமுமுள்ள மலர், வண்டு கிண்டு பஞ்சமம் - வண்டுகள் பாடுகிற பஞ்சமப்பண், செண்பக மாலை - சண்பக மலர்மாலை, மாலை - மாலைப்பொழுது ஆகிய, இவை - இவைகள், வார் அணி-கச்சணிந்த, வனமுலை மெலியும் வண்ணம் - அழகிய தனங்கள் மெலியும்படி, வந்து வந்து - பல கால்வந்து, நம்மை மயக்கும் - எம்மை மயங்கச்செய்யும்; சீர் அணி - சிறப்பும் அழகுமுள்ள, மணி திகழ் - இரத்தினங்களால் பிரகாசிக்கிற, மாடம் ஓங்கு - மாடங்கள் உயர்ந்த, தில்லையம்பலத்து எங்கள் செல்வன்—, வாரான் - வருகின்றிலன்; என்னை அருள்புரிந்து - எனக்கருள் செய்து, அஞ்சல் என்பார் - அஞ்சாதே யென்பவர், ஆர் - யார்; என்றன் ஆதரவே ஆவியின்பரம் - என்னாசை மிகுதியே என்னுயிர்க்குத் தாரகமாம், எ-று.

வி-ரை. வனம் - சந்தனக்கோலம் எனினுமாம். (க)

ஆவியின்பரமென்றனாதரவு
மருவினையேனைவிட்டம்மவம்ம
பாவிவன்மனமிதுபையவேபோய்ப்
பனிமதிச்சடையான்பாலதாலோ

நீவியுநெகிழ்ச்சியுநிறைபழிவு
நெஞ்சமுந்தஞ்சமிலாமையாலே
யாவியின்வருத்தமிதாரறிவா
ரம்பலத்தருநடமாடுவானே.

ப-ரை. அம்பலத்து - தில்லையம்பலத்தில், அரு நடம் ஆடுவானே - அருமையாகிய நடநமாடுவோனே, என்றன் ஆதரவும் - என்னுசை மிகுதியும், ஆவியின் பரம் - உயிரின் பரமேயாம்; அருவினையேனை விட்டு - அருவினையையுடைய என்னை விட்டு, பாவி வல் மனம் இது - பாவியாகிய வலியமனமென்னும் இது, பையவே போய் - மெல்லவே போய், பனி - குளிர்ச்சிபொருந்திய, மதி - பிறையையணிந்த, சடையான் பாலது - சடையையுடையவனுகிய சிவபிரான் பக்கத்ததாயிற்று; நீவியும் - நீவீபந்தமும், நெகிழ்ச்சியும் - நெகிழ்வும், நிறையழிவும் - நிறைகேடும், நெஞ்சமும் - மனமும், தஞ்சம் இல்லாமையாலே - எனக்கு ஆதரவாயில்லாமையாலே, ஆவியின்வருத்தம் இது-என் உயிர்த்துன்பமாகிய இதனை, ஆர் அறிவார் - யாரறியவல்லார், எ-று.

வி-ரை. நீவீபந்தம் - ஒட்டியாணம் (பெண்கள் அரைப்பட்டிகை). அம்மவம்ம - உரையசை. (உ)

அம்பலத்தருநடமாடவேயு
மியாதுகொல்விளைவதென்றஞ்சிநெஞ்ச
மும்பர்கள்வன்பழியாளர்முன்னே
யூட்டினர்நஞ்சையென்றேயுமுய்யேன்
வன்பலபடையுடைப்பூதஞ்சூழ
வானவர்கணங்களைமாற்றியாங்கே
யென்பெருமபயலைமைதீரும்வண்ண
மெழுந்தருளாயெங்கள்வீதியூடே.

ப-ரை. அம்பலத்து - தில்லையம்பலத்தில், அரு - அருமையாகிய, நடம் ஆடவேயும்-நடநஞ்செய்துகொண்டிருக்கவும், உம்பர்கள் - தேவர்களாகிய, வன்பழியாளர் - வலிய பழிகாரர்கள், முன்னே-முற்காலத்தில், நஞ்சை ஊட்டினர் என்றேயும் - நஞ்சையூட்டினூர்களென்றும். விளைவது - இனிபுண்டாவது, யாதுகொல் என்று - யாதோவென்று, நெஞ்சம் அஞ்சி - மனமஞ்சி, உய்யேன்-பிழையேன்; வல் - வலிய, பலபடை உடை - பல படைகளையுடைய, பூதம் சூழ-பூதங்

கள் சூழ்ந்துவர, வானவர் கணங்களை மாற்றி - தேவர்கூட்டங்களை யொழித்து, ஆங்கே - அப்பொழுதே, என் - எனது, பெரு - பெரிதாகிய, பயலைமை - பசலைநிறம், தீரும்வண்ணம்-ஒழியும்வண்ணம், எங்கள் வீதியூடே-எங்கள் தெருவூடே, எழுந்தருளாய் - எழுந்தருள்வாயாக, எ - று.

வி-ரை. கோல் - ஐயம். பயலைமை - பசலைத்தன்மை. (௫)

எழுந்தருளாயெங்கள்வீதியூடே
யேதமின்முனிவரொடெழுந்தஞானக்
கொழுந்ததுவாகியகூத்தனேநின்
குழையணிகாதினின்மாத்திரையுஞ்
செழுந்தடமலர்புரைகண்கண்மூன்றுஞ்
செங்கனிவாயுமென்சிந்தைவெள்வ
வழுந்துமென்னாருயிர்க்கென்செய்கேனோ
வரும்புனலலமருஞ்சடையினானே.

ப-ரை. அரும்புனல் - அருமையாகிய கங்கைநீர், அலமரும் - சுழலும்புகிற, சடையினானே - சடையையுடையவனே, எங்கள் வீதியூடே—, எழுந்தருளாய்-எழுந்தருள்கிலை; ஏதம் இல்-குற்றமில்லாத, முனிவரொடு எழுந்த-முனிவரோடு கூடியெழுந்த, ஞானக்கொழுந்து ஆகிய - ஞானத்தின் முடிவாகிய, கூத்தனே - கூத்துடையானே, நின் - உனது, குழை அணி காதினில் - குழையைத்தரித்த திருச்செவியில், மாத்திரையும்—, செழு தடம் - செழுமையாகிய தடாகத்திற் பூத்த, மலர் புரை-தாமரைமலரை நிகர்த்த, கண்கள் மூன்றும்-மூன்றுகண்களும், செங்கனி வாயும்-செவந்த கோவைக்கனிபோலும் வாயும், என் சிந்தை வெள்வ - என்மனத்தைக் கவர்ந்துகொள்ள, அழுந்தும் - அழுந்துகின்ற, என் ஆர் உயிர்க்கு - எனது அரிய வுயிருக்கு, என் செய்கேனோ - என்செய்யக் கடவேனோ, எ - று.

வி-ரை. ஏதம் - குற்றம்; அது காமம் வெகுளி மயக்கம் என மூவகைப்படும்; இவை முனிவர்க்கிருத்தல் தகாதாதலால் 'ஏதமில் முனிவர்' என்றார். மாத்திரை-காதணியிலொன்று. (௬)

அரும்புனலலமருஞ்சடையினானே
யமரர்களடிபணிந்தரற்றவந்நாட்
பெரும்புரமெரிசெய்தசிலையின்வார்த்தை
பேசவுமையுமென்பேதைநெஞ்சங்

கருந்தடமலர்புரைகண்டவண்டார்
காரிகையார்முன்பென்பெண்மைதோற்றேன்
திருந்தியமலரடிநசையினாலே
தில்லையம்பலத்தெங்கடேவதேவே.

ப-ரை. தில்லையம்பலத்து - தில்லையம்பலத்திலுள்ள, எங்கள் தேவதேவே-எங்கள் தேவதேவனே, அரும் புனல் அலமரும் - அரிதாகிய கங்கைநீர் அலம்புகிற, சடையினானே-சடையையுடையவனே, அமரர்கள்-தேவர்கள், அடி பணிந்து - அடிவணங்கி, அரற்ற-முறையிட, அந்நாள்-அந்நாளில், பெரும்புரம் - பெரிதாகிய முப்புரத்தை, எரிசெய்த-எரித்த, சிலையின் வார்த்தை - (மேரு) வில்லின் விடயத்தை, பேசவும் - பேசினும், என் பேதை நெஞ்சம் - என் பேதை மனமானது, நையும் - வருந்தும்; கரு - கருமையாகிய, தடம் - தடாகத்திற்பூத்த, மலர் புரை - (கருங்குவளை) மலரை நிகர்த்த, கண்ட - கண்டத்தை யுடையவனே, அண்டார் காரிகையார் முன்பு - பகைவராகிய பெண்களுக்கெதிரே, திருந்திய - திருத்தமாகிய, மலர் - தாமரைமலர்போன்ற, அடி - திருவடிமேல் வைத்த, நசையினாலே- ஆசையினாலே, என் பெண்மை தோற்றேன்-என் பெண்தன்மையை யிழந்தேன், எ-று.

வி-ரை. எரிசெய்த ஒருசொல்; எரித்த என்பது பொருள். வார்த்தை - பிரஸ்தாபம். கண்ட என மேல்வருதலால் கருந்தடமலர் கருங்குவளைமலரைக் குறித்தது. வண்டார் காரிகையார் - வளவிய மணமாலையணிந்த மாதர் என்றும், வளையலை யணிந்த மாதர் என்றும் கூறலாம். (கு)

தில்லையம்பலத்தெங்கடேவதேவே
தேறியவந்தணர்சிந்தைசெய்யு
மெல்லையதாகியவெழில்கொள்சோதி
யென்னுயிர்காவல்கொண்டிருந்தவெந்தாய்
பல்லையார்பசுந்தலையோடிடறிப்
பாதமென்மலரடிநோவநீபோ
யல்லினிலருநடமாடிலெங்க
ளாருயிர்காவலிங்கரிதுதானே.

ப-ரை. தில்லையம்பலத்து - தில்லையம்பலத்திலுள்ள, எங்கள் தேவதேவே - எங்கள் தேவதேவனே, தேறிய - மனந்தெளிந்த, அந்

தணர் - மறையோர், சிந்தை செய்யும் - நினைக்கிற, எல்லையதாகிய - எல்லையை யுடையதாகிய, எழில் கொள் சோதி - அழகையுடைய ஒளியே, என் உயிர் காவல்கொண்டு இருந்த - என் உயிரைக் காக்குந் தொழிலை மேற்கொண்டிருந்த, எந்தாய் - எந்தையே, பல்லை ஆர் - பல்லையுடைய, பசு தலையோடு - பசுமையாகிய தலையோட்டை, இடறி - இடறுதல் செய்து, பாதம் மெல் மலர் அது நோவ - திருவடியென்கிற மெல்லிய தாமரைமலராகிய அது வருந்தும்படி, நீ போய்—, அல்லினில் - இரவில், திரு நடம் ஆடில்-அருமையாகிய நடனமாடினால்; இங்கு - இவ்விடத்தில், எங்கள் - எமது, ஆர் - அரிதாகிய, உயிர் காவல் - உயிரைக் காத்துக்கொண்டிருப்பது, அரிது தான் - அரிதேயாம், எ - று.

வி-ரை. எல்லை - சூரியனுமாம். நள்ளிருளில் நீ மயானத்திற்சென்று தலையோடிடறிப் பாதங்கள் நோவ நடனஞ்செய்வதை நோக்கினால் எம்முயிர் நீங்கிவிடுவோமென்பது கருத்து. (சு)

ஆருயிர்காவலிங்கருமையாலே
யந்தணர்மதலைநின்னடிபணியக்
கூர்நுனைவேற்படைக்கூற்றஞ்சாயக்
குரைகழல்பணிகொளமலைந்ததென்றா
லாரினியமரர்கள்குறைவிலாதா
ரவரவர்படுதுயர்களையநின்ற
சீருயிரேயெங்கடில்லைவாணா
சேயிழையார்க்கினிவாழ்வரிதே.

ப-ரை. இங்கு - இவ்விடத்தில், ஆர் உயிர் காவல்-அரியவுயிர் காவலானது, அருமையாலே-அருமையாதலாலே, அந்தணர் மதலை-வேதியர் சிறுவனாகிய மார்க்கண்டன், நின் அடி பணிய - உன் திருவடியை வணங்க, கூர் நுனை-கூர்மையாகிய நுனியையுடைய, வேல் படை - வேலாயுதத்தை யேந்திவந்த, கூற்றம் சாய - யமன் அழிய, குரை கழல் - திருவடியானது, பணி கொள்ள - (அவனை) அடிமை கொள்ளும்படி, மலைந்தது என்றால்-பொருதகென்றால், இனி-இனி, குறைவு இல்லாதார் அமரர்கள் - குறைவற்ற தேவர்கள், ஆர்-யார்; அவரவர்-அவரவர்கள், படு துயர்-படுகின்ற துன்பத்தை, களைய-களையும்பொருட்டு, நின்ற - நிலைபெற்றிருந்த, சீர் உயிரே-சிறந்தவுயிரே, எங்கள் தில்லை வாணா-எமது தில்லைவாணனே, இனி - இனி, சேயிழையார்க்கு-மாதருக்கு, வாழ்வு அரிதே-உயிர் வாழ்ந்திருத்தல் அரிதேயாகும், எ-று.

வி-ரை. கூற்றஞ்சாய என மேல்வருதலால் 'அந்தணர் சிறுவன்' என்றது மார்க்கண்டனைக் குறித்தது. குரைகழல் பணிகொள மலைந்தது உதைத்தது. (எ)

சேயிழையார்க்கினிவாழ்வரிது
திருச்சிற்றம்பலத்தெங்கள்செல்வனேநீ
தாயினுமிகநல்லையென்றடைந்தேன்
றனிமையைநினைகிலைசங்கராவுன்
பாயிரும்புலியதளின்னுடையும்
பையமேலெடுத்தபொற்பாதமுங்கண்
டேயிவளிழந்ததுசங்கமாவா
வெங்களையாளுடையீசனேயோ.

ப-ரை. திருச்சிற்றம்பலத்து-திருச்சிற்றம்பலத்திலுள்ள, எங்கள் செல்வனே—, எங்களை—, ஆளுடை - அடிமைகளாகவுடைய, ஈசனே—, இனி-இனி, சேயிழையார்க்கு-மாதருக்கு, வாழ்வு அரிது-உயிர்வாழ்தல் அரிதாகும்; நீ - நீ, தாயினும் - தாயைப்பார்க்கிலும், மிக நல்லையென்று - மிகநல்லவனென்று நினைத்து, அடைந்தேன்-உன்னையடைந்தேன்; தனிமையை-எனது தனிமையை, நினைகிலை-நினைகின்றிலை; சங்கரா—, உன்-உனது, பாய்-பாய்கிற, இரும் புலியதளின் உடையும்-பெரிய புலித்தோலாகிய ஆடையையும், பைய-மெல்ல, மேல் எடுத்த - தூக்கின, பொன் பாதமும்-பொன்னடியையும், கண்டே - தரிசித்தே, இவள் சங்கம் இழந்தது - இவள் வளையலை யிழந்தது, ஆவா - ஐயோ, எ-று.

வி-ரை. சங்கரன்-சுகத்தைத்தருபவன். புலியதளின் உடையும் என்பதற்குப் புலித்தோலாகிய இனிய ஆடையும் என்றுரைத்தலுமாம்; இதில் இன் அல்வழிச்சாரியை. ஆதள்-தோல். (அ)

எங்களையாளுடையீசனேயோ
விளமுலைமுகநெகமுயங்கிநின்பொற்
பங்கயம்புரைமுகநோக்கிநோக்கிப்
பனிமதிநிலவதென்மேற்படரச்
செங்கயல்புரைகண்ணிமார்கண்முன்னே
திருச்சிற்றம்பலமுடனேபுகுந்து
வங்குனபணிபலசெய்துநாளு
மருள்பெறினகலிடத்திருக்கலாமே.

ப-ரை. எங்களை ஆளுடை ஈசனே—, இளமுலை முகம் நெக-இளமையாகிய தனங்களின் உச்சியமுங்கும்படி, முயங்கி-புணர்ந்து, நின்-உனது, பொன் பங்கயம் புரை-பொற்றாமரை மலரைநிகர்த்த, முகம்-முகத்தை, நோக்கி நோக்கி - பார்த்துப்பார்த்து, பனி - குளிர்ச்சி பொருந்திய, மதி நிலவு-சந்திரகிரணமானது, என்மேல் படர - என் மேல்பரவ, செங்கயல் புரை - செங்கயலை நிகர்த்த, கண்ணிமார்கள் முன்னே - கண்களை யுடையவர்களாகிய மாதர்களுக்கெதிரே, திருச்சிற்றம்பலம் உடனே புகுந்து-திருச்சிற்றம்பலத்தில் உடனே யடைந்து, அங்கு - அவ்விடத்தில், உன பல பணி - உன்னுடைய பல திருப்பணிகளையும், நாளும் செய்து - நாடோறும் செய்து, அருள் பெறின் - உன் அருளைப்பெற்றால், அகலிடத்து இருக்கலாம் - இவ்வுலகத்தி லிருக்கலாம், எ-று.

வி-ரை. பங்கயம் - சேற்றில் முளைப்பது. மதி - இறைவன் திருமுடிமேலுள்ள ஒருகலைச் சந்திரன். (க)

அருள்பெறினகலிடத்திருக்கலாமென்
றமரர்கடலைவனுமயனுமாலு
மிருவருமறிவுடையாரின்மிக்கா
ரேத்துகின்றாரின்னமெங்கள்கூத்தை
மருள்படுமழலைமென்மொழியுமையாள்
கணவனைவல்வினையாட்டியேனு
னருள்பெறவலமருநெஞ்சமாவா
வாசையையளவறுத்தாரிங்காரே.

ப-ரை. அருள் பெறின் அகலிடத்திருக்கலாமென்று—, அமரர்கள் தலைவனும் - தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனும், அயனும் - பிரமனும், மாலும் - திருமாலும், (ஆகிய) அறிவுடையாரில் மிக்கார் - அறிவுடையவரில் மேற்பட்டவராகிய, இருவரும்—, எங்கள் கூத்தை - எங்கள் கூத்தனை, இன்னம் ஏத்துகின்றார் - இன்னம் துதிக்கிறார்கள்; மருள்படும் - மயக்கமுண்டாதற்கேதுவாகிய, மெல் - மெல்லிய, மழலைமொழி - மழலைச்சொல்லையுடைய, உமையாள்-உமாதேவிக்கு, கணவனை - நாயகனை, வல்வினையாட்டியேன் நான் - வலிய வினையையுடையேனாகிய நான், அருள் பெற - அருள் பெறும்பொருட்டு, நெஞ்சம்-என்மனமானது, அலமரும்-சுழலாநின்றது; ஆவா-அந்தோ, ஆசையை—, அளவறுத்தார் - அளவறுத்தறிந்தவர், இங்கு ஆர் - இவ்வுலகத்தில் யாருளர், எ-று.

வி-ரை. கூத்தனைக் கூத்து என்றார். வல்வினை - ஒழித்தற்கரிதாகியவினை. ஆர் என்றது ஒருவருமில்லை யென்றபடி. (க0)

ஆசையையளவறுத்தாரிங்காரே
யம்பலத்தருநடமாடுவானை
வாசநன்மலரணிகுழன்மடவார்
வைகலுங்கலந்தெழுமாலைப்பூசன்
மாசிலாமறைபலவோதுநாவன்
வண்புருடோத்தமன்கண்டுரைத்த
வாசகமலர்கள்கொண்டேத்தவல்லார்
மலைமகள்கணவனையணைவர்தாமே.

ப-ரை. ஆசையை அளவறுத்தார் இங்கு ஆரே—, அம்பலத்து—, அரு-அருமையாகிய, நடம் ஆடுவானை-நடனமாடுகிறவனை, வாசம் - மணத்தையுடைய, நல் மலர் அணி-நல்லமலர்களையணிந்த, குழல் - கூந்தலையுடைய, மடவார் - மாதர்கள், வைகலும் - நாள்தோறும், கலந்து எழும் - கூடியெழுகின்ற, மாலைப்பூசல் - மாலைப்பூசலை, மாசு இல்லா-குற்றமில்லாத, மறை பல ஓதும் நாவன் - பலவாகிய வேதங்களையோதுகின்ற நாவையுடையவன், வண்புருடோத்தமன்—, கண்டு உரைத்த-கண்டுசொன்ன, வாசகம்-பாடல்களை. மலர்கள்கொண்டு - மலர்களால், ஏத்தவல்லார்-ஏத்த வல்லவர்கள், மலைமகள் கணவனை-உமாதேவிக்கு நாயகனாகிய சிவபிரானை, அணைவர் - அடைவார்கள், எ-று.

வி-ரை. வைகல்-நாள். மாலைப்பூசல் - மாலைக்காலத்துப்போர்; அது அந்திவான் முதலியவற்றை நோக்கி மாதர் இரங்குவது. நிர்தோஷங்களான வேதங்கள் என்பதற்கு 'மாசிலாமறைபல' என்றார். வாசகமலர்கள் பாடல்களாகிய மலர்கள் எனினுமாம். (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## உ - கோயில்.

பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வானவர்கள்வேண்டவளர்நஞ்சையுண்டார்தா
மூனமிலாவென்கையொளிவளைகள்கொள்வாரோ
தேனல்வரிவண்டறையுந்தில்லைச்சிற்றம்பலவர்
நானமரோவென்றுதேநாடகமேயாடுவரே.

ப-ரை. வானவர்கள் வேண்ட - தேவர்கள் பிரார்த்திக்க, வளர் நஞ்சை - வளராநின்றநஞ்சினை, உண்டார் - உண்டவராகிய சிவபிரானார், ஊனம் இல்லா - குறைவில்லாத, என்கை - என் கையிலுள்ள, ஒளி வளைகள் கொள்வாரோ - ஒளியையுடைய வளையல்களைக் கவர்வாரோ, தேன் நல்லரிவண்டு அறையும்-தேன்காரணமாக நல்ல இராகத்தைப் பாடுகிற வண்டுகள் ஒலிக்கிற, தில்லைச்சிற்றம்பலவர்—, நானமரோ என்னாதே—, நாடகம் ஆடுவர் - நடநமாடுவர், எ-று.

வி-ரை. வானவர் - விண்ணுலகத்திருப்பவர். வளர்நஞ்சு-ஆலாகலவிஷம். (௯)

ஆடிவருங்காரரவுமைம்மதியும்பைங்கொன்றை
சூடிவருமாகண்டேன்றோள்வளைகடோற்றாலுந்
தேடியிமையோர்பரவுந்தில்லைச்சிற்றம்பலவ
ராடிவரும்போதருகேநிற்கவுமோவொட்டாரே.

ப-ரை. ஆடிவரும்-ஆடிவருகிற, கார் அரவும்-கரிய அரவத்தையும், ஐ மதியும்-அழகிய சந்திரனையும், பை கொன்றை - பசியகொன்றைமலர் மாலையையும், சூடி வருமாறு-சூடிவரும் விதத்தை, கண்டேன் - தரிசித்தேன்; தோள்வளைகள் தோற்றாலும் - தோள்வளைகளை யிழந்தாலும், தேடி இமையோர் பரவும் - தேவர்கள் தேடித்துதிக்கின்ற, தில்லைச்சிற்றம்பலம்—, ஆடிவரும்போது—, அருகே நிற்கவும் ஒட்டார்—, எ - று.

வி-ரை. வருமாறு என்பது ஈறுதொகுத்தலாய் வருமா என்றாயிற்று. தோள்வளை - கேயூராதிகள். (௨)

ஒட்டாவகையவுணர்முப்புரங்களோரம்பாற்
பட்டாங்கழல்விழுங்கவெய்துகந்தபண்பினார்
சிட்டார்மறையோவாத்தில்லைச்சிற்றம்பலவர்
கொட்டாநடமாடிக்கோல்வளைகள்கொள்வாரே.

ப-ரை. ஒட்டாவகை-பொருந்தாதவகையையுடைய, அவுணர் - அவுணர்களுடைய, முப்புரங்கள் - முப்புரங்களை, ஓர் அம்பால் - ஒரு அம்பினால், பட்டு - அழிந்து, ஆங்கு-அப்பொழுதே, அழல் விழுங்க - நெருப்புண்ணும்படி, எய்து உகந்த - எய்து மகிழ்ந்த, பண்பினார் - குணத்தையுடையவர், சிட்டம் ஆர் - மேன்மைபொருந்திய, மறை ஓவா-வேதமுழக்கம் நீங்காத, தில்லைச்சிற்றம்பலவர்—, கொட்டா - கைகொட்டி, நடம் ஆடி - நடநமாடி, கோல்வளைகள் கொள்வாரோ - அழகிய வளையல்களைக் கவர்வாரோ, எ - று.

வி-ரை. ஒட்டாவகை - பகை. அவுணர் என்றது திரிபுரவாசிகளை. முப்புரத்தை யெரித்தது ஒரு கணையே யாதலால் 'முப்புரங்களோரம்பால்,பட்டாங்கழல் விழுங்கவெய்துகந்தபண்பினர்'' என்றார். ''ஈரம்பு கண்டில மேகம்பர் தங்கையில், ஓரம்பே முப்புர முந்தீபற, ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற'' என்றார் மணிவாசகரும். சிட்டமார் என்பது சிட்டார் என விகாரமாயிற்று. கொட்டா - செய்யாவென் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். (ரு.)

ஆரேயிவைபடுவாரையங்கொளவந்து
போரேடியென்றுபுருவமிடுகின்றார்
தேரார்விழவோவாத்தில்லைச்சிற்றம்பலவர்
தீராநோய்செய்வாரையொக்கின்றார்காணீரே.

ப-ரை. ஐயம் கொள்ள வந்து - பிச்சையேற்கவந்து, போரேடி என்று - போர்செய்வமடியென்று, புருவமிடுகின்றார் - பூருவம் பேசுகிறார், தேர்ஆர் விழவு ஓவா-தேரோடுகிற திருவிழாநீங்காத, தில்லைச் சிற்றம்பலவர்—, தீராநோய் செய்வாரை ஒக்கின்றார்-ஒழியாத நோய் செய்வாரை யொத்திருக்கிறார், காணீரே - நீங்கள் காண்கிலீரோ, இவை படுவார் ஆர் - இத்துன்பங்களை யநுபவிப்பவர் யார், எ - று.

வி-ரை. பூருவம் புருவம் எனக் குறுக்கலாயிற்று. பூருவமிடுகின்றார்-பூர்வவிருத்தாந்தம் பேசுகிறார். புருவமிடுகின்றார் என்பதையே பாடமாகக்கொண்டு எம்மீது கண்வைக்கிறார் என்றுரைத்தலுமாம்.

காணீரேயென்னுடையகைவளைகள்கொண்டார்தாஞ்
சேணார்மணிமாடத்தில்லைச்சிற்றம்பலவர்
பூணார்வனமுலைமேற்பூவம்பாற்காமவே
ளாணுடுகின்றவாகண்டுமருளாரே.

ப-ரை. சேண் ஆர் - ஆகாயத்தையளாவிய, மணி மாடம் - ரத்னமயமான மாளிகைகளையுடைய, தில்லைச்சிற்றம்பலவர்—, என்னுடைய கைவளைகள் கொண்டார்—, காணீரே-நீங்கள் காண்கிலீரோ, பூண் ஆர் - ஆபரணங்கள் நிறைந்த, வனம் - அழகாகிய, முலைமேல்-தனங்களின்மீது, காமவேள் - மன்மதனெனவன், பூ அம்பால்-மலர்க்கணையால், ஆணுடுகின்றவாறு கண்டும் - ஆண்மை செலுத்துவதைப் பார்த்தும், அருளார் - அருள்செய்யாதிருக்கிறார், ஏ - என் தீவினையிருந்தவாறென்னை, எ - று.

வி-ரை. வனம் - சந்தனக்கோலமெனினுமாம். ஆடுகின்றவாறு என்பது ஆடுகின்றவா எனத்தொகுத்தல் பெற்றது. காமவேள்-இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. வேள் - விருப்பத்தை யுண்டாக்கு வோன். (ரு)

எயிவரேவானவர்க்கும்வானவரேயென்பாராற்
றுயிவரேயெல்லார்க்குந்தந்தையுமாமென்பாராற்
றேய்மதியஞ்சூடியதில்லைச்சிற்றம்பலவர்
வாயினகேட்டறிவார்வையகத்தாராவாரே.

ப-ரை. எய இவரே-பொருந்திய இவரே, வானவர்க்கும் வான வர் என்பார்-தேவர்களுக்கும் தேவர் என்று சொல்லுவர், இவரே—, எல்லார்க்கும் - யாவர்க்கும், தாய் தந்தையும் ஆம் என்பார் - தாயுந்தந் தையுமாவர் என்று சொல்லுவர், தேய்மதியம் சூடிய - குறைபிறை யைத்தரித்த, தில்லைச்சிற்றம்பலவர் - தில்லைச்சிற்றம்பலவரது, வா யின கேட்டறிவார் - திருவாயில் தோன்றினவையாகிய வேதசிவாக மாதிகளைக் கேட்டறிபவர், வையகத்தார் ஆவார் - உலகமுழுதும் உடையாராவர், எ - று.

வி-ரை. தேய்மதியம்-ஒருகலையாகிய சந்திரன். வையகத்தார் - உலக முழுதும் ஆளுதற்குரிய சக்கிரவர்த்திகள். (சு)

ஆவாவிவர்தந்திருவடிகொண்டந்தகன்றன்
மூவாவுடலவியக்கொன்றுகந்தமுக்கண்ணர்
தேவாமறைபயிலுந்தில்லைச்சிற்றம்பலவர்
கோவாவினவளைகள்கொள்வாரோவென்னையே.

ப-ரை. ஆவா-அந்தோ, இவர்—, தம் திருவடிகொண்டு-தமது திருவடியால், அந்தகன் - யமனது, மூவா உடல் அவிய - முதிராத உடம்பழியும்படி, கொன்று உகந்த-அவனைக்கொன்று மகிழ்ந்த, முக் கண்ணர் - மூன்றுகண்களையுடையவர், தேவு ஆம் - தெய்வத்தன்மை பொருந்திய, மறை பயிலும்-வேதங்கள் முழங்குகிற, தில்லைச்சிற்றம் பலவர்—, என்னை - எனது, கோவா-கோக்கப்படாத, இனவளைகள் கொள்வாரோ - கூட்டமாகிய வளையல்களைக் கவர்வாரோ, எ - று.

வி-ரை. அந்தகன்தன் என்பதில் தன் சாரியை. கோவா-கோ த்து எனினுமாம். என்னை-உருபுமயக்கம். (எ)

என்னைவலியாராரென்றவிலங்கையர்கோன்
மன்னுமுடிகணெரித்தமணவாளர்

செந்நெல்விளைகழனித்தில்லைச்சிற்றம்பலவர்
முன்னந்தான்கண்டறிவாரொவ்வாரிம்முத்தரே.

ப-ரை. என்னை - எனது, வலி - வலிமைக்கு, வாரார் - ஒருவரும் நிகராகமாட்டார், என்ற - என்று செருக்கின, இலங்கையர்கோன் - இலங்கையர்க் கரசனாகிய ராவணனுடைய, மன்னும் - நிலைபெற்ற, முடிகள் - தலைகளை, நெரித்த - நெரிவித்த, மணவாளர் - மணாளர், செந்நெல் விளை-செந்நெல் விளைகின்ற, கழனி - வயல்கள் சூழ்ந்த, தில்லைச்சிற்றம்பலவர்—, முன்னம் தாம் கண்டறிவார்-முன்னமே தாம் கண்டறிவார், ஒவ்வார் இம்முத்தர் - இந்த முத்தர் ஒவ்வார், எ-று.

வி-ரை. என்னை - உருபுமயக்கம். இறைவர் நித்திய கலியாணராதலால் 'மணவாளர்' என்றார். முத்தர் - பாசநீக்கமுடையவர். (அ)

முத்தர்முதுபகலேவந்தென்றனில்புகுந்து
பத்தர்பலியிடுகவென்றெங்கும்பார்க்கின்றார்
சித்தர்கணம்பயிலுந்தில்லைச்சிற்றம்பலவர்
கைத்தலங்கள்வீசிநின்றாடுங்கானோக்காரே.

ப-ரை. முத்தர்—, முதுபகலே வந்து-உச்சிக்காலத்தில் வந்து, என்றன் இல் புகுந்து - என்வீட்டிற் புகுந்து, பத்தர் - பத்தராயிருப்பவர், பலியிடுக என்று - பிச்சையிடக்கடவதென்று சொல்லி, எங்கும் பார்க்கின்றார் - எவ்விடத்திலும் நோக்குகின்றார்; சித்தர் கணம் பயிலும் - சித்தர் கூட்டங்கள் நெருங்குகிற, தில்லைச்சிற்றம்பலவர்—, கைத்தலங்கள் வீசிநின்று - கைகளை வீசிநின்று, ஆடுங்கால் - ஆடுங்காலத்தில், நோக்கார் - நோக்கமாட்டார், எ-று.

வி-ரை. சித்தர் - ஞானவான்கள். சித்து - ஞானம். பயிலும் என்பதற்கு வாசம்பண்ணுகிற என்றுரைத்தலுமாம். (கூ)

நோக்காததன்மையானோக்கிலோமியாமென்று
மாற்காழியீந்துமலரோனைநிந்தித்துச்
சேக்காதலித்தேறுந்தில்லைச்சிற்றம்பலவ
னூர்க்கேவந்தென்வளைகள்கொள்வாரோவொண்ணுதலீர்.

ப-ரை. ஒள் நுதலீர் - அழகாகிய நெற்றியை யுடையவராகிய மாதரே, நோக்காத தன்மையால் - பார்க்காத தன்மையால், யாம் நோக்கிலோம் என்று - யாம் பார்க்கிலோமென்று, மாற்கு - திரு

மாலுக்கு, ஆழி ஈந்து - சக்கரத்தைக் கொடுத்து, மலரோனை நிந்தித்து - பிரமனை நிந்தித்து, சே - இடபத்தின்மேல், காதலித்து ஏறும் - விரும்பியேறுகிற, தில்லைச்சிற்றம்பலவர்—, ஊர்க்கே வந்து—, என்வளைகள் கொள்வாரோ - என் வளையல்களைக் கவர்வாரோ, எ-று.

வி-ரை. நோக்காத தன்மையால் நோக்கலாவது - முகக்கண்ணால் நோக்காது அகக்கண்ணால் நோக்குதல், (௧0)

ஒண்ணுதலிகாரணமாவும்பர்தொழுதேத்துங்
கண்ணுதலான்றன்னைப்புருடோத்தமன்சொன்ன
பண்ணுதலைப்பத்தும்பயின்றாடிப்பாடினா
ரெண்ணுதலைப்பட்டங்கினிதாவிருப்பாரே.

ப-ரை. ஒண்ணுதலி காரணமா - ஒருமாது காரணமாக, உம்பர் தொழுது ஏத்தும் - தேவர்கள் வணங்கித்துதிக்கிற, கண்ணுதலான்தன்னை - நெற்றிக் கண்ணனாகிய சிவபெருமானை, புருடோத்தமன் சொன்ன—, பண் நுதல் - பண்களோடு கூடிய, ஐ - அழகிய, பத்தும் - பத்துப்பாடல்களையும், பயின்று - கற்று, ஆடிப்பாடினார்-ஆடிப்பாடினவர்கள், எண்ணுதலைப்பட்டு - மதிக்கப்பட்டு, அங்கு - அந்த முத்தி யுலகத்தில், இனிதா இருப்பார் - இனிதாயிருப்பார்கள், எ-று.

வி-ரை. எல்லாவுலகங்களுக்கும் மேற்பட்டதா யிருத்தலால் முத்தியுலகத்தை அங்கு எனச் சேய்மைச் சுட்டாற் சுட்டினார். ஆடிப்பாடுதற்குக் காரணம் பயில்கையாதலால் 'பயின்றாடினார்' என்றார். பயிலுதலா லுண்டாகும் ஆநந்த மேலீட்டால் ஆடிப்பாடுவாரென்பது கருத்து. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# சேதிராயர் திருவிசைப்பா.

## கோயில்.

பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

சேலுலாம்வயற்றில்லையுளீருமைச்
சாலநாளயன்சார்வதினாலிவள்
வேலையார்விடமுண்டுகந்தீரென்று
மாலதாகுமென்வாணுதலே.

ப-ரை. சேல் உலாம் வயல் - சேல்மீன்கள் உலாவுகிற வயல்கள் சூழ்ந்த, தில்லையுள்ளீர் - தில்லையில்வாழ்பவரே, உம்மை—, சாலநாள்-நெடுநாள், அயன் சார்வதினால்-பிரமன் சார்ந்திருத்தலால், இவள் - இந்தமாதானவள், வேலை ஆர் விடம்-பாற்கடலிற்றோன்றிய நஞ்சை, உண்டு உகந்தீர் என்று - உண்டுமகிழ்ந்தீரென்று, என் வாணுதல் - என்பெண்ணானவள், மால் ஆகும் - மயக்கத்தையடைகிறாள், எ-று.

வி-ரை. மாலாகும் என்பதனை ஒருசொல்லாக்கி மயங்குவாள் என்றுரைப்பினுமாம். (க)

வாணுதற்கொடிமாலதுவாய்மிக
நாணமற்றனளுனறியேனினிச்
சேணுதற்பொலிதில்லையுளீருமைக்
காணிலெய்ப்பிலள்காரிகையே.

ப-ரை. வாள்நுதல்-ஒளிபொருந்திய நெற்றியையுடைய, கொடி-பூங்கொடிபோல்பவள், மாலாய் - மயக்கங்கொண்டு, மிக நாணம் அற்றனள் - மிகவும் நாணத்தை யிழந்துவிட்டாள், இனி-இனி நடக்கிற செய்தியை, நான் அறியேன்—, சேண்நுதல் பொலி - ஆகாய முகட்டில் விளங்குகிற, தில்லையுள்ளீர்—, உம்மை காணில் - உம்மைக் கண்டால், காரிகை - இந்தப்பெண்ணானவள், எய்ப்பு இலள் - மெலிவில்லாதவளாவாள், எ-று.

வி-ரை. எய்ப்பு - இளைப்பு. காரிகை - அழகு, அது அழகுடையவளை யுணர்த்தலால் பண்பாகுபெயர். (உ)

காரிகைக்கருளீர்கருமால்கரி
யீருரித்தெழுபோர்வையினீர்மிகு
சீரியற்றில்லையாய்சிவனேயென்று
வேரிநற்குழலாளிவள்விம்முமே.

ப-ரை. கரு-கரிய, மால் கரி-பெரியயானையை, உரித்து - தோலுரித்து, எழு - அச்சமுண்டாகிய, ஈர் போர்வையினீர் - குளிர்ந்த போர்வையையுடையவரே, வேரி- வாசனைபொருந்திய, நல் குழலாள்- அழகிய கூந்தலையுடையவளாகிய, இவள் - இந்தப் பெண்ணானவள், மிகு சீர் இயல் - மிகுந்த சிறப்புப்பொருந்திய, தில்லையாய் - தில்லையையுடையவனே, சிவனே - சிவபிரானே, என்று - என்றுசொல்லி, விம்மும் - அழாநின்றாள்; (ஆதலால்) காரிகைக்கு - இந்தப்பெண்ணுக்கு, அருளீர் - அருள்செய்யக்கடவீர், எ-று.

வி-ரை. மால்கரி - மதத்தால் மயங்குகிறயானை யெனினுமாம்.

விம்மிவிம்மியேவெய்துயிர்த்தாளென
வும்மையேநினைந்தேத்துமொன்றாகிலள்
செம்மலோர்பயில்தில்லையுளீரெங்க
ளம்மலோதியயர்வுறுமே.

ப-ரை. செம்மலோர் பயில் - பெருமையுடையோர் வாழ்கின்ற, தில்லையுள்ளீர் - தில்லையில் வாழ்பவரே, எங்கள் - எம்முடைய, அம் - அழகாகிய, மல் - வளம்பொருந்திய, ஓதி - கூந்தலையுடையவள், விம்மி விம்மி - அழுதழுது, வெய்து உயிர்த்து-வெப்பமாக மூச்சுவிட்டு, ஆள் என்ன - என்னை யாளக்கடவையென்று, உம்மையே நினைந்து—, ஏத்தும் - துதிப்பாள், ஒன்று ஆகிலள் - ஒருபொருளு மாகாதவளாய், அயர்வுறும்-அயர்கின்றாள், எ-று.

வி-ரை. என - செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். அயர்வுறும் - அயர்வையடைகிறாள் எனினுமாம். (ச)

அயர்வுற்றஞ்சலிகூப்பியந்தோவெனை
யுயவுன்கொன்றையந்தாரருளாயெனுஞ்
செயலுற்றார்மதிற்றில்லையுளீரிவண்
மயலுற்றாளென்றன்மாதிவளே.

ப-ரை. அயர்வுற்று - அயர்ந்து, அஞ்சலி கூப்பி - அஞ்சலியா கக் கைகுவித்து, அந்தோ - ஐயோ, என்னை - அடியேனை, உய்ய - உய்யும்படி, உன் - உனது, கொன்றை - கொன்றைமலர்களால் தொடுக்கப்பட்ட, அம் தார் - அழகியமாலையை, அருளாய் என்னும் - அருள்செய்யக்கடவையென்று சொல்லுகிறாள்; (ஆதலால்) செயல் உற்று - தண்டொழி லமைந்து, ஆர் - நிறைந்த, மதில் - மதில் சூழ்ந்த, தில்லையுள்ளீர் - தில்லையில் வாழ்பவரே, என்றன் மாது இவள் - என் பெண்ணாகிய இவள், இவண் மயலுற்றாள் - இவ்விடத் தில் மயக்கமடைந்தாள், எ-று.

வி-ரை. உய்ய - பிழைக்க. (டு)

மாதொர்கூறன்வண்டார்கொன்றைமார்பனென்
றோதிலுய்வனென்ணொள்பைங்கிளியேயெனுஞ்
சேதித்தீர்சிரநான்முகனைத்தில்லை
வாதித்தீரென்மடக்கொடியையே.

ப-ரை. மாது - பெண்ணை, ஓர் கூறன் - ஒரு பாகத்திலுடை யவனாகிய சிவபிரான், வண்டு ஆர்-வண்டுகள் மொய்க்கின்ற, கொன் றை - கொன்றைமலர் மாலையை யணிந்த, மார்பன் - திருமார்பை யுடையவன், என்று ஓதில் - என்று சொன்னால், ஒள் பை கிளியே - அழகிய பசுங்கிளியே, உய்வன் என்னும் - நான் பிழைப்பேனென்று சொல்லுகிறாள்; (ஆதலால்) நான்முகனை - பிரமனை, சிரம் சேதித் தீர் - சிரமறுத்தவரே, தில்லை - தில்லையில், என் மடக்கொடியை - என் இளங்கொடிபோன்றவளாகிய பெண்ணை, வாதித்தீர் - வருத்தி னீர், எ-று.

வி-ரை. மாது-பெண், அது இங்கு உமாதேவியைக் குறித்தது, ஓர் கூறன் என மேல் வருகையால். வாதித்தல்-வருத்துதல். மடம் இங்கு இளமை குறித்தது. சேதித்தல் - வெட்டுதல். (சு)

கொடியைக்கோமளச்சாதியைக்கொம்பிளம்
பிடியையென்செய்திட்டீர்பகைத்தார்புர
மிடியச்செஞ்சிலைகால்வளைத்தீரென்று
முடியுநீர்செய்தமூச்சறவே.

ப-ரை. பகைத்தார் - பகைத்தவருடைய, புரம் - முப்புரம், இடிய - அழியும்படி, செஞ்சிலை கால்வளைத்தீர் - செவ்விய வில்லைக்

கால்வளைத்தீர், என்று - என்றுசொல்லி, நீர் செய்த மூச்சு அற - நன்மைசெய்கிற மூச்சொழிய, முடியும்-இறந்துபடுவாள். கொடியை - கொடிபோல்பவளை, கோமளச் சாதியை - மெல்லியலை, கொம்பு - கொம்பினையுடைய, இளம்பிடியை - இளமையாகிய பெண்யானையை, என் செய்திட்டீர் - என்செய்துவிட்டீர், எ-று.

வி-ரை. கோமளம் - மென்மை. கொம்பு என்றது தனங்களை. செஞ்சிலை யென்றார் மேரு செம்பொன் மலையாதலால். நீர் - குணம், அது இங்கு நற்குணத்துக்காயிற்று. (எ)

அறவனேயன்றுபன்றிப்பினேகிய
மறவனேயெனைவாதைசெய்யேலெனுஞ்
சிறைவண்டார்பொழிற்றில்லையுளீரெனும்
பிறைகுலாநுதற்பெய்வளையே.

ப-ரை. பிறை குலாம் - பிறைபோல விளங்குகிற, நுசல் - நெற்றியையுடைய, பெய்வளை - என் பெண்ணானவள், அறவனே - தருமவுருவினனே, அன்று - அந்நாளில், பன்றிப்பின் ஏகிய-பன்றியின் பின்னே சென்ற, மறவனே - வேடனே, என்னை வாதை செய்யேல் என்னும் - என்னைத் துன்பப்படுத்தாதே யென்கிறாள்; சிறை வண்டு - சிறகுகளையுடைய வண்டுகள், ஆர் - நிறைந்த, பொழில் - சோலைகள் சூழ்ந்த, தில்லையுள்ளீர் என்னும் - தில்லையில் வாழ்பவரே யென்கிறாள், எ-று.

வி-ரை. பெய்வளை - வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர், இடப்பட்ட வளையலையுடையவள் என்பது பொருள். அன்று என்றது அருச்சுநனோடு பொருத காலத்தை. (அ)

அன்றருக்கனைப்பல்லிறுத்தானையைக்
கொன்றுகாலனைக்கோளிழைத்தீரெனுந்
தென்றலார்பொழிற்றில்லையுளீரிவ
ளொன்றுமாகிலளும்பொருட்டே.

ப-ரை. அன்று - அந்நாளில், அருக்கனை - சூரியனை, பல் இறுத்து - பல்லொடித்து, ஆனையை கொன்று—, காலனை - யமனை, கோள் இழைத்தீர் - துன்பஞ்செய்தவரே, என்னும்-என்று சொல்லுவாள்; தென்றல் ஆர் - தென்றற்காற்றுலாவுகின்ற, பொழில் - சோலைகளையுடைய, தில்லையுள்ளீர் - தில்லையில்வாழ்பவரே, இவள் -

இந்தப்பெண்ணனவள், உம்பொருட்டு - உம்பொருட்டாக, ஒன்றும் ஆகிலள் - ஒரு பொருளுமாகின்றிலள், எ-று.

வி-ரை. அன்று என்றது தக்கன் வேள்வியை யழித்த நாளைக் குறிக்கும். கோளிழைத்தது - உதைத்தது. (கூ)

ஏயுமாறெழிற்சேதிபர்கோன்றில்லை
நாயனாரைநயந்துரைசெய்தன
தூயவாறுரைப்பார்துறக்கத்திடை
யேயவின்பமெய்தியிருப்பரே.

ப-ரை. ஏயும் ஆறு - பொருந்தும் விதமாக, எழில்-அழகாகிய, சேதிபர்கோன் - சேதிராயன், தில்லை நாயனாரை - தில்லைநாதரை, நயந்து உரைசெய்தன - விரும்பிச் சொன்னவையாகிய இந்தப் பத்துப் பாடல்களையும், தூயவாறு - பரிசுத்தமான நெறியாலே, உரைப்பார் - படிப்பவர், துறக்கத்திடை - விண்ணுலகத்தில்,ஏய - பொருந்திய, இன்பம் - சுகத்தை, எய்தி இருப்பர் - அடைந்து வாழ்வார், எ-று.

வி-ரை. நாயன் நாதன் என்னும் வடசொற்றிரிபு. துறக்கம்-விண்ணுலகம், அது இங்கு சிவநகரைக் குறிக்கும். (க0)

திருச்சிற்றம்பலம்.

## திருவிசைப்பா மூலமும் உரையும்

முற்றிற்று.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

சேந்தனாரருளிச்செய்த

# திருப்பல்லாண்டு.

## கோயில்.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மன்னுகதில்லைவளர்கநம்பத்தர்கள்
வஞ்சகர்போயகலப்
பொன்னிற்செய்மண்டபத்துள்ளேபுகுந்து
புவனியெல்லாம்விளங்க
வன்னநடைமடவாளுமைகோனடியோமுக்
கருள்புரிந்து
பின்னைப்பிறவியறுக்கநெறிதந்தபித்தற்குப்
பல்லாண்டுகூறுதுமே.

**ப-ரை.** தில்லை - தில்லைநகர், மன்னுக - நிலைபெறுக; நம் பத்தர்கள் - நமதடியார்கள், வளர்க - விருத்தியடைக; வஞ்சகர் போய் அகல - வஞ்சகர்கள் நீங்கியொழிக; பொன்னிற்செய் - பொன்னினாற் செய்யப்பட்ட, மண்டபத்துள்ளே புகுந்து—, புவனி யெல்லாம் விளங்க - உலகமுழுதும் விளங்க, அன்னம் நடை - அன்னநடை போலும் நடையையுடைய, மடவாள்-மாதாகிய, உமை கோன் - உமாதேவி நாயகனாகிய சிவபெருமானது, அடியோமுக்கு - அடியோங்களுக்கு, அருள் புரிந்து-அருள்செய்து, பின்னை-இனிமேல் வரக்கடவதாகிய, பிறவி - பிறப்பை, அறுக்க - அறுக்கும்பொருட்டு, நெறி தந்த - முத்திநெறியைத்தந்த, பித்தற்கு - பித்தனாகிய சிவபிரானுக்கு, பல்லாண்டு கூறுதும் - பல்லாண்டு சொல்வோம், எ - று.

**வி-ரை.** பொன்னின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப்பொருளில் வந்தது. முத்திநெறி - முத்தியடைதற்குரிய நெறி, அது ஞானமார்க்கம். (க)

மிண்டுமனத்தவர்போமின்கண்மெய்யடியார்கள்
விரைந்துவம்மின்
கொண்டுங்கொடுத்துங்குடிகுடியீசற்காட்
செய்மின்குழாம்புகுந்
தண்டங்கடந்தபொருளளவில்லதோ
ரானந்தவெள்ளப்பொருள்
பண்டுமின்றுமென்றுமுள்ளபொருளென்றே
பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை. மிண்டு - மாறுபடுகின்ற, மனத்தவர்-மனத்தினையுடையவர்கள், போமின்கள் - போங்கள்; மெய் அடியார்கள்-மெய்யடியாரயிருப்பவர்கள், வம்மின் - வாருங்கள்; கொண்டும் கொடுத்தும்—, குடிகுடி - வழிவழியாக, ஈசற்கு-ஈசனுக்கு, குழாம் புகுந்து - கூட்டமாகச்சென்று, ஆள் செய்மின் - தொண்டுசெய்யுங்கள்; அண்டம் கடந்த பொருள் - எல்லா வுலகங்களையும் கடந்த பொருள், அளவில்லது - அளவில்லதாகிய, ஓர் - ஒப்பற்ற, ஆனந்த வெள்ளப்பொருள் - இன்பப்பெருக்காகிய பொருள், பண்டும் இன்றும் என்றும் உள்ள பொருள் - முற்காலத்தும் இக்காலத்தும் எக்காலத்தும் உள்ள பொருள், என்றே-என்று சொல்லிக்கொண்டே, பல்லாண்டு கூறுதும் - பல்லாண்டு சொல்வோம், எ - று.

வி-ரை. மிண்டுதல் - மாறுபடுதல். (உ)

நிட்டையிலாவுடனீத்தென்னையாண்ட
நிகரிலாவண்ணங்களுஞ்
சிட்டன்சிவனடியாரைச்சீராட்டுந்
திறங்களுமேசிந்தித்
தட்டமூர்த்திக்கென்னகநெகவூறு
மமிர்தினுக்காலநிழற்
பட்டனுக்கென்னைத்தன்பாற்படுத்தானுக்கே
பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை. நிட்டை இல்லா - நிஷ்டை யில்லாத, உடல் - உடம்பை, நீத்து - நீக்கி, என்னை ஆண்ட - என்னை ஆண்டருளின, நிகர் இல்லா வண்ணங்களும் - நிகரற்ற விதங்களும், சிட்டன் - மேலோனாகிய, சிவன் - சிவபெருமானது, அடியாரை - அடியார்களை, சீராட்டும் திறங்களுமே - உபசரிக்கும் விதங்களும் ஆகிய

வற்றையே, சிந்தித்து - ஆலோசித்து, அட்டமூர்த்திக்கு - எட்டுருக்கொண்டவனுக்கு, என் அகம் நெக - என் அகம் நெகிழும்படி, ஊறும் - சுரக்கின்ற, அமிர்தினுக்கு - அமிர்தம் போல்பவனுக்கு. ஆலம் நிழல் - கல்லாலநிழலில் எழுந்தருளிய, பட்டனுக்கு - வேதியனுக்கு, என்னை - அடியேனை, தன்பால் - தன்னிடத்து, படுத்தானுக்கே - வசப்படுத்திக் கொண்டவனுக்கே, பல்லாண்டு கூறுதும் —, எ - று.

வி-ரை. அட்டமூர்த்தி - எட்டுருக்கொண்டவன்; எட்டுருவாவன - பஞ்சபூதங்களும் சூரியனும் சந்திரனும் ஆன்மாவும். (௫)

சொல்லாண்டசுருதிப்பொருள்சோதித்த
தூமனத்தொண்டருள்ளீர்
சில்லாண்டிற்சிதையுஞ்சிலதேவர்
சிறுநெறிசேராமே
வில்லாண்டகனகத்திரண்மேருவில்விடங்கன்
விடைப்பாகன்
பல்லாண்டென்னும்பதங்கடந்தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

ப-ரை. சொல் ஆண்ட - புகழ் பொருந்திய, சுருதிப் பொருள் - வேதப்பொருளை, சோதித்த - ஆராய்ந்தறிந்த, தூ மனம் - பரிசுத்த மனத்தையுடைய தொண்டருள்ளீர் - தொண்டாயுள்ளவர்களே, சில் ஆண்டில் - சில வருடங்களில், சிதையும் - அழிகின்ற, சில தேவர் - சில தேவர்களுடைய, சிறுநெறி சேராமே - அற்ப மார்க்கங்களிற் சேராமல், வில் ஆண்ட - ஒளியையுடைய, கனகத்திரள் - பொற்றிரளாகிய, மேருவில் - மேருவில்லையுடைய, விடங்கன் - அழகனும், விடைப்பாகன் - இடபவாகனனும், பல் ஆண்டு என்னும் பதம் கடந்தானுக்கே - பல வருடங்களென்னும் சொல்லைக் கடந்தவனும் ஆகிய அவனுக்கே, பல்லாண்டு கூறுதும் —, எ - று.

வி-ரை. சொல் - யாவராலுஞ் சொல்லப்படுவது, அது புகழ். விடங்கம் - அழகு, அதனையுடையவன் விடங்கன். (௬)

புரந்தரன்மாலயன்பூசலிட்டோலமிட்
டின்னம்புகலரிதா
யிரந்திரந்தழைப்பவென்னுயிராண்டகோவினுக்
கென்செயவல்லமென்றுங்

கரந்துங்கரவாதகற்பகனாகிக்
கரையில்கருணைக்கடல்
பரந்துநிரந்தும்வரம்பிலாப்பாங்கற்கே
பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை. புரந்தரன் - இந்திரனும், மால் - திருமாலும், அயன் - பிரமனும், பூசல் இட்டு - போரிட்டு, ஓலமிட்டு - முறையிட்டு, இன்னம் புகல் அரிதாய் - இன்னமும் சொல்லுதற்கரிதாகி, இரந்து இரந்து - பிரார்த்தித்துப் பிரார்த்தித்து, அழைப்ப - அழையா நிற்கவும், என் உயிர் ஆண்ட கோவினுக்கு - என்னுயிரை யாண்டருளின இறைவனுக்கு, என் செய்ய வல்லம் என்றும் - என்ன கைம்மாறு செய்யவல்லேமென்றும், கரந்தும் காவாத - ஒளித்தும் ஒளியாத, கற்பகன் ஆகி - கற்பகம்போல்பவனாகி, கரை இல் கருணைக் கடல் - கரையில்லாத கருணைக்கடல், பரந்தும் நிரந்தும் - பரவியும் நிறைந்தும், வரம்பு இல்லா-எல்லையற்ற, பாங்கற்கே - தோழனுக்கே, பல்லாண்டு கூறுதும்—, எ - று.

வி-ரை. புகல்-முதனிலைத்தொழிற்பெயர். கடற்செல்லை யுண்டு இவன் கருணைக்கது இல்லை யென்பார் 'கரையில் கருணைக்கடல்' என்றார். பாங்கன் - நன்மை செய்பவன் எனினுமாம். (ரு)

சேவிக்கவந்தயனிந்திரன்செங்கண்மா
லெங்குந்திசைதிசையன
கூவிக்கவர்ந்துநெருங்கிக்குழாங்குழா
மாய்நின்றுகூத்தாடு
மாவிக்கமுதையென்னார்வத்தனத்தினை
யப்பனையொப்பமரர்
பாவிக்கும்பாவகத்தப்புறத்தானுக்கே
பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை. அயன் - பிரமன், இந்திரன் - இந்திரன், செங்கண் மால் - திருமால், (ஆகிய இவர்கள்) சேவிக்க வந்து - தரிசிக்கவந்து, எங்கும் - எவ்விடத்தும், திசைதிசையன - திக்குகள்தோறும், கூவி - கூச்சலிட்டு, கவர்ந்து - ஒருவரையொருவர் தழுவி, நெருங்கி - நெருக்கமாகி, குழாம் குழாமாய்-கூட்டம் கூட்டமாய், நின்று கூத்தாடும் - நின்று கூத்தாடுதற்கு ஏதுவாகிய, ஆவிக்கு அமுதை - என்னுயிருக்கு அமுதம்போல்பவனை, என் ஆர்வம் தனத்தினை -

என் விருப்பத்துக்குரிய திரவியத்தினை, அப்பனை - அப்பனை, அமரர் - தேவர்கள், ஒப்பு பாவிக்கும் - உவமைசொல்ல நினைக்கின்ற, பாவகத்து அப்புறத்தானுக்கே - நினைப்புக்கு அப்பாற்பட்டவனுக்கே, பல்லாண்டு கூறுதும்—, எ - று.

வி-ரை. சேவித்தல் - தரிசித்தல். அப்பன் - பிதா, பாவகம் - நினைப்பு. (சு)

சீருந்திருவும்பொலியச்சிவலோக
நாயகன்சேவடிக்கீ
ழாரும்பெறாதவறிவுபெற்றேன்
பெற்றதார்பெறுவாருலகி
லூருமுலகுங்கழறவுழறி
யுமைமணவாளனுக்காட்
பாரும்விசும்புமறியும்பரிசுநாம்
பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை. சீரும் - சிறப்பும், திருவும் - செல்வமும், பொலிய - மிக, சிவலோக நாயகன்-சிவபுரத்தலைவனது, சேவடிக்கீழ் - சேவடியின்கீழே, ஆரும் - பொருந்துகின்ற, பெறாத அறிவு - வேறொருவர் பெறவொண்ணாத அறிவினை, பெற்றேன் - பெற்றுக்கொண்டேன்; பெற்றது - நான்பெற்ற பேற்றை, உலகில் - உலகத்தில், ஆர் பெறுவார் - யார் பெறவல்லவர்; ஊரும் உலகும் - ஊராரும் உலகத்தாரும், கழற - புகழ்ந்து சொல்ல, உழறி - குழறி, உமை மணவாளனுக்கு - உமாதேவி நாயகனுக்கு, ஆள் - யாம் அடிமைகளென்று, பாரும் விசும்பும் - மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும், அறியும் பரிசு - அறியும்வண்ணம், நாம்-யாம், பல்லாண்டு கூறுதும்—, எ - று.

வி-ரை. ஆரும்பெறாத அறிவு - வேறொருவரும் பெறாத அறிவு எனினுமாம். ஊர் உலகு விசும்பு என்பன இடவாகு பெயர்கள். (எ)

சேலுங்கயலுந்திளைக்குங்கண்ணாரிளங்
கொங்கையிற்செங்குங்குமம்
போலும்பொடியணிமார்பிலங்குமென்று
புண்ணியர்போற்றிசைப்ப
மாலுமயனுமறியாநெறிதந்து
வந்தென்மனத்தகத்தே

பாலுமமுதமுமொத்துநின்றானுக்கே
பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை. சேலும் கயலும்-சேல்மீன்களும் கயல்மீன்களும், திளைக்கும் - நெருங்கியிருந்தாற்போன்ற, கண்ணார் - கண்களையுடைய மாதரது, இளங்கொங்கையில் - இளமையாகிய தனங்களின்மேல், செங்குங்குமம்போலும் - செங்குங்குமம்போன்ற, பொடி அணி - திருவெண்ணீறணிந்த, மார்பு-திருமார்பானது, இலங்கும் என்று - விளங்குமென்று, புண்ணியர் - புண்ணியர்கள், போற்றிசைப்ப-வணங்க, மாலும் - திருமாலும், அயனும் - பிரமனும், அறியா - அறியாத, நெறி தந்து - நெறியை யருளிச்செய்து, வந்து - வந்து, என் மனத்தகத்தே - என்மனத்தினுள்ளே, பாலும் அமுதமும் ஒத்து நின்றானுக்கே - பாலையும் அமிர்தத்தையும் நிகர்த்திருந்தவனுக்கே, பல்லாண்டு கூறுதும்—, எ - று.

வி-ரை. மாதர் கொங்கைக்குச் செங்குங்குமம் அழகுசெய்வது போல இறைவரது திருமார்புக்கு வெண்ணீறு அழகுசெய்வதென்பார் 'சேலுங்கயலுந் திளைக்குங் கண்ணாரிளங் கொங்கையிற் செங்குங்குமம் போலும் பொடியணி மார்பிலங்கும்' என்றார். போற்றிசைத்தல் - புகழ்தல் எனினுமாம். (அ)

பாலுக்குப்பாலகன்வேண்டியழுதிடப்
பாற்கடலீந்தபிரான்
மாலுக்குச்சக்கரமன்றருள்செய்தவன்
மன்னியதில்லைதன்னு
ளாலிக்குமந்தணர்வாழ்கின்றசிற்றம்
பலமேயிடமாகப்
பாலித்துநட்டம்பயிலவல்லானுக்கே
பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை. பாலகன் - முனிபுத்திரன், பாலுக்கு வேண்டி அழுதிட - பாலை விரும்பியழ, (அவனுக்கு உணவாக) பாற்கடல் - பாற்கடலை, ஈந்த பிரான் - கொடுத்தருளினபிரான், மாலுக்கு - திருமாலுக்கு, அன்று - அக்காலத்தில், சக்கரம் அருள்செய்தவன் - சக்கராயுதத்தைக் கொடுத்தருளினவன், (அவன்) மன்னிய - நிலைபெற்ற, தில்லைதன்னுள் - தில்லையில், ஆலிக்கும் - களிக்கின்ற, அந்தணர் வாழ்கின்ற - வேதியர் வாழ்கின்ற, சிற்றம்பலமே - சிற்றம்பலத்தையே, இடமாக பாலித்து - இடமாகக்கொண்டு, நட்டம் பயிலவல்

லானுக்கே - திருநடனஞ்செய்ய வல்லவனுக்கே, பல்லாண்டு கூறு தும்—, எ - று.

வி-ரை. பாலகன் என்றது சௌதமமுனி புத்திரனாகிய உபமந்யுவை. பாலித்தல் - கொள்ளுதல். (௯)

தாதையைத்தாளறவீசியசண்டிக்கு
அண்டத்தொடுமுடனே
பூதலத்தோரும்வணங்கப்பொற்கோயிலும்
போனகமுமருளிச்
சோதிமணிமுடித்தாமமுநாமமுந்
தொண்டர்க்குநாயகமும்
பாதகத்துக்குப்பரிசுவைத்தானுக்கே
பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை. தாதையை - தந்தையை, தாள் அற வீசிய - காலற வெட்டிய, சண்டிக்கும் - சண்டேசனுக்கும், அண்டத்தொடும் உடனே - விண்ணுலகத்தாருடனே கூட, பூதலத்தோரும் வணங்க - மண்ணுலகத்தாரும் வணங்க, பொன் கோயிலும்-அழகிய கோயிலையும், போனகமும் அருளி - சோற்றையும் அருளிச்செய்து, சோதி - ஒளியையுடைய, மணிமுடி தாமமும்-மணிமுடிமாலையும், நாமமும் - பேரும், தொண்டர்க்கு நாயகமும் - அடியார்க்குத் தலைமையும், (ஆகிய இவற்றை) பாதகத்துக்கு பரிசு வைத்தானுக்கே - பாவத்துக்குப் பரிசிலாகக் கொடுத்தவனுக்கே, பல்லாண்டு கூறுதும் —, எ - று-

வி-ரை. பாதகம்-தாதையைத் தாளற வீசினது. (௧௦)

குழலொலியாழொலிகூத்தொலியேத்தொலி
யெங்குங்குழாய்ப்பெருகி
விழவொலிவிண்ணளவுஞ்சென்றுவிம்மி
மிகுதிருவாரூரின்
மழவிடையாற்குவழிவழியாளாய்
மணஞ்செய்குடிப்பிறந்த
பழவடியாரொடுங்கூடியெம்மானுக்கே
பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை. குழல் ஒலி - குழலோசையும், யாழ் ஒலி - யாழோசையும், கூத்து ஒலி - கூத்தினோசையும், ஏத்து ஒலி - துதிசெய்யுமோசையும், குழாம் - கூட்டமாக, எங்கும் பெருகி - எவ்விடத்தும் பெருகி, விழவு ஒலி - திருவிழாவினோசையும்கூடி, விண் அளவும் சென்று - ஆகாயத்தளவும் போய், விம்மி மிகு - மேன்மேலும் அதிகரிக்கிற, திருவாரூரில்—, மழவிடையாற்கு - இளமையாகிய இடபத்தை யுடையவனுக்கு, வழிவழி ஆளாய் - குடிகுடி யாட்களாய், மணம் செய் குடி பிறந்த - மணஞ்செய்யுங் குடியில்பிறந்த, பழ அடியாரொடு கூடி - பழைய அடியாரோடும் சேர்ந்து, எம்மானுக்கே - எம்பெருமானுக்கே, பல்லாண்டு கூறுதும்—, எ - று.

வி-ரை. குழலொலி முதலியவும் 'விண்ணளவுஞ்சென்று விம்மி மிகு திருவாரூர்' என்றமையால், திருவாரூரின் செல்வச் சிறப்புச் சொல்லப்பட்டதாயிற்று. (கக)

ஆரார்வந்தாரமரர்குழாத்தி
லணியுடையாதிரைநா
ளாராயணனொடுநான்முகனங்கி
யிரவியுமிந்திரனுந்
தேரார்வீதியிற்றேவர்குழாங்க
டிசையனைத்துநிறைந்து
பாரார்தொல்புகழ்பாடியுமாடியும்
பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை. அணி உடை - அழகையுடைய, ஆதிரைநாள் - திருவாதிரைநாளில், அமரர் குழாத்தில் - தேவர் கூட்டத்தில், ஆர் ஆர் வந்தார் - யார் யார் வந்தார், நாராயணனொடு - திருமாலுடனே, நான்முகன் - பிரமன், அங்கி-அக்கினிதேவன், இரவியும்-சூரியனும், இந்திரனும்—, தேர் ஆர் வீதியில்-தேரோடும் தெருவில், தேவர்குழாங்கள் - தேவர்கூட்டங்கள், திசை அனைத்தும் நிறைந்து - திக்குகள் தோறும் நிறைந்து, பார் ஆர் - பூமிமுழுதும் நிறைந்த, தொல் புகழ் பாடியும் ஆடியும் - பழமையாகிய கீர்த்தியைப்பாடியும் கூத்தாடியும், பல்லாண்டு கூறுதும்—, எ - று.

வி-ரை. அக்கினியென்னும் வடசொல் அங்கியென்றாயிற்று. (கஉ)

எந்தையெந்தாய்சுற்றமுற்று
மெமக்கமுதாமெம்பிரானென்றென்று

சிந்தைசெய்யுஞ்சிவன்சீரடியாரடிநாய்
செப்புறை
யந்தமிலானந்தச்சேந்தனெனைப்புகுந்
தாண்டுகொண்டாருயிர்மேற்
பந்தம்பிரியப்பரிந்தவனேயென்று
பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை. எந்தை - எமது தந்தை, எம் தாய் - எமதுதாய், சுற்றம் - உறவு, (ஆகிய) முற்றும் - முழுதும், எமக்கு அமுது ஆம் - எமக்கு அமிர்தமாகிய, எம்பிரான் என்று என்று - எம்பெருமானே யென்று பலகாற்சொல்லி, சிந்தைசெய்யும் - சிந்திக்கிற, சிவன் - சிவபெருமானது, சீர் அடியார் - சிறந்த அடியாருடைய, அடி நாய் - அடிமைசெய்யும் நாயாகிய, செப்புறை - சொற்குறையிடமான, அந்தம் இல் - முடிவில்லாத, ஆநந்தம் - இன்பத்தையுடைய, சேந்தன் - சேந்தனாகிய, என்னை - அடியேனை, புகுந்து - வலியவந்து, ஆண்டு கொண்டு - ஆண்டுகொண்டருளி, ஆர் உயிர்மேல் - நிறைந்த வுயிரைப்பொருந்திய, பந்தம் பிரிய - (பிறவிக்) கட்டவிழ, பரிந்தவனே யென்று - இரங்கியருளினவனேயென்று, பல்லாண்டு கூறுதும்—, எ - று.

வி-ரை. பந்தம் - கட்டு, பிறவிப்பிணிப்பு. பரிதல் - இரங்குதல். (கந)

திருச்சிற்றம்பலம்.

திருப்பல்லாண்டு மூலமும் உரையும்
முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராணச் செய்யுட்டிரட்டு.

உலகெலாமுணர்ந்தோதற்கரியவ
னிலவுலாவியநீர்மலிவேணிய
னலகில்சோதியனம்பலத்தாடுவான்
மலர்சிலம்படிவாழ்த்திவணங்குவாம்.

ப-ரை. உலகு எலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன் - அறிஞர்கள் யாவரும் (தமக்குக் கட்டாக நின்றுணர்த்தும் திருவருட்குறிச் சிவஞானத்தால் இவ்வியல்பினனென) உணர்ந்தும் (அவ்வியல்பை) எடுத்தோதுதற்கரியவனும், நிலவுலாவிய நீர்மலிவேணியன் - இளம்பிறை தவழும் கங்கைநீர்மிக்க சடையையுடையவனும், அலகில் சோதியன் - அளவுபடாத ஒளிப்பிழம்பான திருமேனியையுடையவனுமாகிய, அம்பலத்து ஆடுவான் - திருவம்பலத்தின்கண் ஆனந்த நிருத்தஞ்செய்தருளுகின்ற நடேசப்பிரானது, மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்-மலராகின்ற திருச்சிலம்பணிந்த குஞ்சிதபாதத்தைத் துதித்து (யாம்) வணங்குவாம், எ - று.

வி-ரை. விசேடணம் விசேடியத்தையடையுமென்னும் நியாயத்தால் அரியவன், வேணியன், சோதியன் என்னும் விசேடணங்கள் ஆடுவான் என்னும் விசேடியத்தை எற்றுகின்றன. உலகமென்னும் பலபொருள் ஒருசொல் ஈண்டு அறிஞரைக் குறித்துநின்றது. எல்லாம் என்னும் விரைவுப்பெயர் உணர்தற்குரிய அறிஞர் எல்லாரையும் தழுவிநின்றது. இவ்வறிஞரால் உணர்தற்குக் கருவியாகிய சித்தவிருத்தியும் உணர்ந்த மாத்திரையானே இறைவனிடத்து ஒடுங்குதலால் 'உலகெலாமுணர்ந்தோதற் கரியவன்' என்றும், ஒற்றைக்கலையாகிய சந்திரகண்டத்தையும் கங்கையையும் சடையிலணிந்திருப்பவனாதலால் 'நிலவுலாவிய நீர்மலிவேணியன்' என்றும், சூரியன் சந்திரன் அக்கினி என்னும் புறவொளிப் பொருள்களுக்கும் இந்திரியம் மனம் ஆன்மபோதம் என்னும் அகவொளிப் பொருள்களுக்கும் ஒளி கொடுக்கும் பொருளாய்ச் சுயஞ்சோதியாய் நிற்றலான் 'அலகில்சோதியன்' என்றும், அத்தகைப் பெரியனேனும் யாவரும் கண்டுய்தற்

பொருட்டு அருளுருக்கொண்டு பொற்சபையில் ஆனந்த நிருத்தஞ் செய்தருளுதலான் 'அம்பலத்தாடுவான்' என்றும், அன்பரது இதயத்தில் மங்கலகுணங்களோடு மலர்தலின் 'மலர்சிலம்படி' என்றும் கூறினர். (௧)

எடுக்குமாக்கதையின்றமிழ்ச்செய்யுளாய்
நடக்குமேன்மைநமக்கருள்செய்திடத்
தடக்கையைந்துடைத்தாழ்செவிநீண்முடிக்
கடக்களிற்றைக்கருத்துளிருத்துவாம்.

**ப-ரை.** எடுக்கும் மாக்கதை இன்தமிழ் செய்யுளாய் - பாடத்தொடங்கும் பெருமைபொருந்திய இத்திருத்தொண்டர் புராணம் இனிய தமிழ்ப்பாடலினால், நடக்கும் மேன்மை நமக்கு அருள்செய்திட - நன்குமுடியும் மேன்மையை அடியேற்கருள்செய்யும்படி, தடக்கை ஐந்துடை தாழ் செவி நீள் முடி - பெரிய திருக்கரங்களைந்துடன் தூங்குகின்ற இரண்டு திருச்செவிகளையும் நீண்ட திருமுடியையுமுடைய, கடக்களிற்றை கருத்துள் இருத்துவாம் - மதம்பொருந்திய விநாயகமூர்த்தி என்னும் யானையை எமதுள்ளத்தின்கண் பொருந்தத் தியானஞ்செய்வோம், எ - று.

**வி-ரை.** இந்நூலாசிரியர் இத்திருத்தொண்டர்புராணம் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு அடியெடுத்துக் கொடுக்கவென நடேசப்பிரானைப் பிரார்த்திக்குங்கால், அப்பிரார்த்தனையைத் திருவுளம்பற்றி நடேசப்பிரான் அவ்வாறே அடியெடுத்துக் கொடுத்தமையான் இந்நூற்கு இடையூறு சிறிதுமின்றாயினும், ஈண்டு ஆன்றோர் ஒழுக்கத்தைப் பாதுகாத்தற்பொருட்டு விநாயக வணக்கம் முற்கூறாது அத்துதியின் பிற்கூறினர். (௨)

ஆதியாய்நடுவுமாகியளவிலாவளவுமாகிச்
சோதியாயுணர்வுமாகித்தோன்றியபொருளுமாகிப்
பேதியாவேகமாகிப்பெண்ணுமாயாணுமாகிப்
போதியாநிற்குந்தில்லைப்பொதுநடம்போற்றிபோற்றி.

**ப-ரை.** ஆதியாய் நடுவும் ஆகி - எல்லாப்பொருள்களையும் ஆதிகாலத்தில் சிருட்டிக்கும் சிருட்டிக்கடவுளாயும் அப்பொருள்களையெல்லாம் காத்து திதிக்கடவுளாயும், அளவு இலா அளவும் ஆகி - இவ்வளவிற்றென வரையறுக்கப்படாத வியாபகமுடைத்தாயும், சோதியாய் - சுயஞ்சோதியெனச் சுருதிகூறும் ஞானப்பிரகாசமாயும், உணர்வும் ஆகி - ஆன்மாக்கட்கு உயிர்க்குயிராய் நின்று கருவிகரணஞ்

சுளைக்கூட்டி யுணர்த்தும் உணர்வாயும், தோன்றிய பொருளும் ஆகி - தம்மால் தோற்றுவித்த சித்துசடமென்னும் இருவகைப்பொருளுள்ளும் விரவி அதுவதுவாயும், பேதியா ஏகம்ஆகி-காரியவேறுபாட்டால் அதிட்டேயத்தில் வேறுபடாத ஒன்றாயும், பெண்ணுமாய் ஆணும் ஆகி-அப்பேதம்பற்றிவரும் பெண் ஆண் என்னும் வேறுபாடுடைத்தாயும், போதியாநிற்கும் - சுருதி சிவாகமங்களால் இலக்கணங் கூறப்படும், தில்லை பொதுநடம் போற்றி போற்றி - சிதாகாச சபையினிடத்துச் செய்யும் ஆனந்த நிருத்தம் துதிக்கப்படுவது துதிக்கப்படுவது, எ - று.

வி-ரை. ஒடுங்கிய சங்காரக்கடவுளிடத்து எல்லாப் பிரபஞ்சமும் உதித்தலால் 'ஆதியாய்' என்றும், அப்பிரபஞ்சத்தைக் காத்தருளுதலால் 'நடுவுமாகி' என்றும், சித்து அசித்து என்னும் காரண காரியப்பொருள்கள் ஒன்றற்கொன்று வியாபகமுடைமையின் 'அளவிலாவளவுமாகி' என்றும், தன்மூர்த்திகளில் தன்னின் வேறுபாடு தனக்கின்மையின் அதிட்டேயபேதத்தால் வேறுபட்ட இலய போகாதிகாரங்களாகிய மூர்த்திபேதங்களைக்கடந்து நிற்றலான் 'பேதியாவேகமாகி' என்றும், சுத்தமாயையை அதிட்டித்துப் பிரபஞ்சமுழுதும் காரியப்படுத்தும்பொருட்டு இந்திரதனுசுபோல நீலநிறமும் பொன்னிறமுமாய் இடப்பாகம் சத்தியமிசமும் வலப்பாகம் தன் அமிசமுமாய் நிற்றலான் 'பெண்ணுமா யாணுமாகி' என்றும் கூறினார். (ரு)

கற்பனைகடந்தசோதிகருணையேயுருவமாகி
யற்புதக்கோலநீடியருமறைச்சிரத்தின்மேலாஞ்
சிற்பரவியோமமாகுந்திருச்சிற்றம்பலத்துணின்று
பொற்புடனடஞ்செய்கின்றபூங்கழல்போற்றிபோற்றி.

ப-ரை. கற்பனை கடந்த சோதி-உபாதிபேதங்களான பொது இயல்பைக் கடந்த நிருத்தச் சோதியானது, கருணையே உருவமாகி - தனது காருண்ணியத்தால் திருமேனியெடுத்து, அற்புதக் கோலம் நீடி - யாவர்க்கும் அற்புதம் விளைக்கும் திருக்கோலத்தாற் சிறந்து, அருமறை சிரத்தின் மேலாம் - அரிய உபநிடத உச்சியின் மேலாய் விளங்கும், சிற்பர வியோமமாகும் - சித்தென்னும் மேன்மையான சிதாகாச சொரூபமாகிய, திருச்சிற்றம்பலத்துள் நின்று - ஞான சபையின்கணின்று, பொற்புடன் நடம் செய்கின்ற - அழகோடு ஆனந்த நிருத்தஞ் செய்தருளுகின்ற, பூ கழல் போற்றி போற்றி -

பொலிவினை யுடைத்தாகிய குஞ்சிதபாதந் துதிக்கப்படுவது துதிக்கப்படுவது, எ - று.

வி-ரை. பரைமுதலிய பஞ்சசத்திகளின் பத்திலொரு கூற்றில் உதிக்கும் சகள நிட்கள ரூபமாகிய சதாசிவ ரூபமும் அதில் ஆயிரத்தி லொருகூறு யுதிக்கும் சகள ரூபமாகிய மயேசுர ரூபமும் ஆகிய மூர்த்திபேதங்களைக் கடந்து நிற்றலிற் 'கற்பனை கடந்த' என்றும், அது தன் கருணையால் வெளிப்பட்டுச் சகள நிருத்தத்தின் பொருட்டுத் திருமேனிதாங்கி நிற்றலின் 'கருணையே யுருவமாகி' என்றும், அவ்வுருவம் ஆனந்தத்தை விளைக்கும் அதிசய வுருவாதலின் 'அற்புதக் கோலநீடி' என்றும் கூறினர். (ச)

தண்ணளிவெண்குடைவேந்தன்செயல்கண்டுதரியாது
மண்ணவர்கண்மழைபொழிந்தார்வானவர்பூமழைபொழிந்தா
ரண்ணலவன்கண்ணெதிரேயணிவீதிமழவிடைமேல்
விண்ணவர்கடொழநின்றான்வீதிவிடங்கப்பெருமான்.

ப-ரை. தண்ணளி வெண்குடை வேந்தன் - உயிர்கள்மேல் வைத்த கிருபையாகிய வெள்ளைக்குடையினையுடைய அரசனது, செயல் கண்டு தரியாது - செய்கையைக் கண்டு ஆற்றாதவர்களாய், மண்ணவர் கண்மழை பொழிந்தார் - நிலவுலகின்கண்ணுள்ள மனிதர்கள் கண்ணீரைச் சொரிந்தார்கள், வானவர் பூ மழை பொழிந்தார் - ஆச்சரியத்தால் தேவர்கள் பூமழையைப் பொழிந்தார்கள், அண்ணலவன் கண் எதிரே - சிறந்த பெருமையை யுடையவனாகிய அவ்வரசனது கண்ணுக்கெதிரே, அணி வீதி மழவிடைமேல் - அழகிய திருவீதியின்கண் இளமையினையுடைய தருமவிடையின்மீது, வீதிவிடங்கப்பெருமான் - தியாகேசர், விண்ணவர்கள் தொழ நின்றான் - தேவர்கள் தொழும்படி காட்சிகொடுத்தருளினர், எ - று.

வி - ரை. தண்ணளி - ஒருசொல். வீதிவிடங்கப்பெருமானாகிய அண்ணல் எனக் கூட்டியுரைத்தலும் ஒன்று. அண்ணல் - பெருமையிற் சிறந்தோன். (ரு)

சடைமருங்கிலிளம்பிறையுந்தனிவிழிக்குந்திருநுதலு
மிடமருங்கிலுமையாளுமெம்மருங்கும்பூதகணம்
புடைநெருங்கும்பெருமையுமுன்கண்டரசன்போற்றிசைப்ப
விடைமருவும்பெருமானும்விறல்வேந்தற்கருள்கொடுத்தான்.

ப-ரை. சடை மருங்கில் இளம்பிறையும் - சடையின்கண் விளங்கும் இளம்பிறையினையும், தனி விழிக்கும் திருநுதலும் - ஓர்

காலத்தில் விழிக்காநின்ற அக்கினிக்கண்ணையுடைய நெற்றியினையும், இடமருங்கில் உமையாளும் - இடப்பாகத்தில் உமாதேவியாரையும், எம்மருங்கும் பூதகணம் புடைநெருங்கும் பெருமையும் - எவ்விடங்களிலும் பூதகணங்கள் அருகில் நெருங்கியிராநின்ற பெருமையும், முன் கண்டு அரசன் போற்றிசைப்ப-தன்னெதிரே கண்டு மனுச்சோழர் துதித்துநிற்க, விடைமருவும் பெருமானும் - இடபத்தை வாகனமாகக்கொண்டருளும் அவ்வீதிவிடங்கப்பெருமானும், விறல் வேந்தற்கு அருள் கொடுத்தார் - வலிமையினையுடைய அச்சோழனுக்குக் கிருபைசெய்தார், எ - று.

வி-ரை. நின்ற பெருமானும் என இயைதலின் உம்மை இறந்தது தழீஇயது. போற்றிசைப்ப - ஒரு சொல். (க)

வையகம்பொலியமறைச்சிலம்பார்ப்ப
மன்றுளேமாலயன்றேட
வையர்தாம்வெளியேயாடுகின்றாரை
யஞ்சலிமலர்த்திமுன்போற்றுங்
கைகளோதிளைத்தகண்களோவந்தக்
கரணமோகலந்தவன்புந்தச்
செய்தவம்பெரியோன்சென்றுதாழ்ந்தெழுந்தான்
றிருக்களிற்றுப்படிமருங்கு.

ப-ரை. மால் அயன் தேட - திருமால் பிரமன் என்னும் இருவரும் முன்னாளிற்றேட (அவர்க்கெட்டாமல்), வையகம் பொலிய - மண்ணுலகத்துள்ளார் தரிசித்துக் களிப்படைய, மறை சிலம்பு ஆர்ப்ப - வேதங்களாகிய சிலம்பு ஒலிக்க, வெளியே மன்றுள் ஆடுகின்றார் ஐயரை - வெளிப்பட்டுநின்று கனகசபையின்கண் ஆனந்த நிருத்தஞ் செய்தருள்பவராகிய நடேசப்பிரானை, அஞ்சலிமலர்த்தி முன்போற்றும் கைகளோ - அஞ்சலியாகப் பிடித்துத் திருமுன் குவித்த கைகள்தாமோ, திளைத்த கண்களோ - (திருமேனியைத் தரிசித்து அதனிடத்துக்) கலந்த கண்கள்தாமோ, அந்தக்கரணமோ - (கண்வழிச்சென்று அவ்வாறுன) அந்தக்கரணங்கள் தாமோ, கலந்த அன்பு உந்த - (தன்னிடத்துக்) கலப்பான அன்பின் வழியாய்ச் செலுத்தப்பட, செய் தவம் பெரியோன்-முன் செய்யப்பட்ட தவத்தாற் பெரியராகிய நம்பியாரூரர், திருக்களிற்றுப்படி மருங்கு சென்று தாழ்ந்து எழுந்தான் - திருக்களிற்றுப்படியின் அருகில் சென்று வணங்கி எழுந்தார், எ - று.

வி-ரை. ஓசாரங்கள் - ஐயம். எல்லாம் அன்பின் வழியாய்ச் செலுத்தப்பட்டன என்பது பொருள். அஞ்சலி மலர்த்தி முன் குவித்த, கைகளோ என்றும் பாடம். (எ)

ஐந்துபேரறிவுங்கண்களேகொள்ள
வதிற்படுகரணங்களுன்குஞ்
சிந்தையேயாகக்குணமொருமூன்றுந்
திருந்துசாத்துவிகமேயாக
விந்துவாழ்சடையானாடுமானந்த
வெல்லையிறனிப்பெருங்கூத்தின்
வந்தபேரின்பவெள்ளத்துட்டிளைத்து
மாறிலாமகிழ்ச்சியின்மலர்ந்தார்.

ப-ரை. ஐந்து பேர் அறிவும் - ஐந்தாகப் பெயர்ந்த புலவுணர் வைந்தையும், கண்களே கொள்ள - கண்ணுலாகிய காட்சியுணர் வொன்றுமே கொள்ள, அதிற்படு கரணங்கள் நான்கும் - அவ் வானந்த வுருவிற் கலந்த நின்மலமான அந்தக்கரணங்கள் நான்கும், சிந்தையேயாக - அவற்றுள் ஒன்ருகிய சித்தமேயாக, குணம் ஒரு மூன்றும் - கரணங்களை வியாபாரப்படுத்தும் முக்குணங்களும், திருந்து சாத்துவிகமே ஆக-அவற்றுள் ஒன்ருகிய சுத்தசாத்துவிக குண மாக ஒடுங்க, இந்து வாழ் சடையான் ஆடும் எல்லையில் ஆனந்தத் தனிப்பெருங்கூத்தின் - இளம்பிறை தவழ்கின்றசடையினையுடைய நடேசப்பிரான் செய்தருளுகின்ற அளவில்லாத ஆனந்தத்தைவிளைக் கும் ஒப்பற்ற திருக்கூத்தால், வந்த பேரின்ப வெள்ளத்துள் திளை த்து - தம்மிடத்து உதித்த பேரானந்த வெள்ளத்தில் மூழ்கி, மாறி லா மகிழ்ச்சியின் மலர்ந்தார் - நீங்காத பெருங்களிப்பால் திருமேனி பூரித்தார், எ - று.

வி-ரை. ஐந்து பேர் அறிவு என்றது ஐம்புல வுணர்வை. கரணங் கள் நான்காவன: மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன. குண மொரு மூன்று: சாத்துவிகம் இராசதம் தாமதம் என்பன. (அ)

தெண்ணிலாமலர்ந்தவேணியாயுன்றன்
றிருநடங்கும்பிடப்பெற்று
மண்ணிலேவந்தபிறவியேயெனக்கு
வாலிதாமின்பமாமென்று
கண்ணிலானந்தவருவிநீர்சொரியக்
கைம்மலருச்சிமேற்குவித்துப்

பண்ணினுனீடியறிவரும்பதிகம்
பாடினூர்பரவினூர்பணிந்தார்.

ப-ரை. தெள் நிலா மலர்ந்த வேணியாய்-தெள்ளிய இளம்பிறை தங்கிய சடைமுடியையுடையாய், உன்றன் திருநடம் கும்பிடப்பெற்று - உன்னுடைய ஆனந்த நிருத்தத்தைத் தரிசிக்கப்பெற்று, மண்ணிலே வந்த பிறவியே - நிலவுலகத்தில் வந்த மானிடப்பிறவியே, எனக்கு வாலிதாம் இன்பமாம் என்று - எனக்கு மேலான இன்பமென்று, கண்ணில் ஆனந்த அருவி நீர் சொரிய-கண்களினின்றும் ஆனந்த அருவிசொரிய, கை மலர் உச்சிமேல் குவித்து - கரகமலங்களைச் சிரசின்மேலேறக் குவித்து, பண்ணினுல் நீடி அறிவரும் பதிகம் - இசையோடு கூடி அறியத்தக்க திருப்பதிகத்தை, பாடினூர் பரவினூர் பணிந்தார் - பாடித்துதித்து வணங்கினூர், எ - று.

வி-ரை. வாலிது - மேலானது. பாடினூர், பரவினூர் என்பன முற்றெச்சங்கள். (௯)

சொல்லுவதறியேன்வாழிதோற்றியதோற்றம்போற்றி
வல்லைவந்தருளியென்னைவழித்தொண்டுகொண்டாய்போற்றி
யெல்லையிலின்பவெள்ளமெனக்கருள்செய்தாய்போற்றி
தில்லையம்பலத்துளாடுஞ்சேவடிபோற்றியென்ன.

ப-ரை. சொல்லுவது அறியேன் வாழி-(இவ்வாறு வந்த கருணையின் பெருமையை) எடுத்துத் துதித்தற்கு அறியமாட்டேன் (அதனூல் உன்பெருங்கருணை) வாழக்கடவது; தோற்றிய தோற்றம் போற்றி - இக்காட்சி கொடுத்த திருக்கோலம் என்னூல் துதிக்கப்படுவது; வல்லை வந்தருளி - விரைவாக எழுந்தருளி, என்னை வழித்தொண்டு கொண்டாய் போற்றி - அடியேனை வழியடியனுக அடிமைக்கொண்டவரே காத்தருளும்; எல்லையில் இன்பவெள்ளம் - அளவுபடாத பேரானந்த வெள்ளத்தை, எனக்கு அருள் செய்தாய் போற்றி - என்னுள்ளே பெருகும்படி அருள்செய்தவரே காத்தருளும்; தில்லையம்பலத்துள் ஆடும் - தில்லையம்பலத்தின்கண் நிருத்தஞ் செய்தருளும், சேவடி போற்றி யென்ன - திருவடி வாழிய என்று துதிக்க, எ - று.

வி-ரை. வாழி என்பதில் வியங்கோள் விகுதியாகிய ஈற்று அகரங்கெட்டது. (௧0)

ஆனயர்குழலோசைகேட்டருளியருட்கருணை
தானுபதிருவுள்ளமுடையதவவல்லியுடன்

கானாதிகாரணராங்கண் ணுதலார்விடையுகைத்து
வானாறுவந்தணைந்தார்மதிநாறுஞ்சடைதாழ.

ப-ரை. ஆனாயர் குழலோசை கேட்டருளி - ஆனாயநாயனாருடைய புள்ளாங்குழலோசையைக்கேட்டருளி, அருட்கருணை தானாய திருவுள்ளம் உடைய தவ வல்லியுடன் - உயிர்கண்மாட்டு வைத்த பெருங்கருணையே வடிவாயமைந்த திருவுள்ளத்தையுடைய தவக் கொடியாகிய உமாதேவியாரோடு, கானம் ஆதி காரணராம் கண்ணுதலார் விடை உகைத்து - இசைக்கு ஆதிகாரணராய் விளங்குகின்ற நெற்றிக்கண்ணையுடைய சிவபிரானார் இடபத்தை வாகனமாக நடாத்திக்கொண்டு, வான் ஆறு வந்து அணைந்தார் - ஆகாயமார்க்கத்தில் எழுந்தருளினார், மதிநாறும் சடை தாழ - இளம்பிறை தங்கிய சடைகள் தாழும்படி, எ - று.

வி-ரை. ஆறு - வழி. நாறுதல் - தோன்றுதல். (கக)

திசைமுழுதுங்கணநாதர்தேவர்கட்குமுன்னெருங்கி
மிசைமிடைந்துவரும்பொழுதுவேற்றொலிகள்விரவாமே
யசையவெழுங்குழனாதத்தஞ்செழுத்தாற்றமைப்பரவு
மிசைவிரும்புங்கூத்தனாரெழுந்தருளியெதிர்நின்றார்.

ப-ரை. திசைமுழுதும் கணநாதர் - எத்திக்கினுஞ் சிவகணங்கள், தேவர்கட்கு முன் நெருங்கி - தேவகணங்களுக்கு முன்னே நெருங்கி, மிசைமிடைந்து வரும்பொழுது-வானின்கண் கூடிவரும் பொழுது, வேற்றொலிகள் விரவாமே - மற்றெவ்வொலிகளும் கலவாமல், அசைய எழும் குழல் நாதத்து - அசைந்து எழுகின்ற புள்ளாங்குழலின் இசையில், அஞ்செழுத்தால் தமைப்பரவும்-திருவைந்தெழுத்தால் தம்மைத் துதிக்கின்ற, இசை விரும்பும் கூத்தனார் - பண்ணை விரும்பிய சிவபிரானார், எழுந்தருளி எதிர் நின்றார் - ஆனாய நாயனார் முன்பு எழுந்தருளி காட்சிகொடுத்து நின்றார், எ-று.

வி-ரை. மிசை - மேல், இது பண்பாகுபெயராய் ஆகாயத்தை யுணர்த்திற்று. (கஉ)

நன்மைபெருகருணெறியேவந்தணைந்துநல்லூரின்
மன்னுதிருத்தொண்டனார்வணங்கிமகிழ்ந்தெழும்பொழுதி
லுன்னுடையநினைப்பதனைமுடிக்கின்றோமென்றவர்தஞ்
சென்னிமிசைப்பாதமலர்சூட்டினான்சிவபெருமான்.

ப-ரை. மன்னு திருத்தொண்டனார்-நிலைபெற்ற திருத்தொண்டையுடைய வாகீசமுனிவர், நன்மை பெருகு அருள்நெறியே - நன்மைமிக்க பெருமான் திருவருளின் வழியே, நல்லூரில் வந்தணைந்து - திருநல்லூரின்கண் வந்து, வணங்கி மகிழ்ந்து எழும்பொழுதில் - (நிலமுற) வணங்கி மகிழ்ந்து எழுந்திருக்கும்பொழுதில், உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம் என்று - உன்னுடைய எண்ணத்தை நிறைவேற்றுகின்றோமென்று, அவர்தம் சென்னிமிசை - அவருடைய சிரசின்மேல், பாதமலர் சூட்டினான் சிவபெருமான் - தமது திருவடிகளைச் சிவபெருமான் சூட்டியருளினார், எ - று.

வி-ரை. எழும்போதில் என்றும் பாடம். வந்தணைந்து - ஒரு சொல். எழும்பொழுதில் சூட்டினான் என இயையும். (கரு)

அண்ணலேயெனையாண்டுகொண்டருளியவமுதே
விண்ணிலேமறைந்தருள்புரிவேதநாயகனே
கண்ணினாற்றிருக்கயிலையிலிருந்தநின்கோல
நண்ணிநான்றொழநயந்தருள்புரியெனப்பணிந்தார்.

ப-ரை. அண்ணலே எனை ஆண்டுகொண்டருளிய அமுதே - பெருமையுடையவரே அடியேனை யாட்கொண்டருளிய அமுதமே, விண்ணிலே மறைந்து அருள்புரி வேதநாயகனே-ஆகாயத்தின்கண் மறைந்து அசரீரியாய் அருள்புரிந்த வேதமுதல்வரே, கண்ணினால் திருக்கயிலையில் இருந்த நின்கோலம்-கண்ணினால் திருக்கயிலையில் வீற்றிருந்த நின் திருக்கோலத்தை, நண்ணி நான் தொழ நயந்து அருள்புரி என பணிந்தார் - அடைந்து நான் தரிசிக்கும்படி கருணைகூர்ந்தருள்செய்யென்று வணங்கினார், எ - று.

வி-ரை. திருக்கைலையில் இருந்த நின்கோலம் நான் நண்ணிக் கண்ணினால் தொழ என இயைத்துக்கொள்க. (கச)

வெள்ளிவெற்பின்மேன்மரகதக்கொடியுடன்விளங்குந்
தெள்ளுபேரொளிப்பவளவெற்பெனவிடப்பாகங்
கொள்ளுமாமலையாளுடன்கூடவீற்றிருந்த
வள்ளலாரைமுன்கண்டனர்வாக்கின்மன்னவனார்.

ப-ரை. வெள்ளிவெற்பின்மேல் மரகதக்கொடியுடன் விளங்கும் - வெள்ளிமலையின்மேல் மரகதக்கொடியுடன் பிரகாசிக்கின்ற, தெள்ளு பேர் ஒளி பவள வெற்பு என இடப்பாகம்-தெள்ளிய மிக்க ஒளியினையுடைய பவளமலைபோல இடது பாகத்தில், கொள்ளுமா

மலையாளுடன் கூட வீற்றிருந்த - தனக்குத் திருமேனியாகக்கொண்ட பார்வதியாரோடு கூட வீற்றிருந்தருளுகின்ற, வள்ளலாரை முன் கண்டனர் வாக்கின் மன்னவனார் - சிவபிரானை முன்னே தரிசித்தார் வாகீசமுனிவர், எ - று.

வி-ரை. வெள்ளி வெற்பு - கைலாயமலை. மரகதக்கொடி - பச்சைக்கொடி - முத்தியாகிய அரும்பெரும்பொருளை வழங்குவோராதலால் சிவபிரானை 'வள்ளலார்' என்றார். (கரு)

சிவனடியேசிந்திக்குந்திருப்பெருகுசிவஞானம்
பவமதனையறமாற்றும்பாங்கினிலோங்கியஞான
முவமையிலாக்கலைஞானமுணர்வரியமெய்ஞ்ஞானந்
தவமுதல்வர்சம்பந்தர்தாமுணர்ந்தாரந்நிலையில்.

ப ரை. தவமுதல்வர் சம்பந்தர் - (வைதிகத்துஞ் சைவத்துங் கூறும் சன்மார்க்கமான தவங்களை நிறுத்துதலால்) அத்தவங்கட்கு முதல்வராய ஆளுடைய பிள்ளையார், சிவன் அடியே சிந்திக்கும் திரு பெருகு சிவஞானம் - சிவபிரானது திருவடியொன்றினையே யுணர்ந்து தெளிந்து சிந்திக்கும் செல்வமிக்க சிவஞானத்தையும், பவமதனை அற மாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம் - பிறப்பையும் இறப்பையும் மீண்டுவாராமல் நீங்கும்படி செய்யுங் குணத்தோடு கூடிய அபரஞானத்தையும், உவமை இலா கலை ஞானம் - ஒப்பில்லாத அறுபத்துநான்காகிய கலைஞானத்தையும், உணர்வு அரிய மெய்ஞ்ஞானம் - எவைகளை யுணர்ந்தாலன்றி வேதநூற் பொருளை யுணர்தற்குரிய சொல்லின் பாகுபாடுகளையும் பொருளின் பாகுபாடுகளையும் உணர்தலியலாவோ அவ்வியாகரணமும் தருக்கமீமாம்சையுமாகிய கருவிநூல்களின் ஞானத்தையும், அந்நிலையில் உணர்ந்தார் - திருமுலைப்பால் உண்டருளிய அக்கணத்தே அறிந்தருளினார், எ-று.

கையதனாலொற்றறுத்துப்பாடுதலுங்கண்டருளிக்
கருணைகூர்ந்த
செய்யசடைவானவர்தமஞ்செழுத்துமெழுதியசெம்
பொற்றாளங்க
ளையரவர்திருவருளாலெடுத்துப்பாடலுக்கிசைந்த
வளவாலொற்ற
வையமெலாமுய்யவருமறைச்சிறுவர்கைத்தலத்து
வந்தவன்றே.

ப-ரை. கையதனல் ஒத்தறுத்து பாடுதலும் - தமது திருக் கரங்களினல் தாளத்தை வரையறுத்து (ஆளுடைய பிள்ளையார்) பாடாநிற்கவும், கண்டருளி கருணை கூர்ந்த - அதனைக் கண்டருளி அவரிடத்துக் கிருபைவைத்த, செய்ய சடை வானவர்தம் - சிவந்த சடையையுடைய சிவபிரானது, அஞ்செழுத்தும் எழுதிய செம்பொன் தாளங்கள் - திருஅஞ்செழுத்தையும் எழுதிய செம்பொன்னுலாகிய தாளங்கள், ஐயரவர் திருவருளால் எடுத்த பாடலுக்கு இசைந்த அள வால் ஒற்ற - அச்சிவபிரானது திருவருளினல் தொடங்கிய திருப் பதிகங்களுக்குப் பண்ணுக்கிசைந்த முறைமையால் தாளம் வரை யறுக்க, வையம் எலாம் உய்யவரு மறைச்சிறுவர் கைத்தலத்து வந்த - உலகங்களெல்லாம் உய்யும்பொருட்டு அவதரித்த பிராமணகுலச் சிறுவராகிய ஆளுடையபிள்ளையாரது திருக்கரத்தில் வந்தன, எ-று.

நச்சியின்றமிழ்பாடியஞானசம்பந்த
ரிச்சையேபுரிந்தருளியவிறைவரின்னருளா
லச்சிறப்பருள்பூதமுன்விரைந்தகன்பீடத்
துச்சிவைத்ததுபசும்பொனுயிரக்கிழியொன்று.

ப-ரை. நச்சி இன் தமிழ் பாடிய ஞானசம்பந்தர் - தந்தையா ருக்குப் பொருளீதலை விரும்பி இனிய திருப்பதிகம் பாடிய ஆளு டையபிள்ளையாரது, இச்சையே புரிந்தருளிய இறைவர் இன்னரு ளால் - மனக்கருத்தின்படியே கொடுத்தருளிய மாசிலாமணியீசரது இனிய திருவருளினல், அச்சிறப்பருள் பூதம் - அவர் விரும்பிய அப்பொருட் சிறப்பை அருளும்படி ஓர் சிவபூதமானது, முன் விரைந்து பசும்பொன் ஆயிரக்கிழி ஒன்று அகன்பீடத்து உச்சிவைத் தது - பிள்ளையார் முன்னே விரைந்து வந்து பசிய ஆயிரம்பொன் முடிந்த முடிப்பொன்றை இடமகன்ற பலிபீடத் துச்சியின்மேல் வைத்தது, எ - று.

வி-ரை. கிழி - முடிப்பு. (கஅ)

ஆலமேயமுதமாகவுண்டுவானவர்க்களித்துக்
காலனைமார்க்கண்டற்காக்காய்ந்தனையடியேபற்கின்று
ஞாலநின்புகழேயாகவேண்டுநான்மறைகளேத்துஞ்
சீலமேயாலவாயிற்சிவபெருமானேயென்றூர்.

ப-ரை. ஆலமே அமுதமாக உண்டு வானவர்க்கு அளித்து - ஆலாகலத்தையே திருவமுதாகக்கொண்டு தேவர்களுக்கு அமுதத்

தைக் கொடுத்தருளி, காலனை மார்க்கண்டற்கு ஆக காய்ந்தனை - யமனை மார்க்கண்டேயர்பொருட்டு உதைத்துக் கோபித்தருளினை, அடியேற்கு இன்று ஞாலம் நின்புகழேயாக வேண்டும் - அடியே னுக்கு இப்பொழுது நிலவுலகம் நின் புகழேயாகப் புறச்சமயம் நீங்கி நிலவுதல் வேண்டும், நான்மறைகள் ஏத்தும் சீலமே ஆலவாயின் சிவபெருமானே என்றார் - நான்கு வேதங்களுந் துதிக்கும் விசேஷ குணங்களையுடையவரே திருவாலவாயின்கண் ணெழுந்தளிய சிவ பெருமானே யென்றுங் கூறியருளினார், எ - று.

வி-ரை. ஆலாகலம் - பாற்கடலிற் றோன்றிய விடம். (கசூ)

கைகளுந்தலைமீதேறக்கண்ணிலானந்தவெள்ள
மெய்யெலாம்பொழியவேதமுதல்வரைப்பணிந்துபோற்றி
யையனேயடியனேனையஞ்சலென்றருளவல்ல
மெய்யனேயென்றுவீடலாலவாய்விளம்பலுற்றார்.

ப-ரை. கைகளும் தலைமீது ஏற - தமது திருக்கரங்களுஞ் சிர சின்மேற்குவிய, கண்ணில் ஆனந்த வெள்ளம் மெய்யெலாம் பொ ழிய - கண்களினின்று சொரியு மானந்த வெள்ளமானது தமது திரு மேனி முழுதும் பொழிய, வேதமுதல்வரை பணிந்து போற்றி - நான்கு வேதங்களுக்கு முதல்வராகிய சிவபெருமானை வணங்கித் துதித்து, ஐயனே அடியனேனை அஞ்சலென்று அருளவல்ல மெய்ய னே என்று - ஐயனே அடியேனை யஞ்சாதிருவென்று அருளிச்செய்ய வல்ல மெய்ம்மையை யுடையவரே என்று, வீடலாலவாய் விளம்ப லுற்றார் - "வீடலாலவாய்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளி னார், எ - று. (உ0)

வாசத்திருமஞ்சனப்பள்ளித்தாமஞ்சாந்தமணித்தூபந்
தேசிற்பெருகுஞ்செழுந்தீபமுதலாயினவுந்திருவமுது
மீசர்க்கேற்றபரிசினலருச்சித்தருளவெந்நாளும் [நார்.
பூசைக்கமர்ந்தபெருங்கூத்தர்பொற்பார்சிலம்பினொலியளித்

ப-ரை. வாசத்திருமஞ்சனம் - மணம் ஊட்டிய திருமஞ்சன மும், பள்ளித்தாமம் சாந்தம் மணித்தூபம் - திருமாலையும் சந்தன மும் செவ்விய தூபமும், தேசின் பெருகும் செழுந்தீப முதலாயின வும் - ஒளிவிட்டு விளங்கும் செழித்த தீபமும் முதலிய உபகரணங் களும், திருவமுதும் - நிவேதனமும் (கொண்டு), ஈசர்க்கு ஏற்ற பரி சினால் அருச்சித்தருள - சிவபெருமானுக்கு இயைந்த சிவாகம விதிப் படி தினமும் பூசித்துவர, பூசைக்கு அமர்ந்த பெருங்கூத்தர் - அந்

நாயனார் பூசைக்கு விருப்பங்கொண்ட நடேசப்பெருமான், பொற்பு ஆர் சிலம்பின் ஒலி எந்நாளும் அளித்தார் - அழகு மிக்க சிலம்பின் ஒலியைத் தினமும் (பரிசிலாக) அளித்தார், எ - று.

வி-ரை. மணம் - திருமஞ்சனப்புல், வெட்டிவேர் முதலியவற்றின் மணம். (உச)

மறவாமையானமைத்தமனக்கோயிலுள்ளிருத்தி
யுறவாதிதனையுணருமொளிவிளக்குச்சுடரேற்றி
யிறவாதவானந்தமெனுந்திருமஞ்சனமாட்டி
யறவாணர்க்கன்பென்னுமமுதமைத்தர்ச்சனைசெய்வார்.

ப-ரை. மறவாமையான் அமைத்த - இடையறாத்தியானத்தாலியற்றிய, மனக்கோயிலுள் இருத்தி - மனமென்னும் ஆலயத்தில் சிவபிரானை வதிவித்து, ஆதிதனை உற உணரும் ஒளிவிளக்குச்சுடர் ஏற்றி - அப்பெருமானை மிகவும் உணர்தற்கேதுவாகிய ஞானமென்னும் தீபவொளியை ஏற்றி, இறவாத ஆனந்தமென்னும் திருமஞ்சனம் ஆட்டி - அழிவில்லாத ஆனந்தமென்னும் திருமஞ்சனத்தால் அபிஷேகித்து, அறவாணர்க்கு - அறத்தின்கண்ணே வாழ்பவராகிய அக்கடவுளுக்கு, அன்பென்னும் அமுது அமைத்து அர்ச்சனை செய்வார்-அன்பென்னும் திருவமுதை அமைத்துப் பூசிப்பார், எ-று. (உஉ)

வெள்ளிமால்வரைக்கயிலையில்வீற்றிருந்தருளித்
துள்ளுவார்புனல்வேணியாரருள்செயத்தொழுது
தெள்ளுவாய்மையினாகமத்திறனெலாந்தெரிய
வுள்ளவாறுகேட்டருளினாலுலகையாளுடையாள்.

ப-ரை. மால் வெள்ளி வரை கயிலையில் வீற்றிருந்தருளி-பெருமைதங்கிய வெள்ளிமலையாகிய திருக்கயிலையில் வீற்றிருந்து, துள்ளுவார்புனல் வேணியார் அருள்செய தொழுது - ததும்புகின்ற மிக்க கங்கைநீர் நிறைந்த சடைமுடியையுடைய சிவபிரான் அருளிச்செய்ய வணங்கி, தெள்ளுவாய்மையின் ஆகமத்திறன் எலாம் தெரிய-தெளிந்த வாய்மையோடு கூடிய ஆகமங்களை யெல்லாம் தெரியும்படி, உள்ளவாறு கேட்டருளினாள் உலகை ஆளுடையாள்-உள்ளபடி கேட்டறிந்தாள் உலகத்தை யாளுகின்ற மாதாவாகிய உமாதேவியார், எ - று.

வி-ரை. ஆகமம் வேதசாரமாதலால் 'தெள்ளுமாகமம்' என்றார். உபாகமங்களையுந் தழுவிக்கோடற்கு 'ஆகமத்திறனெலாம்' என்றார். (உ௩)

எண்ணிலாகமமியம்பியவிறைவர்தாம்விரும்பு
முண்மையாவதுபூசனையெனவுரைத்தருள
வண்ணலார்தனையர்ச்சனைபுரியவாதரித்தாள்
பெண்ணினல்லவளாயினபெருந்தவக்கொழுந்து.

ப-ரை. எண் இல் ஆகமம் இயம்பிய இறைவர்-(அக்காலத்துப் பிராட்டியார்பொருட்டு) அளவில்லாத ஆகமங்களை அருளிச்செய்த சிவபிரானர், தாம் விரும்பும் உண்மையாவது பூசனை என உரைத் தருள - அவ்வாகமசாரமாய்த் தாம் விரும்பத்தக்க உண்மை நெறியாவது அருச்சனையே யென்று அருளிச்செய்ய (அதைத் திருவுள்ளத் தடைத்து), அண்ணலார்தமை அர்ச்சனை புரிய ஆதரித்தாள் - சிவபிரானைப் பூசைசெய்தற்கு விருப்பமுற்றாள், பெண்ணின் நல்லவளாயின பெருந்தவக்கொழுந்து - தெய்வமாதர்களுள் உயர்ந்தவளாகிய பெரிய தவத்துக்குக் கொழுந்துபோல்வாள், எ - று. (உச)

நங்கையுண்ணிறைகாதலைநோக்கி
நாயகன்றிருவுள்ளத்துமகிழ்ந்தே
யங்கணெய்தியமுறுவலுந்தோன்ற
வடுத்ததென்கொனின்பாலெனவினவ
விங்குநாதநீமொழிந்தவாகமத்தி
னியல்பினாலுனையர்ச்சனைபுரியப்
பொங்குகின்றதென்னுசையென்றிறைஞ்சிப்
போகமார்த்தபூண்முலையினுள்போற்ற.

ப-ரை. நங்கை உள் நிறை காதலை நோக்கி-பிராட்டியாரது திரு உள்ளத்தில் நிறைந்த விருப்பத்தைப் பார்த்து, நாயகன் திருஉள்ளத்து மகிழ்ந்து - சிவபிரான் திருவுள்ளத்து மகிழ்கூர்ந்து, அங்கண் எய்திய முறுவலும் தோன்ற - அச்சமயத்துதித்த புன்முறுவலும் விளங்க, அடுத்தது என்கொல் நின்பால் என வினவ - உன்னிடத்து நிகழ்ந்த விருப்பம் யாதென்று வினவ, இங்கு நாத நீ ஆகமத்தின் இயல்பினல் - இப்பொழுது சுவாமியே நீர் அருளிச்செய்த திவ்வியாகமங்களில் விதித்த முறைமையால், உனை அர்ச்சனை புரிய - உம்மைப்பூசிக்க, பொங்குகின்றது என் ஆசை என்று இறைஞ்சி-என்னுசை மேற்கொண்டதென்று வணங்கி, போகம் ஆர்த்த பூண் முலையினுள் போற்ற-போகம் அமைந்த ஆபரணங்களை யணிந்த தனங்களையுடைய உமாதேவியார் துதிக்க, எ - று.

வி-ரை. நங்கை-மங்கள குண பூர்த்தியுள்ளவள். முறுவல்-புன் சிரிப்பு. (உரு)

நெஞ்சமீசனைக்காண்பதேவிரும்பி
நிரந்தரந்திருவாக்கினினிகழ்வ
தஞ்செழுத்துமேயாகவாளுடைய
வம்மைசெம்மலர்க்கைகுவித்தருளித்
தஞ்சமாகியவருந்தவம்புரியத்
தரிப்பரேயவடனிப்பெருங்கணவர்
வஞ்சநீக்கியமாவின்மூலத்தில்
வந்துதோன்றினார்மலைமகள்காண.

ப-ரை. ஆளுடைய அம்மை - எம்மை யாட்கொள்ளும் இயல் பினையுடைய பார்வதியார், நெஞ்சம் ஈசனை காண்பதே விரும்பி - தமதுள்ளத்தில் சிவபிரானைக் காண்பதே கருத்தாக விருப்பமுற்று, நிரந்தரம் திருவாக்கினில் நிகழ்வது அஞ்செழுத்துமேயாக - எப் பொழுதும் திருவாயில் உச்சரிக்கப்படுவது திருவைந்தெழுத்தே யாக, செம்மலர் கைகுவித்தருளி - சிவந்த தாமரை மலர்போலும் திருக்கரங்களைக் கூப்பித்தொழுது, தஞ்சமாகிய அருந்தவம் புரிய - தமக்குப் பற்றுக்கோடாகிய அரியதவத்தைச்செய்ய, தரிப்பரேஅவள் தனி பெருங்கணவர் - அப்பிராட்டியாரது ஒப்பற்ற நாயகராகிய சிவபிரான் தரிக்கமாட்டார், வஞ்சம் நீக்கி அ மாவின் மூலத்தில் - காட்சிகொடாதிருந்த மறைப்பை நீக்கி அந்த மாமரத்தின் அடியில், வந்து தோன்றினார் மலைமகள்காண-வந்து சிவலிங்கரூபமாய் வெளிப் பட்டார் உமாதேவியார் காணும்படி, எ-று.

வி-ரை. தரிப்பரே என்பதில் ஏகாரம் எதிர்மறை. (உசு)

கொய்தபன்மலர்கம்பைமாநதிபிற்
குலவுமஞ்சனநிலவுமெய்ப்பூச்சு
செய்தருங்கொழுந்தீபதூபங்க
ணிறைந்தசிந்தையினீடியவன்பின்
மெய்தரும்படிவேண்டினவெல்லாம்
வேண்டும்போதினிலுதவமெய்ப்பூசை
யெய்தவாகமவிதியெல்லாஞ்செய்தா
ளுயிர்கள்யாவையுமீன்றவெம்பிராட்டி.

ப-ரை. கொய்த பன்மலர் - பறித்த பலசாதி மலர்களையும், கம்பைமாநதியினில் குலவும் மஞ்சனம் - கம்பையாற்றுநீரில் விளக்க

மான திருமஞ்சனத்தையும், நிலவு மெய்ப்பூச்சு - விளங்குகின்ற மேனியில் தரிக்கும் சந்தனக்காப்பையும், நெய்தரும் கொழும் தீபதூபங்கள் - நறுநெய்யாலமைத்த கொழுவிய தீபதூபங்களையும், நிறைந்த சிந்தையின் நீடிய அன்பின் - நிறைவடைந்த மனதிலுதித்த அன்பினுல், மெய்தரும்படி வேண்டின எல்லாம் - மெய்மையான பூசைப்படித்தரங்களுக்கு வேண்டிய உபகரணங்களை யெல்லாம், வேண்டும்போதினில் உதவ - பிராட்டியார் வேண்டியபொழுது ஏவலாளர்கள் கொடுக்க, மெய்ப்பூசை எய்த ஆசமவிதி எலாம் செய்தாள் - மெய்மையான பூசையை ஆகமத்திற் கூறும் விதிகளை வழுவாமல் முற்றச்செய்தாள், உயிர்கள் யாவையும் ஈன்ற எம்பிராட்டி - எல்லா உயிர்களையும் பெற்ற மாதாவாகிய எமது பிராட்டியார், எ-று.

கரந்தரும்பயனிதுவெனவுணர்ந்து
கம்பமேவியவும்பர்நாயகர்பா
னிரந்தகாதல்செயுள்ளத்தளாகி
நீடுநன்மைகளியாவையும்பெருக
வரந்தரும்பொருளாமலைவல்லி
மாறிலாவகைமலர்ந்தபேரன்பாற்
சிரம்பணித்தெழுபூசைநாடோறுந்
திருவுளங்கொளப்பெருகியதன்றே.

ப-ரை. கரம் தரும் பயன் இது என உணர்ந்து - கரத்தால் வரும் இப்பூசை செய்யும்பேறே என்றறிந்து, கம்பம் மேவிய உம்பர் நாயகர்பால் - திருவேகம்பத்தில் வீற்றிருக்கும் தேவர்க்கதிபராகிய சிவபிரானிடத்து, நிரந்த காதல்செய் உள்ளத்தளாகி - பரந்த விருப்பத்தைச் செய்கின்ற உள்ளமுடையவளாய், நீடு நன்மைகள் யாவையும் பெருக - உயர்ந்த நன்மைகள் எல்லாம் ஓங்க, வரம் தரும் பொருளாம் மலைவல்லி - யாவர்க்கும் வரத்தைக் கொடுக்கும் கருணை வடிவாகிய உமதேவியார், மாறு இலா வகை மலர்ந்த பேரன்பால்-மாறுபாடில்லாமல் விகசித்த பேரன்பினுல், சிரம்பணித்து எழு பூசை நாடோறும் - நெடுங்காலம் செய்யப்பட்டு வராநின்ற பூசனையானது நாள்தோறும், திருவுளம் கொள பெருகியது - சிவபிரான் திருவுள்ளத்துக்கும் பொருந்தும்படி விருத்தியாயிற்று, எ-று. (உஅ)

வேதநெறிதழைத்தோங்கமிகுசைவத்துறைவிளங்கப்
பூதபரம்பரைபொலியப்புனிதவாய்மலர்ந்தழுத
சீதவளவயற்புகலித்திருஞானசம்பந்தர்
பாதமலர்தலைக்கொண்டுதிருத்தொண்டுபரவுவாம்.

ப-ரை. வேத நெறி தழைத்து ஓங்க - வைதிக மார்க்கந் தழைத்து எந்நாளும் நிலைபெறவும், மிகு சைவத்துறை விளங்க - மேன்மைமிக்க சைவமார்க்கம் நிலைபெறவும், பூதபரம்பரை பொலிய-பரிசுத்தமாகிய அவ்வைதிக சைவபரம்பரை நிலைபெற்றோங்கவும், புனிதவாய் மலர்ந்தழுத - (சிவஞானங்கமழும்) பரிசுத்தமான திருவாய் மலர்ந்தழுத, சீதவள வயல் புகலி திருஞானசம்பந்தர் - குளிர்ந்த நீர்வளமிக்க வயல்சூழ்ந்த சீகாழியில் அவதரித்த ஆளுடையபிள்ளையாரது, பாதமலர் தலைக்கொண்டு-திருவடித் தாமரைகளைச் சிரத்தின்மேற்கொண்டு, திருத்தொண்டு பரவுவாம் - சிவபெருமானருள் வழிப்பட்டொழுகிய அவரது திருத்தொண்டின் நிலைமையை (யாம்) வாழ்த்துவாம், எ-று.

வி-ரை. யாம் - தோன்றா எழுவாய். பூதம் - பரிசுத்தம். (உக)

வேதநான்முகன்மால்புரந்தரன்முதலாம்
விண்ணவரெண்ணிலார்மற்றுங்
காதலான்மிடைந்தமுதற்பெருந்தடையாங்
கதிர்மணிக்கோபுரத்துள்ளான்
பூதவேதாளப்பெருங்கணநாதர்
போற்றிடப்பொதுவினின்றாடு
நாதனாரதிதேவனார்கோயி
னாயகனந்தியெம்பெருமான்.

ப-ரை. வேத நான்முகன் மால் புரந்தரன் முதலாம் - வேதங்களையுணர்ந்த பிரமனும் திருமாலும் இந்திரனும் முதலிய, விண்ணவர் எண்ணிலார் மற்றும் - எண்ணிறந்த தேவர்களும் தேவசாதியர்களும், காதலால் மிடைந்த முதற் பெருந்தடையாம் - விருப்புடன் நெருங்கிய பெரிய முதற்றடையாகிய, கதிர் மணி கோபுரத்துள்ளான் - ஒளிபொருந்திய அழகிய திருக்கோபுரத்தின்கண் உள்ளார், (அவர் யாரெனில்) பூத வேதாள பெருங்கணநாதர் போற்றிட-பூத வேதாளங்கள் என்னும் பெரிய சிவகணத் தலைவர்கள் துதிக்க, பொதுவில் நின்றாடும் - கனகசபையின்கண் நின்று ஆனந்த நிருத்தஞ் செய்கின்ற, நாதனார் ஆதி தேவனார் கோயில் நாயகன் நந்தியெம்பெருமான் - தலைவரும் முதற்கடவுளும் ஆகிய சிவபிரானது திருக்கோயிலைக் காக்குந் தலைமைபூண்ட திருநந்திதேவர், எ-று. ()

நெற்றியிற்கண்ணர்நாற்பெருந்தோளர்
நீறணிமேனியரநேகர்

பெற்றமேல்கொண்டதம்பிரானடியார்
பிஞ்ஞகன்றன்னருள்பெறுவார்
மற்றவர்க்கெல்லாந்தலைமையாம்பணியு
மலர்க்கையிற்சுரிகையும்பிரம்புங்
கற்றைவார்சடையானருளினாற்பெற்றான்
காப்பதக்கயிலைமால்வரைதான்.

ப-ரை. நெற்றியில் கண்ணர் நால்பெரும் தோளர் - நெற்றிக் கண்ணை யுடையவர்களும் நான்கு பெரிய திருப்புயங்களை யுடையவர்களும், நீறு அணி மேனியர் அனேகர் - விபூதியையணிந்த திருமேனியை யுடையவர்களுமாய் எண்ணிறந்த, பெற்றம் மேல் கொண்ட தம்பிரான் அடியார் - இடபத்தை வாகனமாகக்கொண்ட சிவபிரானடியவர்களும், பிஞ்ஞகன் தன் அருள் பெறுவார் - அச்சிவபிரானது திருவருளைப் பெற்றவர்களும் ஆகிய, அவர்க்கு எல்லாம் தலைமையாம் பணியும் - அவர்கட்கெல்லாம் முதன்மையாய் இருக்கும் பணிவிடையையும், மலர் கையில் சுரிகையும் பிரம்பும் - செந்தாமரை மலர்போலுந் திருக்கரத்தில் உடைவாளையும் பிரம்பையும், கற்றைவார் சடையான் அருளினால் பெற்றான் - கூட்டமாய் நீண்ட சடைமுடியையுடைய சிவபிரான் திருவருளினால் பெற்ற அத்திருநந்திதேவரால், காப்பது அ கைலை மால்வரைதான் - காக்கப்படுவது பெருமைபொருந்திய அத்திருக்கைலாயமலை, எ - று.

வி-ரை. மற்று - அசை. பெற்றான் - முற்றெச்சம். (௩௧)

மாமறைவிதிவழாமன்மணத்துறைக்கடன்களாற்றித்
தூமறைமூதூர்க்கங்குன்மங்கலந்துவன்றியார்ப்பத்
தேமருதொடையன்மார்பன்றிருமணக்கோலங்காணக்
காமுறுமனத்தான்போலக்கதிரவனுதயஞ்செய்தான்.

ப-ரை. மா மறை விதி வழாமல் - பெருமையினையுடைய வேத விதி தவறாமல், மணத்துறை கடன்கள் ஆற்றி - இவ்வாறு விவாகத்திற்குரிய சமாவர்த்தனம் இரட்சாபந்தனம் முதலிய தொழில்களைச் செய்து, தூ மறை மூதூர் - தூய்மையான வேதங்களொலிக்கும் பழமையினையுடைய அத்திருநாவலூரில், கங்குல் மங்கலம் துவன்றி யார்ப்ப - முதனாளிரவில் மங்கலகரமான வாத்தியங்கள் சேர்ந்து ஆரவாரிக்க, தேன் மரு தொடையல் மார்பன் - தேன்பொருந்திய மாலையையணிந்த மார்பையுடைய நம்பியாரூரரது, திருமணக்

கோலம்காண - திருமணக்கோலத்தைத் தான்காணும்படி, காமுறு மனத்தான்போல - ஆசைகொண்ட மனமுடையவன்போல, கதிரவன் உதயஞ்செய்தான் - சூரியன் உதித்தான், எ - று.

வி-ரை. சமாவர்த்தனம் முதலியன முதனாளிரவிற் செய்தலில் 'கேங்குன் மங்கலந்துவன்றி யார்ப்ப' என்றும், அக்காலத்தில் வேதங்கள் மிக ஓதுதலில் 'தூமறை மூதூர்' என்றுங் கூறினார். (௩௨)

அண்டர்பிரானுந்தொண்டர்தமக்கதிபனாக்கியனைத்துநா
முண்டகலமுமுடுப்பனவுஞ்சூடுவனவுமுனக்காகச் [குத்
சண்டீசனுமாம்பதந்தந்தோமென்றங்கவர்பொற்றடமுடிக்
றுண்டமதிசேர்சடைக்கொன்றைமாலைவாங்கிச்சூட்டினார்.

ப-ரை. அண்டர்பிரானும் - சிவபிரானும், தொண்டர் தமக்கு அதிபன் ஆக்கி - திருத்தொண்டர்களுக்கு அவரைத் தலைவராகச் செய்து, நாம் உண்ட கலமும் உடுப்பனவும்-நாம் உண்ணப்பட்ட பரிகலமும் தரிக்கப்பட்ட பரிவட்டமும், சூடுவனவும் அனைத்தும் உனக்காக - சூடப்பட்ட மாலை முதலியனவும் ஆகிய எல்லாம் உனக்காகும்படி, சண்டீசனுமாம் பதம் தந்தோம் என்று - சண்டீசர் பதத்தையும் உனக்குக் கொடுத்தோமென்று கூறி, அங்கு அவர் பொன் தடமுடிக்கு - அவ்விசாரசருமரது அழகிய பெருமையினை யுடைத்தாகிய திருமுடியின்மேல், துண்டமதி சேர் சடை-பிளவாகிய இளம் பிறை தவழும் சடையின்கண்ணுள்ள, கொன்றைமாலை வாங்கி சூட்டினார்-கொன்றைமாலையை எடுத்துச் சூட்டியருளினார், எ - று.

வி-ரை. அனைத்தும் என்றதனால் சந்தனம் தாம்பூலம் முதலியனவுங் கொள்க. சண்டீசனும் என்ற உம்மை உயர்வுசிறப்பு. (௩௩)

கொண்டுவந்துமனைப்புகுந்துகுலாவுபாதம்விளக்கியே
மண்டுகாதலினாதனத்திடைவைத்தருச்சனைசெய்தபி
னுண்டிநாலுவிதத்திலாறுசுவைத்திறத்தினிலொப்பிலா
வண்டர்நாயகர்தொண்டரிச்சையிலமுதுசெய்யவளித்துளார்.

ப-ரை. கொண்டு வந்து மனை புகுந்து - இவ்வாறு சிவனடியார்களை உபசரித்து அழைத்துக்கொண்டுவந்து தாமும் அவரோடு மனையிற்புகுந்து, குலாவு பாதம் விளக்கி-அவருடைய விளக்கமாகிய திருவடிகளை நீராற்கழுவி, மண்டு காதலின் ஆதனத்திடை வைத்து - நிறைந்த பெருவிருப்போடு அவர்களைப் பீடத்து எழுந்தருளும்படி

செய்வித்து, அருச்சனை செய்தபின் - பாதபூசை செய்தபின்பு, உண்டி நாலு விதத்தில் - உணவுகளை நான்கு வகையினால், ஆறு சுவை திறத்தினில் - அறுசுவையோடும், ஒப்பிலா அண்டர் நாயகர் தொண்டர் - ஒப்பில்லாத தேவர்களுக்கு முதல்வராகிய சிவபிரானது அடியார், இச்சையில் அமுது செய்ய அளித்துளார் - விருப்போடு அமுது செய்யும்படி நாள்தோறும் கொடுத்தவர், எ - று.

வி-ரை. ஏ-அசை. உண்டி நான்குவகை என்றது: கக்கல், பருகல், உண்டல், தின்றல் என்பவற்றை. ஆறுசுவை என்றது: கைப்பு, புளிப்பு, இனிப்பு, துவர்ப்பு, கார்ப்பு, உவர்ப்பு என்பவற்றை. (௩௪)

மண்ணினிற்பிறந்தார்பெறும்பயன்மதிசூடு
மண்ணலாரடியார்தமையமுதுசெய்வித்தல்
கண்ணினாலவர்நல்விழாப்பொலிவுகண்டார்த
லுண்மையாமெனிலுலகர்முன்வருகெனவுரைப்பார்.

ப-ரை. மண்ணினில் பிறந்தார் பெறும் பயன் - நிலவுலகத்திற் பிறந்தவர்கள் அப்பிறப்பாற் பெறும்பயன், மதி சூடும் அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல் - இளம்பிறையைச் சூடிய சிவபெருமான் திருவடியாரைத் திருவமுது செய்வித்தலும், கண்ணினால் அவர் நல் விழா பொலிவு கண்டு ஆர்தல் - கண்ணாலச்சிவபெருமானது நல்ல திருவிழாப்பொலிவைத் தரிசித்துக் களிப்படைதலும் (எனவிவ்விரண்டுமே), உண்மையாம் எனில் உலகர் முன் வருக என உரைப்பார் - உண்மைப் பொருளாமெனில் இவ்வுலகத்தார் முன்பு வரக்கடவாயென் றுரைப்பாராயினர், எ - று. (௩௫)

அல்லார்கண்டத்தண்டர்பிரா
  னருளாற்பெற்றபடிக்காசு
பல்லாறியன்றவளம்பெருகப்
  பரமனடியாரானார்க
ளெல்லாமெய்தியுண்கவென
  விரண்டுபொழுதும்பறைநிகழ்த்திச்
சொல்லாற்சாற்றிச்சோறிட்டார்துயர்
  கூர்வறுமைதொலைத்திட்டார்.

ப-ரை. அல்லார் கண்டத்து அண்டர்பிரான் அருளால்-இருள் போலுங் கருநிறந்தங்கிய கண்டத்தையுடைய சிவபிரான் திருவருளி

ளுல், பெற்ற படிக்காசு - தாம்பெற்ற படிக்காசிளுல், பல்லாறு இயன்ற வளம் பெருக-பலவாற்ருனும் இயைந்த வளங்களுண்டாக, பரமன் அடியார் ஆளுர்கள் எல்லாம் எய்தி உண்க என-சிவனடியார்கள் யாவரும் இங்குவந்து உண்ணக்கடவீரென்று, இரண்டு பொழுதும் பறை நிகழ்த்தி - இரண்டுபொழுதும் பறையடிப்பித்து, சொல்லால் சாற்றி - சொல்லாலும் அழைத்து, சோறு இட்டார்-அமுதிட்டார்களாய், துயர் கூர் வறுமை தொலைத்திட்டார் - துயரம் மீக்கூர்தற்கேதுவான அடியார்கள் வறுமையை நீக்கிளுர்கள், எ - று.

வி-ரை. அண்டர்பிரான் - தேவர்களுக்குத் தலைவன். சோறிட்டார் - முற்றெச்சம். (நடு)

தனிவெள்விடைமேனெடுவிசும்பிற்றலைவர்பூதகணநாதர்
முனிவரமரர்விஞ்சையர்கண்முதலாயுளளோர்போற்றிசைப்ப
வினியகறியுந்திருவமுதுமமைத்தார்காணவெழுந்தருளிப் [ர்.
பனிவெண்டிங்கண்முடிதுளங்கப்பரந்தகருணைநோக்களித்தா

ப-ரை. நெடு விசும்பில் தலைவர் - பரமாகாயத்திலுள்ள இறைவர், பூதகணநாதர் - பூதகணநாதர்களும், முனிவர் - முனிவர்களும், அமரர் - தேவர்களும், விஞ்சையர்கள் - வித்தியாதரர்களும், முதலாயுள்ளோர் - முதலாக உள்ளவர்கள், போற்றிசைப்ப - டோற்றிசெய்ய, இனிய கறியும் திரு அமுதும் - இனிதாகிய கறிகளும் திருவமுதும், அமைத்தார் - அமைத்து வைத்தனர், காண - இவைகாணும்படி, தனி - ஒப்பற்ற, வெள்விடைமேல் - வெள்ளிய இடபவாகனத்தின் மீது, எழுந்தருளி—, பனி - குளிர்ச்சிபொருந்திய, வெள் - வெண்மையாகிய, திங்கள் - இளம்பிறையை யணிந்த, முடி துளங்க - திருமுடி அசைய, பரந்த - பரவிய, கருணைநோக்கு அளித்தார் - கிருபாநோக்கம் செய்தார், எ - று.

வி-ரை. நெடுவிசும்பிற்றலைவர் விடைமேல் எழுந்தருளி என இயையும். நெடுவிசும்பில் தலைவர் என்றது சிவபிரானை. (நசு)

பெரியபுராணச் செய்யுட்டிரட்டு

மூலமும் உரையும்

முற்றுப்பெற்றது.

சிவமயம்.

திருவிசைப்பா

# செய்யுள் முதற்குறிப்பகராதி.

திருவிசைப்பா செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

## திருப்பல்லாண்டு செய்யுள் முதற்குறிப்பகராதி.



திருப்பல்லாண்டு செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

## பெரியபுராணச் செய்யுட்டிரட்டு செய்யுள் முதற்குறிப்பகராதி.



பெரியபுராணச் செய்யுட்டிரட்டு செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.